# சங்க இலக்கியக் கட்டுரைகள்

## – கருத்தரங்கம் –



தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

# முன் குறிப்பு

ஒவ்வோர் ஆய்வாளரும் எந்த ஆய்வுப் பணியை மேற்கொண்டுள்ளார் என்று தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்குத் தெரிவித்து, பணி துவங்கிய ஒன்றிரண்டு திங்களுக்குள் அந்தத் துறையில் உழைத்துள்ள அறிஞர் களை அழைத்து, கருத்தரங்கொன்று நடத்தி அவர்கள் ஆய்வுக் கருத்தை அறியும் முறையைப் பல்கலைக் கழகம் மேற்கொண்டு வருகிறது.

முனைவர் இரா. சாரங்கபாணி தமிழ்த்துறையில் பொறுப்பேற்றதும் சங்க இலக்கியக் களஞ்சியம் தொகுக்கும் பணியை மேற்கொண்டார். பணி துவங்கிய ஒரு சில திங்கள் கழிந்ததும் சங்க இலக்கியம் பற்றி 23—9—'83 முதல் 25—9—'83 முடிய மூன்று நாள் கருத்தரங்கொன்றைத் தமிழ் இலக்கியத்துறை கூட்டியது.

பல தலைப்புக்களில் செய்தி திரட்டும் நோக்கோடு இந்தக் கருத்தரங்கு கூடியது. கட்டுரைகளிற் பல அந்த நோக்கிலும், சில சற்றுப் புறம் போகவும் அமைந்தன. ஆனால், பேராளர்களின் கருத்துப் பரிமாற்றம் கட்டு ரைகள் கூறாத செய்திகள் பலவற்றைத் தெளிவாக்கிய ஒலி நாடாவில் இருந்து பெயர்த்தெழுதப்பட்டு இங்கு அச்சாகியுள்ளன. சில ஒலி நாடாவில் பதியாதும் போய்விட்டன. அவை இடம்பெறவில்லை. அதற்கு வருந்துகிறோம்.

ஆய்வு, தனி ஆய்வாளரின் முனைப்பால், உழைப் பால் உருவாயினும் முன்னர் நடந்த முயற்சிகளைக் கணக்கிலெடுத்து நிகழ் காலத்தில் பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள் முதலியவற்றில் ஆய்வு செய்துவருவோரின் கருத்துக்களை அறிந்து முழுமைபெற வேண்டும். இவ் வெண்ணத்துடன் தமிழ்ப் பல்கலைக் கழகம் இந்த முயற்சியை மேற்கொண்டது. பேராளர்களிற் சிலரு டைய கட்டுரைகளும், பலருடைய வினாக்களும், மறு மொழிகளும் சுவைபட அமைந்துள்ளதைப் படிப்போர் உணரத் தவறமாட்டார்கள்.

கருத்தரங்க அறிக்கையில் முதலாவது சங்க இலக்கியம் அச்சுருப்பெற்றுள்ளது. தமிழ் ஆய்வுலகம் இதனை ஊக்குவிக்க வேண்டுகிறோம்.

பதிப்புத் துறை.

# பொருளடக்கம்

## நான்காம் அமர்வு

தலைவர் : டாக்டர் இரா. சாரங்கபாணி

7. சங்க இலக்கியத்தில் பொருளியல் நோக்கு
டாக்டர் நா. பாலுசாமி

8. சங்க இலக்கியத்தில் திணை - துறை அமைப்பில் எழும்.ஒரு சிக்கல்
திருமதி குளோறியா சுந்தரமதி

## ஐந்தாம் அமர்வு

தலைவர் : டாக்டர் நா. பாலுசாமி

9. சங்க இலக்கியத்தில் சமய நோக்கு
பேரா. க. வெள்ளைவாரணர்

10. சங்க இலக்கியத்தில் வரலாற்று நோக்கு
டாக்டர் அ. கிருட்டிணசாமி

## ஆறாம் அமர்வு

தலைவர் : டாக்டர் அ. கிருட்டிணசாமி

11. சங்க இலக்கியத்தில் நாடகக் கூறு
டாக்டர் கு. திருமேனி

12. சங்க இலக்கியத்தில் திருமால் நெறி
டாக்டர் தெ. ஞானசுந்தரம்

## சங்க இலக்கியக் கருத்தரங்கு

# தொடக்கவுரை

**வ. அய். சுப்பிரமணியம்**

தொகையும் பாட்டும் சிறப்பாகத் தமிழ்மொழி ஆய்விற்கு-பொதுவாகத் திராவிட மொழியாய்வுக்கு - எவ்வளவு அடிப்படையானவை என்பதை அறிஞர் பலரும் கூறியிருக்கின்றனர். இங்கு நடந்த கருத்தரங்குகளிலும் இந்தக் கருத்து வலியுறுத்தப் பட்டுவருகிறது.

இந்திய மொழிகளுள்ளே எழுத்துருவம் பெற்ற மிகப் பழமையான மொழிகள் சமஸ்கிருதமும் தமிழும் ஆகும்.

வேதமும் இவற்றைத் தொடர்ந்து உருவான வேதவழி நூல்களும் உ[illegible]ாவிய பெருமை பெறுதற்கு அறிஞர்கள் உருவாக்கிய பல அடிப்படை நூல்கள் காரணமாக அமைந்தன. அமெரிக்க நாட்டு மாரிஸ் புளூம் பீல்டு செய்த வேதிக் கண்கார்டன்சு, அந்நாட்டறிஞர் மூவர் செய்த வேதிக் வேரியன்ஸ், இரஷ்யாவிலிருந்து வெளியான பீட்டர்ஸ்பர்க் (இன்றைய லெனின் கிராடு) அகரவரிசை, பஞ்சாப் மாநிலத்தில் உள்ள ஒசியாப்பூரி லிருந்து வெளியான வேதச் சொல்லடைவு **Vedic Index** முதலியவை வேதப்படிப்பைத் திட்டமாக்குவதற்கும் நுட்பமாக்குவதற்கும் துணைநின்றன. வேதகால மாணவர்களின் பல தலைமுறைகளுக்கு அவை உதவி வருகின்றன.

தமிழ்ச் சங்க இலக்கியங்களுக்குக் கருவி நூல் உருவாக்கும் முயற்சி அண்மையில்தான் தொடங்கியிருக்கிறது. உ. வே. சாமிநாத ஐயர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் புறநானூற்றைப் பதிப்பித்து வெளியிட்டதும் தமிழ்ப் படிப்பில் ஒரு பெரும் திருப்பு மையம் ஏற்பட்டது. ஏதோ பண்படாத கலாசாரமாகத் தமிழ் - திராவிடம் கருதப்பட்ட நிலைமாறி உயரிய

நாகரிகத்தின் இருப்பிடமாக—தெளிவுகள்மூலம் விளக்கும் நிலை ஏற்பட்டது.

*1904*-ல் வி. கனகசபைப்பிள்ளை தமது **1800 ஆண்டுகளுக்கு முன்னர் தமிழர்** என்ற நூலில் தமிழ்ப் பண்பாட்டின் பெருமையை ஆங்கிலமொழியில் வெளியிட்டார். ஏனைய சங்க நூல்களையும் உ. வே. சாமிநாத ஐயர், சி. வை. தாமோதரம் பிள்ளை, இ. வை. அனந்தராமையர், கரந்தை அறிஞர்கள் முதலியவர்கள் வெளியிட்டனர். அவற்றை அடிப்படையாகக் கொண்டு பி. டி. சீனிவாச ஐயங்கார், சேஷ அய்யர், நீலகண்ட சாஸ்திரி போன்றவர்கள் வரலாற்றையும் பண்பாட்டுக் கூறுகளையும் மீட்டுரு அளித்தனர். பல ஆண்டுகள் வரை இந்தியாவின் பிற மாநிலங்களும் உலகத்தின் ஏனைய பாகங்களும் இந்தத் தெளிவுகளின் பெருமையை உணரவில்லை. ஈழமும் தமிழ்நாடும் மட்டும் முனைந்துநின்று ஆய்ந்தன. இவ்வாறு புறக்கணிக்கப்பட்டதற்குப் பல காரணங்களுண்டு.

பதினேழாம் நூற்றாண்டில் இராபர்ட் கிளைவ் தலைமையில் ஆங்கிலேயப் படை நிலத்தை உரிமையாக்கியது. சென்னையை அடுத்த பகுதியாகிய வேலூர்க்கோட்டையில் அவன் செய்த சாகசம் வரலாறு அறிந்ததே. ஆனால், ஆங்கிலேயக் கம்பெனி அரசு, தமிழ்மீது ஆர்வம் காட்டவில்லை. கிறித்துவ மத போதகர்கள் தமிழ்மொழிப் படிப்பில் ஆர்வம் காட்டினர். மதப் பிரசாரத்திற்காக இலக்கணமும் அகரவரிசைகளும் தொகுத்தனர். இந்திய மொழிகளில் வெள்ளைக்காரர் செய்த முதல் இலக்கணம் தமிழில்தான் என்பதை நாம் மறந்துவிடலாகாது. **(என்றிரிக் என்றிரிக்கஸ், தமிழ் இலக்கணம்;** *1561*. இதன் புதிய பதிப்பு ஜெர்மனியிலிருந்து இப்போது வெளியாகியிருக்கிறது, *1982*).

ஆங்கிலேய அலுவலர் எவரும் தமிழில் பற்றுக்கொண்டதாகச் சான்றில்லை. வலுவிழந்த மக்களைத் துன்புறுத்தும் முஸ்லீம் மன்னர்களை வெல்வதற்குக் கிளைவ் ஆங்கிலேயப் படையுடன் கல்கத்தா சென்றான். ஆங்கிலேயருக்குத் துணையாகத் தமிழ் நாட்டுப் படைகளும் பிறமாநிலப் படைகளும் கல்கத்தா சென்றன. முஸ்லீம் அரசர்கள் தோற்றனர். கல்கத்தா இந்தியாவின் தலைநகராக மாறியது. கல்வியறிவுள்ள பிராமணர்கள் தமிழ்நாட்டிலிருந்து கல்கத்தாவுக்குக் குடிபெயர்ந்தனர். தமிழ்ப்படை சிக்கந்தராபாத், பங்களூர் முதலிய பாளையங்களிலும் வடநாட்டி

லும் நிலைபெற்றன. தமிழர்களின் நாடு பெயர்ச்சிக்கு இதுவும் ஒரு காரணம்.

கிழக்கிந்தியக் கம்பெனி, சட்டத்தால் ஆளுமுறையைப் பின் பற்றியது. இந்தியர்களுக்கு உகந்த சட்டத்தை - இந்துச் சட்டத்தை உருவாக்கும் பொறுப்பு நீதிபதிகளுக்கும் வழக்கறிஞர்களுக்கும் ஏற்பட்டது. நீதிபதி வில்லியம் ஜோன்ஸ் கல்கத்தாவிலிருந்து இந்துக்களின் புனித மொழியான சமஸ்கிருதத்தைப் பயின்றார். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சமஸ்கிருதம், இலத்தீன், கிரேக்கம் முதலியவற்றின் ஒற்றுமையை அவர் கண்டார். இதனைக் கடிதம் மூலம் தெரிவிக்கவே, ஐரோப்பிய நாடுகளில் அறிவுப் புரட்சிக்கும் இலக்கிய ஆய்வுநெறி மாற்றத்திற்கும் இந்த எழுத்து அடிகோலியது.

இந்து மதம், இந்தியா முழுவதும் பரவியிருந்ததால் இந்து மத மொழியாகிய சமஸ்கிருதம் ஆங்கில அரசின் ஆதரவைப் பெற்றது. இந்தியா முழுவதிலும் வாழும் இந்துக்களுக்குரிய சட்டத்தைச் சமஸ்கிருத நூல்களின் அடிப்படையில் உருவாக்க முடியும் என்ற எண்ணம், கல்கத்தாவில் தலைநகர் இருந்ததால் வலுப்பெற்றது. தமிழ்ப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் இந்து மதச் சட்ட அமைப்பிற்கு ஆராயப்படவில்லை. பிரெஞ்சுப் பிரதேசமாகிய பாண்டிச்சேரியிலும் ஈழ நாட்டிலும் தேச வளமையைச் சொத்துரிமைச் சட்டம் உருவாக்கும்போது சிறிய அளவில் ஆய்ந்தனர். பழமையான இலக்கிய வளமுடைய தமிழ் உலக அறிஞர்களால் ஆயப்படாமல் ஒதுக்கப்பட்டது. சமஸ்கிருதத்திற்குக் கிடைத்த வாய்ப்புத் தமிழுக்குக் கிடைக்கவில்லை. 1950 வரை தமிழாய்வில் உலக அறிஞர்களின் பார்வை மிகச் சிறிய அளவில்தான் பதிந்தது. இதற்கு விலக்காகக் கிறித்துவப் பாதிரிமார்களின் தமிழ்ப் பணியைக் கூறலாம்.

தமிழ்மொழியின் தரமான ஆய்வு உருவாவதற்குத் தமிழறிஞர்களே முயன்று முன்னிற்க வேண்டும் என்பதை மறக்கலாகாது.

சங்க இலக்கியக் கருவூலத்தைப் பல கோணங்களில் ஆய்ந்து வெளியிடுவது அதற்கு முதற்படியாகும்.

கலைக்கூறுகளை அறிதற்கு மிகத் துணைசெய்யும் நூலாகப் பி. வி. காணே செய்த தர்ம சாஸ்திரத்தின் வரலாறு என்ற நூலை அறிஞர் உலகம் கூறும். 1930-ல் அதன் முதனூல்

வெளிவந்தது. அதன் துணைத் தலைப்பாகப் 'பழைய மத்திய காலத்து மதம் உரிமை தழுவிய சட்டங்கள்' என்று நகவளைவுக் குள் அவர் கொடுத்திருக்கிறார். ஆசிரியர் பி. வி. காணே, உயர்நீதிமன்ற வழக்கறிஞர். சில ஆண்டுகள் சமஸ்கிருதப் பேரா சிரியராகப் பணியாற்றியவர். பம்பாய்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தராகப் பதவி வகித்தவர். நடுவண் அரசின் உயர் சிறப்புகளைப் பெற்றவர். அவருடைய நூலின் இரண்டாம் தொகுதியின் முதற்பகுதியையும், இரண்டாம் பகுதியையும் 1941-ல் பந்தார்க்கர் நிறுவனம் வெளியிட்டது. இந் நூலின் பொருட் சிறப்பும் தெளிவுதரும் ஆற்றலும் ஒருபுறம் இருக்க, அதன் முன் னுரை குறிக்கும் ஒரு செய்தியை இந்திய ஆய்வறிஞர்கள் தெரிந் திருக்க வேண்டும். இந்தியாவைப்பற்றி இந்திய அறிஞர்கள் செய்யும் எந்த நூலும் இந்தியாவில்தான் வெளிவர வேண்டும் என்ற உறுதிப்பாட்டை அவர் குறித்துள்ளார். இங்கிலாந்தில் வெளியானது, அமெரிக்காவில் ஜெர்மனியில் வெளியானது என்று பெருமைப்படும் அறிஞர்கள் இதனை நினைவிற் கொள்ளவேண் டும். தேசத் தலைவர் சவகர்லால் நேரு இங்கிலாந்தில் தமது நூலை வெளியிட்ட சமயத்தில் பி. வி. காணே தமது நூலை இந்தியாவில் வெளியிட்டுப் பெருமை பெற்றார் என்றால் அதை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இந் நூலின் முதல் தொகுதியில் தர்மத்தின் பொருள், தர்ம சாஸ்திர மூலங்கள், கால வரையறை, நூல்களை யாத்த ஆசிரியர் கள், உள்ளடக்கம் முதலியவற்றை விவரிக்கிறார். இரண்டாவது தொகுதியின் முதற்பகுதியில் தர்மத்தின் பல பிரிவுகள், பொது தர்மம், வர்ணங்கள் ஒவ்வொன்றிற்கும் உரிய கடமைகள், தீண் டாதார், அடிமைகள், பண்பாடு, உபநயனம், ஆஸ்ரமங்கள், மணவினை, விதவைகளின் கடமை, விதவை மறுமணம், சதி, வேசிகள், இல்லறத்தார் கடமை, உணவுவகை, வேதப்படிப்பு முறை, தானம், கோயில் கட்டுவது, கிணறு தோண்டுவது, துறவு நிலை, வேதபலி, அதற்குரிய காலம், முறை முதலியவை கூறப்படு கின்றன. இரண்டாவது பகுதியில் தேவபூசை, உணவு சமைத்தல், விருந்தினரை உபசரித்தல், உணவு உண்ணும் முறை, பசுவின் புனிதத் தன்மை, மாமிச உணவு, குடிப்பழக்கம், மாதவிடாய், வேதப்படிப்பு நெறி, நாளும் செய்பத்தக்க கடமைகள், தானத்தின் பெருமை, கோயில் பராமரிப்பு, அதனைக் கட்டும்முறை, கோயில் அலுவல்முறை, வானப்பிரஸ்த நிலை, வடக்கிருத்தல், சன்யாசம், மடங்கள், அவற்றிற்கிடையே எழும் வழக்குகள், பெண் சன்

யாசிகள், அவர்களுக்குரிய நிறுவனங்கள், வேதபலி, மிருக பலி, பலியிடும் காலம், இராசசூயம், அஸ்வமேதம் முதலிய யாகங்கள், அரும்பத அகரவரிசை ஆகியவை இடம் பெறுகின்றன.

சங்க இலக்கியத்திற்குக் கலைக்கூறுகளைத் தெளிவாக்கும் ஒரு நூல் உருவானால் தமிழ்ப் படிப்புத் திட்டம் பெறும். எவை ஆரியக்கூறுகள்; எவை தமிழ் - திராவிடக் கூறுகள் என்று கோடிட்டுக் காட்ட இயலும். ஏகதேசமாக இருக்கும் தமிழ்ப் படிப்பு, திட்டமாக உருவாவதற்கு இத்தகைய அடிப்படை நூல்கள் உதவும்.

இந்த நூல் உருவாவதற்கு உங்கள் கருத்துகளை, ஆலோசனைகளைத் திறந்த மனத்துடன் கூறித் தமிழ்த்துறையை ஊக்கமூட்டுமாறு வேண்டிக்கொள்கிறேன்.

# முதல் அமர்வு

## தலைவர் : இராம. பெரிய கருப்பன்

### முன்னுரை

சங்க இலக்கியங்கள் மிகப் பழமையவாயினும் இன்றும் நடைமுறையில் ஆளுமை உடையனவாய் இலங்குகின்றன. அருஞ் சொல் எனக் கருதுபவை இன்றும் வட்டார வழக்காய்ச் சிற்றூரில் பழக்கத்திலிருக்கின்றன. உழவர் இருவர் பேருந்து நிலையத்தில் தங்கியிருந்தபோது, மெதுவாகத் தொடங்கிய மழை வலுக்கத் தொடங்கியது. அப்பொழுது ஒருவர் மற்றவரை நோக்கி, மழை வரவர உறைக்குதே என்றார். 'உறைக்குதே' என்ற சொல்லைக் கேட்டதும் வியந்துபோனேன். எனக்கு 'உறைப்புழி ஓலைபோல', 'கதழுறை சிதறி' என்ற சங்க இலக்கியத் தொடர்கள் நினைவுக்கு வந்தன. பெருந்துளியாக விரைந்து விழுதலை 'உறை' என்ற சொல்லால் ஈராயிரம் ஆண்டுகளுக்குப் பின்னும் வழங்குதலைக் கண்டேன்.

'அகவன் மகளே அகவன் மகளே' எனத் தொடங்கும் ஔவையாரின் குறுந்தொகைப் பாடல்,

'அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே'

என்று தலைவனை, 'அவர்' எனச் சுட்டுகிறது. இக் குறுந்தொகை வழக்கை இன்றும் தமிழ்க்குடும்பங்களில் காணலாம்.

குறிஞ்சிப் பாட்டிலே 'அன்னாய் வாழி வேண்டன்னை' எனத் தோழி தொடங்குவதும்;

'எய்யா மையலை நீயும் வருந்துதி'

என உரைப்பதும்,

'செப்ப லான்றிசின் சினவா தீமே'

எனக் கூறுவதும் அப்படியே பேச்சு நடையை ஒட்டி அமைதலைக் காணலாம். சொல்லாட்சி, வடிவம், நாகரிகமாக உணர்த்துதல் முதலிய கூறுகளினால் சங்க இலக்கியம் இன்றும் வாழ்கிறது. பழமைப் பொருளைப் பாதுகாப்பதுபோலச் சங்க இலக்கியங் களையும் போற்றிக் காத்தல் வேண்டும். வேற்று நாட்டாரும் ஏற்றுப் போற்றும் வகையில் சங்க இலக்கியங்களின் பெருமையைச் சொல்லுதல் வேண்டும். சங்க இலக்கிய அணுகுமுறை, ஆய்வு முறைகளில் எவற்றைப் பின்பற்றினால் உலகு உணர்ந்து பாராட் டும் என அறிந்து அவற்றைக் காண வேண்டும். நயம் காண்ட லோடு நில்லாமல், சில இலக்கியக் கோட்பாடுகளை எடுத்துக் காட்டி அவற்றைப் பொருத்தி விளக்க வேண்டும்.

உளவியல் கூறுகளை நன்கு ஆராய்ந்து அவை சங்கப் பாடல் களில் பொருந்தியிருத்தலைக் காட்ட வேண்டும். தோழி இங்ஙனம் கூறுவது உளவியலாகும்; தலைவி இங்ஙனம் கூறுவது உளவிய லாகும்; என்று சிலர் கூறுவது போலன்றி, உளவியலை விளக்க வேண்டும். 'எண்ணத் தொடர்பு' (association of thought) என்பது ஓர் உளவியற் கூறாகும். மகிழ்வுந்தின் (கார்) எண்ணைப் பார்த்தால் அதில் அமர்ந்து செல்லும் உரிமை யாளரின் எண்ணம் வருவதுபோல, இந்த ஆண்டு பொங்கல் நாளில் சென்ற ஆண்டு பொங்கலின்போது உடனிருந்து உண்ட தம்பி, தங்கையர் நினைவு வருவதுபோல, தொடர்புடைய எண் ணங்கள் ஒருவர் உள்ளத்து எழுதல் இயற்கை. தலைவி, முன் விளையாடிய பந்தையும் கழங்கையும் பார்த்து அவள் உடன் போக்கிற்குப் பின்னர்ச் செவிலி வருந்துகிறாள். 'அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில் எந்தை பாரி இருந்தார்; எம் குன்றும் எம தாகவே உரிமையுடையதாய் இருந்தது;. ஆனால் இற்றைத்திங்கள் இவ்வெண்ணிலவில் வென்றெறி முரசின் வேந்தர் குன்றுகளைக் கொண்டனர்' என்று பாரி மகளிர் வருந்திப் பாடுகிறார்கள். இதுபோலக் கருத்துத் தொடர்பைக் காட்டும் உளவியற் கூறுகள் அமைந்த பாடல்கள் சங்க இலக்கியங்களில் எத்துணை உள்ளன எனக் காணலாம். இப் பாரிமகளிர் பாட்டில் சிறந்த பாப்பு நயமில்லை எனினும், உளவியல் கொண்டு நோக்கும்போது, இன்றும் அது சுவை தருகின்றது. 'வென்றெறி முரசின் வேந்தர்' என்னும் தொடர் வரலாற்றுக் குறிப்பினைக் காட்டுகிறது. மானிட வியல், சமூகவியல் முதலியவற்றைக் கற்றுச் சங்கப் பாடல்களுடன் பொருத்திப் பார்க்கவேண்டும்.

ஐம்புலன்களுக்கும் புலனாகுமாறு ஒரு செய்தியைக் கூறுதல் சிறந்தது என்பார்கள். இதற்கு உவமைமட்டும் போதும் என்பர் சிலர். உவமையும் உருவகமும் தேவை என்பர் சிலர். சிலர் அடைமொழியே போதும் என்பர்.

'செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த'

என்ற குறுந்தொகை முதற்பாட்டில், மூன்று முறை செந்நிறத்தைக் காட்டிப் படிமத்தைப் புலப்படுத்துகின்றார். சேய்குன்றம் போர்க் களத்திற்குப் பொருத்தமாக அமைகிறது. செங்களம், செங் கோலம்பு, செங்கோட்டுயானை என்ற செந்நிற அடுக்கு, போர்க் களத்திற்குரிய படிமத்தைப் புலப்படுத்துகின்றது. இக் குறுந் தொகை முதற்பாட்டில் வரும்

''குருதிப் பூவின் குலைக்காந் தட்டே''

என்னும் அடி இருதுறை கூறுதற்கு ஏற்ப அமைந்துள்ளது. இங் ஙனம் பல பொருள் கொள்ளுமாறு அமைவதை இருண்மை (**obscurity**) என்று சங்க இலக்கியப் புதுமை என்ற கட்டுரையில் தெ. பொ. மீ. அவர்கள் எழுதியுள்ளனர். சங்கப் பாடல்களில் இருண்மை அமைந்திருப்பதை அதில் விளக்கிக் காட்டியுள்ளார். அங்ஙனம் இருண்மை அமைவதுதான் பாடலுக்குச் சிறப்பு என்று இக்காலத் திறனாய்வாளர் கருதுகின்றனர். அதனை ஒட்டித்தான் இக்காலப் புதுக்கவிதை இயற்றுவோரும் அவ்விருண்மையைத் தம் படைப்பில் மிகுதியும் கையாளுகின்றனர்.

வடமொழியில் தொனிக்கோட்பாட்டை நன்கு ஆய்ந்து வெளியிட்டுள்ளனர். ஆனால், அக் கோட்பாட்டினை விளக்க எடுத்துக்காட்டும் பாடல்கள் பெரும்பாலும் பரத்தைமைக் கருத் தைத் தழுவியதாகவே உள்ளன. சங்க இலக்கியத்தில் இத் தொனிக் கோட்பாட்டிற்கு நல்ல சான்றுகள் நிறைய அமைந் துள்ளன. சங்க இலக்கியச் செல்வாக்கு இன்றளவும் எல்லா இலக்கிய வகையிலும் படிந்துள்ளது. பல்வேறு துறை அறிவினைப் பெற்றுச் சங்க இலக்கியங்கட்குப் புதுவிளக்கம் தந்து அயல்நாட்டா ரும் போற்றும் வகை செய்தல் வேண்டும்.

# 1. சங்க இலக்கியத்தில் இயற்கை

ச. வே. சுப்பிரமணியன்

சங்க இலக்கியம் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனும் தொகுதிகளாலானது. பெரும்பாலும் தனிப்பாடல்களைக் கொண்ட இது, சிறிது கால வேறுபாடுடைய[1] பல புலவர்களின் பலவகைச் சூழலின், உணர்வு வெளிப்பாட்டுப் பாடலின் தொகுதி களாக அமைவது. தன்வயப் பாடல்களாலும், தற்சாரா நிலையில் பாத்திரக் கூற்றுப் புனைவாகிய பாடல்களாலும் உருவாகியது. இவ்வகப்புறப் பாடல்களுள் பல, தம் உட்கூறுகள் சிலவற்றுள் ஒன்றாக இயற்கையையும் கொள்கின்றன.

இயற்கை, இயல்பாக அமைவது; இயல்பாகச் செயற்படுவது. ஐம்பூதங்கள் இயற்கை; அவற்றின் சேர்க்கையான உலகமும் இயற்கை. நிலம், பொழுது எனவும், விதை, முளை, விளைவு எனவும் இயல்பு மாறாது இயல்வது இது. ஓரறிவுயிர் முதல் அனைத்தும் இயற்கை எனினும், ஆறறிவினனான மனிதன் தன் அறிவாலும் செய்கையாலும் இயற்கையின் இயல்பு நிலையிலிருந்து மாறி அமைவதால், மனிதன் நீங்கலாகப் பிற இயற்கையாக எண்ணப்படுகின்றன.[2] மனிதன் இயற்கையை வெல்ல முடியாது, அதற்கு ஆட்பட்டே வாழ்கின்றான். இயற்கையைப் பயன் கொண்டு அதனுடன் இணைந்து வாழ்கின்றான். இயற்கை மனிதனுக்குப் புகட்டிய அறிவு, பறவையைக் கண்டு விமானம் படைக்க வழி வகுக்கின்றது. அறிவியல் வாழ்வுக்கு மட்டுமன்றிக் கலைவாழ்வுக்கும் இயற்கை களனும் காரணமுமாகின்றது. எல்லா உயிரையும் உடன்பிறந்தவாகக் கொள்ளுதல், இயற்கையில் இறைமையைக் காணுதல் என மனிதனின் ஆன்மீக வாழ்வினுக்கும் அஃது அடிப்படையாகின்றது.

இலக்கியத்தில் இயற்கை கலையில் இடம்பெறுவதுபோன்று அமைகின்றது. இந் நிலையில், இயற்கையே கலையிலும் சிறந்தது

எனினும், இயற்கை கலையால் சிறப்பும் உயர்வும் பெறுவதால், கலைக்கு முதன்மை கற்பிக்கப்படுதலும் உண்டு.[3] மனிதனை மிகவும் கவர்ந்த, அவனால் ஆக்க இயலாத இயற்கை, அவன் ஆக்கமான கலை - இலக்கியத்தில் மிகுதியாக வெளிப்படுகின்றது. அவனால் அனுபவிக்க முடிந்த இயற்கை, அவன் அனுபவ வெளி யீடான இலக்கியத்தில், பல நிலைகளில், முறைகளில், நேரங்க களில் பயன்படுகின்றது.

இலக்கியத்தில் இயற்கையைத் தரும் நிலைகள் பல உள. அவை இயற்கையை அவ்வாறே காட்டுதல், இயற்கையைச் செயற் கையுடன் கலந்து தருதல், இயற்கையை அழகுறப் புனைதல், இயற்கையின் சில பல கூறுகளைத் தேர்ந்து ஒருங்கமைத்து அளித் தல் போன்றன. கூறும் முறையிலும் பலவிதங்கள் அமையலாம். சிறு தொடராகத் தருதல் அல்லது நீண்ட பகுதியாக அமைத்தல்; எளிய குறிப்பாக அமைத்தல் அல்லது விரிவாக வருணித்தல்; நுட்பமாகக் காட்சிப்படுத்தல் அல்லது மேற்போக்காகத் தருதல்; செயற்பாடு இல்லாது ஓவியம்போலத் தருதல் அல்லது இயக்கங்கள் புலப்பட அமைத்தல் என இயற்கையை அணுகும் முறையிலும், வேறுபாடுகள் அமைய வாய்ப்பு உண்டு. மூன்றாமிடத்தினதாக இயற்கையை எடுத்து மொழிதல், அல்லது முன்னிலைப்படுத்தி அதனுடன் நேரடியாக அழைத்துப் பேசுதல், அல்லது இயற்கைப் பொருளே தன்னைப்பற்றிக் கூறுவதாக அமைத்தல் என்பன போன்றன. இன்னும் கவிஞன் இயற்கையைப் படைக்கும் பாங் கில் ஐம்புலன் உணர்வுக்கும் முதன்மை கொடுத்துப் படைத்தல், ஒரு புலனுக்கு முக்கியத்துவம் அளித்தல், புலனுணர்வுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்காமை எனப் பல நிலைகள் அமையலாம்.

இயற்கையை இயற்கைக்காகவே பாடுதல், படைத்தல் எனும் பான்மையுடன், பயன்பாடு, நோக்கம் என்பன கருதியும் இலக்கியத்தில் ஆக்குதல் உண்டு. கருத்து விளக்கத்திற்காகப் பயன்படுத்துதல், வெளிப்பட்டும் அல்லது ஆழ்ந்து மறைந்தும் காணப்படலாம். இதற்காக, இயற்கையைச் சிதைத்தும் சிதைக் காதும் அமைக்கின்றனர்.

இலக்கியத்தின் இயல்பு, தகுதி தேவை போன்றவைக்கு ஏற்பவும் இயற்கையைப் பயன்படுத்துமாறு வேறுபடலாம். அவை காப்பியத்தில் விரிந்த பின்புல வருணனை, அறவிலக்கியத்தில் அறி வுறுத்தற் சான்று....போன்றன. இலக்கிய வெளியீட்டில் உவமை,

உள்ளுறை, இறைச்சி, குறியீடு, பின்னணி போன்ற பல நோக்க நிறைவேற்றத்திற்கு இயற்கை கையாளப்படுகின்றது. உணர்வு வெளியீட்டுக் களனாகவும் தத்துவக்கருத்து விளக்கமாகவும்கூட இயற்கை அமையலாம்.

சங்க இலக்கியத்தில் இயற்கையின் ஆட்சி தனிப்பட்டது. இங்கு இயற்கை பெறும் இடம், பங்கு, பயன் போன்றன பலவாறு ஆயப்பட்டுள்ளன.[4] முருகியல் நிலையிலும் அறிவியல் அணுகு தலிலும் இயற்கையின் வருகை ஆய்வு செய்யப்படுகின்றது. ஒரு சிறுதொடர், ஒரு சில அடிகள், ஒரு பாட்டின் பெரும்பான்மைப் பகுதி எனப் பலவாறாக இயற்கைபற்றிய செய்திகள் சங்கப் பாட லில் அமைகின்றன. பாடலின் அளவு, தேவைகட்கு ஏற்ப இயற்கை யின் இடம் விரிந்தும் சுருங்கியும் அமைகின்றது. பாடலில் இயற்கை இடம்பெறுவதில் நோக்கத்திற்கேற்ப வகைமையும் வேறுபாடும் கொள்வதுண்டு.

தொல்காப்பியம் காட்டும் மரபு, அக, புறத் தனிப்பாடல் களில் இயற்கையின் இடத்தை உணர்த்துகின்றது. அக, புறத் திணைக்குரிய பெயர்கள் மலர்ப்பெயராக அமைந்துள்ளன. ஆயி னும் புறத்தைவிட அகத்திலேயே இயற்கை முதன்மை பெறு கின்றது. வெளிப்பட மொழியும் புறப்பாடலில் இதன் தேவை குறைவு எனலாம். அகத்தின் முதலும், கரு பலவும் இயற்கைக்கு முதலிடம் தர வாய்ப்பளிக்கின்றன. நிலம், பொழுது எனும் முதலும், இயங்கு-இயங்காப் பொருள்களான கருவும் இயற்கை யாகி இடம் பெறும்போதும், மனிதன் கலவா இயற்கையுடன், வயல் - தினைப்புனம். . . . என மனிதன் இணைந்த இயற்கையும் இடம் பெறுகின்றன. இயற்கையை இயற்கைக்காகவே படைத்தல் எனும் நோக்கம் இல்லாமை இங்கு நினைக்கத் தக்கது.

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மக்களைப் பற்றிய பாட லாகையால், சங்க இலக்கியம், அவர் வாழ்வின் நிலைகளைக் காலம் இடம் பொருள் ஆகிய இயற்கைச் சார்புடன் காட்டுகின்றது. எனி னும் சில குறிப்பும் - குறியீடும் இணைந்து அமைவது இலக்கிய நிலையில் நேரலாம். ஒவ்வொரு திணைக்கும் உரிய உரியுடன், நிலம் பொழுதுகள் பொருந்திச் செல்லுமாற்றை உரையாசிரியர் விளக்குகின்றனர். திணையின் மலர்ப் பெயரும் குறியீட்டுப் பொருள் கொள்வது சிந்தித்தற்குரியது. குறிஞ்சி மலர், பன்னீ ராண்டுக்குப் பின் மலர்வது என்பதால், தலைவியின் பருவ வரவைக் குறிக்கலாம்; அத்துடன் பெருங்கால இடைவெளியில்

பூக்கும் அரிய மலரானமையின் களவுக் காதலும் அருமையானது என்ற எண்ணம் தரப்படுவதாகக் கொள்ளலாம். அதன் கருநீல நிறம், புலப்பட்டு நிற்கும் கற்பின் முல்லை வெண்மைக்கு மாறான களவின் மறைநிலையைச் சுட்டலாம்; தேன் நிறைவு களவின் இன்ப நாட்டத்தைக் காட்டலாம்.

காயாகி விளைவும் பயனும் தருவதன் முந்திய மலர் நிலையைத் திணைகட்குக் குறிப்புப் பெயராக்குவது தனித்த சிந்தனைக்குரியது. உணர்வுகட்கு ஏற்ற பொருத்தம் திணை மலர்க்கு அமைவதும் நுனித்துக் காணத்தக்கது. கண்ணீர் நிறைந்ததான இரங்கல், தண்ணீரில் நிற்கும் நெய்தலில் தரப் படுவது இவ்வெண்ணத்தை எழுப்புகின்றது. முதுவேனிலின் நடுப்பகலிலும் உலராது அமையும் பாலை, பிரிவிலும் உயிர்தரிக் கும் தலைவன் தலைவியர்க்குப் பொருத்தமான குறியீடு எனலும் இங்குச் சிந்திக்கத்தக்கது.

அகத்திணையின் முதல், கரு, உரி என்பதில் முன்னிரண்டும் இயற்கைச் சார்பு கொள்வதால், மூன்றில் இரண்டான பெரும் பான்மை இயற்கைக்குரிய இடம் எனலாம். ஆயின் உரிப்பொருள் சிறந்தது (தொல். பொருள்-3) என்பதால் அது முதன்மையும் இன்றியமையாமையும் பெறுகின்றது. உரியில்லா அகப்பாடல் இல்லை; ஆனால் இயற்கை இல்லாப்பாடல் அமையலாம். பாலைப் பிரிவுச் சூழல் இவ்வாறு தரப்படுகின்றது.

பொலம்பசும் பாண்டில் காசுநிரை யல்குல்
இலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை யாயின்
அரிதே விடலையிவ ளாய்நுதற் கவினே. (ஐங். 310)

அகப்பாடலில் இயற்கை வரும்போது, அது பாடலின் தொடக்கத்திலோ, இடையிலோ, இறுதியிலோ, எங்கும் அமைய லாம். அருகிப் பாடல் முழுவதும் பரந்தும் அமைகின்ற நிலையும் உண்டு. ஓரிரு சொற்சேர்க்கையே அதனை ஓர் இயற்கைப்பாட லாக அன்றி அகவுணர்வுப் பாடலாகக் கொள்ள இடம் தருகின்றது. பொழுது கண்டு அழியும் நெய்தல் தலைமகள் கூற்றாக இஃது அமைகின்றது.

பைங்காற் கொக்கின் புன்புறத் தன்ன
குண்டுநீ ராம்பலுங் கூம்பின வினியே
வந்தன்று வாழியோ மாலை
ஒருதா னன்றே கங்குலு முடைத்தே. (குறு. 122)

மாலைக் காலம் ஆயிற்று என்ற பொழுது விளக்கத்துடன் அமைந்து விடாது, தான் மட்டுமன்றி இனி இரவும் துணையுண்டு என்ற பொருள் தொடர்வதற்கு இடமமைவதால் இயற்கை தனித்து நிற்காது, பயன்பாடு பெறுகின்றது.

இவ்வாறு பாடலின் முழுமையில் இடம் பெறாவிடினும், பெரும்பான்மைப் பகுதியைப் பற்றிக் கொள்வதைச் சில சிறு பாடல்கள் காட்டுகின்றன.

> அவரோ வாரார் தான்வந் தன்றே
> அஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்
> செங்க ணிருங்குயி லறையும் பொழுதே. (ஐங். 346)

இயற்கையை அவ்வாறே தரும் எளிய உமைப்பு நிலைகளாக இவை அமைகின்றன. இயற்கையின் பல கூறுகளைத் தேர்ந்து, எடுத்து, ஓரிடத்தில் நிகழ்வதாக ஆக்கி, ஓர் அழகிய காட்சியை உருவாக்கும் பாங்கும் அகப்பாடலில் காணப்படுகின்றது. விரிவும் விளக்கமும் உடையதாகவும், காட்சிப் புலனுடன் கேள்விப் புல னுக்கும் முதன்மை அளிக்கும் நிலையினதாகவும் அமைகின்றது.

> ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கிற்
> கோடை யவ்வளி குழலிசை யாகப்
> பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை
> தோடமை முழவின் துதைகுர லாகக்
> கணக்கலை யிகுக்குங் கடுங்குரற் றூம்பொடு
> மலைப்பூஞ் சாரல் வண்டு யாழாக
> இன்பல் லிமிழிசை கேட்டுக் கலிசிறந்து
> மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
> கழைவள ரடுக்கத் தியலியா டுமயில்
> நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன். (அகம். 82)

விழாக்காலத்தில் விறலியாடல் போன்று அமைந்த மயிலின் ஆடல் ஒரு நாட்டிய அரங்கக் காட்சியாக இங்குத் தரப்படுகின்றது. ஆடல், அதற்குத் துணையாக அமையும் பல்லிசை, ஆடலைக் கண்டு சுவைக்கும் அவையோர் எனப் பல செயற்கைக் கூறுகளும் இயற்கைக் காட்சியின் ஆக்கக் கூறுகளாகி உதவுகின்றன. மூங்கி லின் துளையில் கோடைக் காற்றுப் புகுந்து புறப்படுவது குழலிசை யாகின்றது; அருவியின் நீரொழுக்கத்தின் முழக்கம் முழவாகித் தாளம் இடுகின்றது. கலைமான்கள் கூட்டமாக எழுப்பிய குரல் தூம்பினை ஒத்து ஒலிக்கின்றது. மலைச்சாரலின் இன்னறும்

பூவில் தேனுண்ணும் வண்டின் முரற்சி யாழின் இனிமைகொண்டு, மயிலின் ஆடலுக்கு இசைப்பின்னணி அமைக்கின்றது. காட்சிக்கும் கேள்விக்கும் இனிய இவ்வாடல், நோக்கியிருக்கும் குரங்குகளை அவையோராகக் கொள்கின்றது.

இயக்கமில்லாத வரைபட ஓவியம் போன்ற இயற்கைக் காட்சியைப் பாலையின் வற்றல் மரம் தருகின்றது. வாடிய கிளைகள், நிழல் இன்மை, வேர்வரை வெம்பிய நிலை; இத் தகைய உலர்ந்த உயர்ந்த மரங்கள் நிறைந்த கொடிய காடு.

(வறியவ னிளமைபோல்) வாடிய சினையவாய்ச்
(சிறியவன் செல்வம்போற்) சேர்ந்தார்க்கு நிழலின்றி
(யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்)
வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்
(அலவுற்றுக் குடிகூவ ஆறின்றிப் பொருள்வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழல்
உலகுபோல் உலறிய வுயர்மர வெஞ்சுரம் (கலி. 10)

வானில் வெம்மை செய்யும் நண்பகற் கதிரவனும், பூமியில் வற்றல் மரங்களுமாகக் காட்சியளிக்கின்றது. இவ்வியக்கமில் காட்சிக்கு வேறாக, உயர்திணைக் காட்சிகள் பெரும்பாலும் இயக்க முடன் காட்டப்படுகின்றன. வாழ்க்கை இயக்கங்களாலானது. எனவே அதற்குப் பின்னணியான இயற்கையும் இயக்கப்படத் திரை யாகிப் புனையப் படுகின்றது. நெய்தல் நில ஊராகிய மாந்தையில் மனிதர் மட்டுமல்லர்; பிற உயிரினங்களும் இயற்கையும் இயங்கிக் கொண்டே இருக்கின்றன.

பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப்
புன்கா னாவற் பொதிப்புற விருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கா லலவன் கொண்டகோட் கசாந்து
கொள்ளா நரம்பி னிமிரும் பூசல்
இரைதேர் நாரை யெய்தி விடுக்கும். (நற். 35)

ஓயாது பொங்கி மணற் கரையில் வந்து அடித்து மீளும் அலைகள்; நாவல் மரத்திலிருந்து நன்றாகப் பழுத்த கனி கீழே விழுகின்றது; கரும் பழத்தைத் தனது இனமாகக் கருதி வண்டொன்று அதன் அருகில் சென்று மொய்க்கின்றது; வண்டிற்கும் கனிக்கும் வேறு பாடு அறியாது, உணவுக்காக வந்த நண்டொன்று வண்டினைப் பற்றிக் கொள்கின்றது; திடீரென ஏற்பட்ட இச்சூழலால் வண்டு பேரொலி செய்கின்றது. இவ்வொலியால் கவனம் திரும்பிய

நாரை ஒன்று தனக்கு இரையாகக் கிடைக்கக்கூடிய நண்டைக் கண்டு அருகில் விரைகின்றது; நாரையின் பிடிக்கு ஆளாகாது இருக்க வேண்டி, வண்டை விட்டு விட்டு நண்டு அளை நோக்கி விரைகின்றது. திரைப்படமாக இயங்குகின்றது, இந்த இயற்கைக் காட்சி.

சங்க அகப்பாடல்கள் பெரும்பாலும் தலைவனுக்கு ஆடையாகப் பலவளமுடைய அவனது நாட்டைக் காட்டுகின்றன. இயற்கையின் இயல்பில் அதன் தலைவனாகிய தன் காதலன் இயல்பையும் இணைத்துக் காணும் அளவிற்கு இயற்கையும் மனித இயல்பும் இயைந்து செல்கின்றன எனலாம்.

விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்க! (நற். 172)

தலைவனைப் போன்றே தலைவிக்கும் அருவி இயற்கைமுன் ஒட்டாகிச் சார்ந்து வருகின்றது. உடன்போக்கில் பாலைப் பெருவழியின் மலர்களைக் கொய்து மாலை தொடுத்து விளையாடி வரும் காதலியைத் தலைவன் நலம்புனைந்துரைத்தலில் இந்நிலை இணைகின்றது.

உயர்கரைக் கான்யாற் றவிரற லகன்துறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே. (ஐங். 361)

தலைவன் கடந்து செல்லும் நிலம், தலைவி ஆற்றியிருக்கும் சூழல் போன்ற பல உணர்வுப் பின்னணிகள் இயற்கைக் காட்சியைக் கொள்கின்றன. இதில் முன்நிலத்தில் இருக்கும் மனிதனின் உணர்வு செயலுக்கு ஏற்ற, ஒத்துச் செல்லும் பின்னணியும் அமையலாம்; அல்லது அதற்கு எதிராக அமைந்து, உணர்வை அதுபற்றி மிகுவித்துக் காட்டும் முரண் பின்னணியும் அமையலாம். காதலன் பிரிவால் தனிமை கொண்டு, நெஞ்சம் துன்பத்தால் ஓலமிடும் நெய்தல் தலைவிக்கு இணைப் பின்புலமாகிய அலையோசை யெழுப்பும் இரவுநேரக் கடல் குறுந்தொகையில் அமைகின்றது.

யாரணங் குற்றனை கடலே, பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை

வெள்வீத் தாழைத் திரையலை
நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே. (குறுந். 163)

இயைவுப் புலமான இயற்கை ஒருபாலாக, எதிர்மையுடனும் இயற்கை காட்டப் பாடல் உண்டு. பெருங்கடுங்கோவின் பாலைப் பாடல் பாலைப் பெருவழியில் தனித்துச் செல்லும் தலைவனின் சூழலில் வெம்மையால் துன்புற்ற போதும் இணைபிரியாப் பறவை, விலங்குகளைக் காட்டுவது இத்தகைய முரண் பின்னணி யாகும்.

அடிதாங்கு மளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே (கனங்குழாஅய்) காடென்றா ரக்காட்டு
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே.
(கலி. 11)

'மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை இயைபுறச் செய்தது பண்டைத் தமிழிலக்கிய மரபு' (பழந்தமிழ் இலக்கியத் தில் இயற்கை, ப. 17) என்ற டாக்டர் மு. வரதராசனாரின் கூற்று இங்கு எண்ணத்தக்கது.

அகப்பாடலில் இயற்கை இன்றியமையா இடம் பெறும் பிறிதொரு சூழல் உள்ளுறை. வெளிப்படையாக மொழியாது பண்பாடு தோன்றக் குறிப்பாக மொழிந்து கருத்துணர்த்தும் உள்ளுறைக்குப் பாங்கான வாய்ப்பு வழங்குகிறது இயற்கை. மருதத்தில் உள்ளுறைக்கு இடம் மிகுதி எனலாம். மென்மையான உணர்வுகள் சிதைவுறாமல், முள்ளை முள்ளால் எடுப்பது போன்று வன்மையுடன், புறத்தொழுக்கத்தைக் கடியும் நிலையில், தலைவ னுக்குத் தோழி வாயில் மறுக்கும் சூழலில் உள்ளுறை பெற்று இயற்கை அமைகின்றது.

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர! (அகம். 46)

தலைவரின் செயல்கள், எருமையின் செய்கை வாயிலாகப் புலப் படுத்தப்படுகின்றன. இல்லிடத்தே தலைவியை நீங்கி, இரவில் பரத்தையர் சேரியை அடைந்து, பலரால் நலனுண்ணப்பட்ட

பரத்தையைத் தானும் அவள் சுற்றம் கலங்க நுகர்ந்து, ஒழுகுதலாக இஃது அமைகின்றது.

உள்ளுறை போன்றே இறைச்சிப் பொருள் தோன்றவும் இயற்கை களனாக அமைதல் உண்டு. பாலைத் தலைவன் பிரிந்த சூழலில், வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்துமிடத்துக் காட்டூர் கிழார் மகனார் கண்ணனார் இயற்கைவழி இறைச்சி தருகின்றார்.

..................................சாரல்
ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்றா மூங்கில் முளைதரு பூட்டும்
வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை
நன்னாட் பூத்த நாகிள வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை
நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து
துணைப்பயிர்ந் தகவுந் துணைதரு தண்கார் (அகம். 85)

உரையாசிரியர் இக்காட்சியை இறைச்சியாகப் புரிந்து கொள்ள இடனமைக்கின்றார். 'பிடி யானைக்கும் அதன் கன்றிற்கும் களிற்றியானை, பிடிக்கு ஈன்ற வயிறும் கன்றிற்குக் குழவி வயிறும் உண்மையின், முற்றாத முளை கொணர்தல் வேண்டிற்று. நம் பெருமான் இக்காட்சியைக் காணுங்கால் நின்னை நினைவர் ஆதலின் காலம் நீட்டித்திரார் என இறைச்சிப் பொருள் தோன்றிற்று. மேலே மயில் பெடையை அழைக்கும் கார்ப் பருவம் என்றதும், இங்ஙனமே அன்புறு தகுந இறைச்சியில் சுட்டிய படியாம்' (அகநானூறு, பெருமழைப் புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழகம், சென்னை, 1970, பக். 314).

இயற்கையோடு இயைந்த வாழ்வு நிகழ்த்தியதால், சங்கப் புலவர் தம் உணர்வுகளை இயற்கையிலும் ஏற்றிக்காட்டுகின்றனர். தலைவனை இழந்த வாழ்வு தலைவிக்குக் கைம்மை வாழ்வாகுதல் எனும் இயல்பு வாழ்வியல், மந்தியின் மேல் ஏற்றி மொழியப்படுகின்றது. இயற்கையை அவ்வாறே காட்டாது அதை மாற்றி மனிதவுணர்வினைக் காட்டும் பயன்பாட்டுச் சூழலாக இஃது அமைகின்றது.

கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்குஞ்
சாரல் நாட...... (குறுந். 69)

கருத்து விளக்கத்திற்காக இயற்கையை எடுத்து ஆளுதல் வாழ்வில் போன்றே இலக்கியத்திலும் இயல்பாகி அமைகின்றது. பாலையில் உடன்போகிய தலைவியைத் தேடி வந்த செவிலிக்கு அஃது அறமே என உணர்த்த விரும்புகின்றனர் கண்டோர். இயற்கையின் விளைபொருள்கள் அவ்வியற்கைக்குப் பயன்படாது, அவற்றைப் பெற்று அனுபவிக்கும் மனிதர்க்குப் பயன்படுமாறு இவ்வறிவுறுத்தலுக்கு உதவியாகின்றன.

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே.

சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே. (கலி.9)

உயர் மலையில் பிறக்கும் சந்தனம் அம்மலைக்குப் பயன்படாது, அதனை அரைத்துப் பூசும் மனிதருக்குப் பயன்படுகின்றது. கடலாழத்தில் தோன்றும் முத்தும் அக்கடலுக்கன்றி அதனை அணியும் மனிதருக்கே பயனாகின்றது. தலைவியும் அவ்வாறே தான் பிறந்த வீட்டிற்கன்றி அவளால் இன்பமுறும் தலைவனுக்கே பயன் தருபவள் ஆகின்றாள். மறுக்க வியலாத உண்மையை, மாற்ற வியலா இயற்கையைக் காட்டி உணர்த்துகின்றார் புலவர்.

இயற்கை வருணனையைக் கற்பனை கலந்து அழகுறுத்தி முருகியல் இன்பம் தோன்றப் படைத்தலும் சங்க இலக்கியத்தில் வெளிப்படுகின்றது. நயமுற மொழிதலாகவும் இவை அமைகின்றன. முல்லைப் பாட்டிலும், சிறுபாணாற்றுப்படையிலும் வழிக் காட்சியில் அமையும் மலர்க்காட்சி இத்தகு வளன் காட்டுகின்றது.

செறியிலைக் காயா அஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் கால
கோடற் குவிமுகை யங்கை யவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்ப....... (முல்லைப். 93-96)

அலைநீர்த் தாழை யன்னம் பூப்பவும்
தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்
கடுஞ்சூல் முண்டகங் கதிர்மணி கழாஅலவும்
நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும்...
(சிறுபாண். 146 - 149)

பல மலர்களைச் சொற்களால் வண்ணமும், வடிவும், மென்மையும், இயல்பும் தெளிவுபடக் காட்டலாக இவை அமைகின்றன.

உவமையாக இயற்கை பயன்படல் பெரும்பான்மையாக அமைகின்றது. உவமையிலும் பொருளிலும் இயற்கை இணைதலும், இரண்டுள், ஒன்றன் இடத்தை இயற்கை பெறுதலும் உண்டு. இயற்கைக்கு இயற்கை உவமை யாகுதல் கவிஞரின் பார்வை நுட்பத்தைக் காட்டுகின்றது.

அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கே ழன்ன மாநீர். (குறுந். 49)

இயற்கைக்குச் செயற்கைப் பொருளை உவமையாக்குதல் சிந்தித்தற்குரியது. ஆலமரத்தின் செங்கனி நிறத்தால் புதிய மட்கலத்தை ஒக்கின்றது.

புதுக்கலத் தன்ன கனிய வாலம். (ஐங். 303)

செயற்கைப் பொருளுக்கு இயற்கை உவமை கூறுதலும் காணப்படுகின்றது. இன்பம் தந்த தலைவனின் உறவு பின்பு மருதப்புறத்தொழுக்கம் காரணமாகத் துன்பம் தருவது, இனிய சிறிய அழகிய நெருஞ்சி மலர் பின்பு காழ்த்த முள்ளைத் தருவதை ஒக்கின்றது.

புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்
கினிய செய்தநங் காதலர்
இன்னா செய்தல் நோமென் நெஞ்சே. (குறுந். 202)

உவமையாக வரும் இயற்கைப் பகுதி, கருத்துத் தெளிவு கொண்டு, உணர்வு புலப்படுத்தி அமைகின்றது. சிறுதொடர்களாக அமையினும் பாடலில் முதலிடம் பெறுகின்றன. உவமை மிக நீண்டு விரிந்ததாகித் தனிப் பொருளாழம் கொண்டு, முக்கியத்துவம் பெற்று, பாடலில் தனித்த இடம் பெறும் நிலை அருகி அமைவது

'காப்பிய உவமை' என்பதுடனும் ஒத்துக்கருதத்தக்கது. 'மாந்தை அன்ன இவள் நலம்' (நற். 35) என நகரத்தை ஒப்பிடும்போது அதன் இயற்கைக் காட்சியைப் பல அடிகளில் புனைதல் இவ்வெண்ணத்தை எழுப்புகின்றது. இதனோடு ஓரளவு இணைத்து வைத்து நோக்கத்தக்க காட்சி புறப்பாடலிலும் உண்டு. தலைவனை எதிர்த்தவர் குளவிக் கூட்டைக் கலைத்த சிறுவர்களை ஒப்பர் என மொழிய, "வருணனை உவமை" தருகின்றார் அரிசில்கிழார்.

*அறாஅ யாண ரகன்கட் செறுவின்*
*அருவி யாம்ப னெய்தலோ டரிந்து*
*செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்*
*பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்*
*அம்பண வளவை யுறைகுவித் தாங்குக்*
*கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சுஞ்*
*செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாரின்....* (பதிற்.71)

குளவிக் கூட்டிற்கு உவமையாக நெற்குவியலில் அளத்தற்கு அழுத்தி வைத்த அம்பணம் காட்டப்படுகின்றது. நெற்குவைக்கு விளக்கமாக நெல்லரிதல், கடாவிடுத்தல், குவித்தல் போன்ற நிலைகள் விளக்கப்படுகின்றன.

அகப்பாடலில் இவ்வாறு பல்நிலையிலும் விரிந்து வகைமை காட்டி அமையும் இயற்கை புறப்பாடலிலும் சிலபல நிலைகளில் இடம் பெறுகின்றது. தலைவனைப் பாடும்போது செழிப்புடைய அவன் நாட்டைப் பாடுதல் எனும் பாங்கில் இயற்கை வருணனை அமைகின்றது. கபிலர் பாரியின் பறம்பு மலையின் இயற்கை வளனைத் தருகின்றார்.

*(அளிதோ தானே) பாரியது பறம்பே*
*(நளிகொண் முரசின் மூவிரு முற்றினும்)*
*உழவ ருழாதன நான்குபய னுடைத்தே*
*ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே*
*இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே*
*மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே*
*நான்கே, அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து*
*திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே;*
*வான்க ணற்றவன் மலையே; வானத்து*
*மீன்க ணற்றதன் சுனையே.* (புறம்.109)

நாட்டைப்பாடுதல் என்ற நிலையிலேயே இயற்கை இடம்பெறினும் அது பல்வகையாகத் தரப்படுதல் உண்டு. ஓய்மானாட்டு நல்லியக் கோடனை நன்னாகனார் பாடும்போது, தன் நெஞ்சிற்கு உரைத்த லாக அவனது பெருமாவிலங்கையின் இயற்கையழகைத் தரு கின்றார் (புறம். 176). பிசிராந்தையார், அன்னச் சேவலைத் தூதுவிடுத்துக் கோப்பெருஞ்சோழனைப் பாடும்போது அஃது அயிரை உண்ணும் சூழலான குமரியம் பெருந்துறையைக் காட்டு கின்றார் (புறம். 67). பெருஞ்சித்திரனார் குமணனைப் பாடும் போது தரும் இயற்கைக் காட்சி உட்குறிப்புடையதாகத் தோன்று கின்றது.

..........................விசும்புறக்
கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
ஆசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்
துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்
அதிரா யாணர் முதிரத்துக் கிழவ! (புறம்.158)

மந்தியை அழைத்துக் கனியளிக்கும் கடுவன்போலப் புலவரை வரு வித்துப் பரிசளிக்கும் புரவலனாகக் குமணனைக் கண்டு கொண்ட நிலையாக இஃது அமையலாம். அன்றியும், வளம் மிகுதியால் அனைவர்க்கும் நிறைவளிக்கவல்ல நாட்டியல்பும், அதன் புது வருவாயும் சுட்டப்பட்டுப் பரிசில்கடா நிலையாகிய துறைக்கு இயைபு கொள்வதும் கருதத்தக்கது.

தலைவனின் நாட்டைப் பாடுமிடத்து இயற்கை இணைவது போல, அவன் பகைவன் நாட்டை நினைக்கும் சூழலிலும் இயற்கை இடம் பெறுகின்றது. இதில் இரு நிலைகள் அமைகின்றன. தலைவன் பகைத்துப் போர்மேற் செல்லு முன்பு அப்பகை நாட் டின் வளநிலை; போருக்குப் பிந்தைய அழிவு நிலை என்பன. பாலைக் கௌதமனார் பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாடிய பதிற்றுப்பத்து பகைநாட்டின் இயற்கைச் செழிப்பினை அழகுறத் தருகின்றது.

இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்
பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை
வாலிணர்ப் படுசினை குருகிறை கொள்ளும்
அல்குறு கான லோங்குமண லடைகரை
தாழடும்பு மலைந்த புணரிவளை ஞரல

விலங்குநீர் முத்தமொடு வார்துகி ரெடுக்குந்
தண்கடற் படப்பை மென்பா லனவும்.... (பதிற்.30)

எனத் தொடர்ந்து நால்நில வளமும் ஐந்நில இயல்பும் தரப்படு கின்றன. மகள் மறுப்பதன் முந்தைய பகைநாட்டு இயற்கை நலமும் கருதப்படுகின்றமை (புறம் 344, 351) இவ்வகையில் அடங்கும்.

பகையழித்த பின்னுள்ள வளனிழந்த வறியநிலை சிதைந்த இயற்கையாகவே அமைகின்றது. பெரும்பாலும் நாடன்றி நகரமே முதன்மையுடன் காட்டப்படுவதால் செயற்கையின் இணைவும் உண்டு.

புள்ளின மிமிழும் புகழ்சால் விளைவயல்
வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகளத்
தேர்வழங் கினைநின் றெவ்வர் தேஎத்து (புறம். 15)

....................................யூர்தொறும்
மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி
வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
..................................................
நரைமூ தாளர் நாயிடக் குழிந்த
வல்லி னல்லக நிறையப் பல்பொறிக்
கான வாரணம் ஈனும்
காடாகி விளியு நாடுடை யோரே! (புறம். 52)

புறப்பாடலில் வரும் பிறிதொரு வருணனை ஆற்றுப் படையில் வரும் வழிவருணனையாகும். நெறிப்படுத்தப்படும் தலைவனின் நாட்டு வளம் மட்டுமன்றிச் செல்நெறியின் வள முடைய இயற்கைக் காட்சிகளும் தரப்படும் நிலையாக இஃது அமைகின்றது. இங்கும் செயற்கையின் விரவுதல் உண்டு. மலை படுகடாம் பல்வகை ஓசைகளைத் தருவது செவிப்புலனுணர்வு சார்ந்து படைக்கப்பட்ட காட்சியாகின்றது. காட்சிக்கு இன்பம் தரும் தனியியற்கையும் உண்டு.

பைந்நனை யவரை பவழங் கோப்பவும்
கருநனைக் காயாக் கணமயி லவிழவுங்
கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்

செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்
கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்
முல்லை சான்ற முல்லையம் புறவின்.....(சிறுபாண்.164-69)

ஐந்நில வருணனையும் தரல் எனும் நோக்கமும் இங்குண்டு.

அகப் புறப் பாடல்களையுடைய இசை பரிபாடல் இயற்கை யின் ஆட்சியில் பிறிதொரு நிலையைத் தருகின்றது. பின்புலமாகப் பிறதொகைகளில் இடம் பெற்ற இயற்கை இங்குத் தனித்து அமைவதாகத் தோன்றுகின்றது. வையையும், இறையமர் குன்றங் களும் வருணிக்கப்படுகின்றன. வையைக் காட்சி இயற்கைக்கு முதன்மை அளிப்பதாகத் தெரிகின்றதே யொழிய ஆறு பின்னணி யாக இடம்பெற்றதாகப் புலப்படவில்லை.

தனியியற்கை நிலையில் வையையின் வருணனை மலையில் மழைபெய்து ஆற்றில் நீர்பெருகுவதாக அமைகின்றது. செயற்கை யுடன் இணைந்த நிலையில் புதுப்புனலாட்டு இடம் பெறுகின்றது. மழை பெய்யுமுன் உள்ள வானநிலை (11.1-13), மலையில் மழை பெய்தல் (11.14-15), இடி மின்னல் போன்ற துணை நிகழ்வுகள் (22.1-7), மழை நீர் பல கலவையாகி ஆறாக வருதல்—

வானாற்று மழைதலைஇ மரனாற்று மலர்நாற்றம்
தேனாற்று மலர்நாற்றஞ் செறுவெயில் உறுகால
கானாற்றுங் கார்நாற்றங் கொம்புதிர்த்த கனிநாற்றம்
தானாற்றங் கலந்துடன் தழீஇவந்து தரூஉம்வையை
(பரி. 20.8-11)

ஆற்றின் நீர்ப்பெருக்குக் கரைகடத்தல்—

நளியிருஞ் சோலை நரந்தந் தாஅய்
ஒளிர்சினை வேங்கை விரிந்தவிண ருதிரலொடு
துளியி னுழந்த தோய்வரும் சிமைதொறும்
வளிவாங்கு சினைய மாமரம் வேர்கீண்டு
உயர்ந்துழி யுள்ளன பயம்பிடைப் பரப்பி
உழவர் களிதூங்க முழவு பணைமுரல
..................................................
வேண்டுவழி நடந்து தாங்குதடை பொருது (பரி 7. 11-19)

எனப் பலவாறாக இது விரிக்கின்றது. இழுத்துவரும் பன்மலர்த் தொகுதி இனிய காட்சி வழங்குகின்றது (11.16-30).

பரிபாடலின் இறையமர் தலங்கள் குன்ற வருணனையில் இயற்கைக்கு இடமளிக்கின்றன. அத்துடன் செயற்கை இணைவில் பொழிலாட்டும் தருகின்றன. கார்காலக்குன்றின் எழில் காட்சி ஒருபாலாக (14.1-17), கூடல்-பரங்குன்றின் இடைவழியும் இயற்கை எழில் பெறுகின்றது (8.22-28).

பயிரினங்களால் இனிய காட்சியாக அமைகின்றது குன்றம்.

> பசும்பிடி இளமுகிழ் நெகிழ்ந்தவா யாம்பல்
> கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்
> எருவை நறுந்தோ டெரியிணர் வேங்கை
> உருவமிகு தோன்றி ஊழிணர் நறவம்
> பருவமில் கோங்கம் பகைமல ரிலவம்
> நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்க
> மணந்தவை போல வரைமலை யெல்லாம்
> நிறைந்தும் உறழ்ந்தும் நிமிர்ந்துந் தொடர்ந்தும்
> விடியல் வியன்வானம் போலப் பொலியும்
> நெடியாய்நின் குன்றின் மிசை... (பரி.19.75-84)

பிற தொகை நூல்களினும் இறைமைக்கு முதன்மை தருதல் பரிபாடலில் அமைகின்றது. இயற்கையில் இறைமையைக் கண்டமை இங்கு விதந்து ஓதப்படுதல், இவண் இணைத்து எண்ணத் தக்கது. இறைமையின் இயல்புகளை, ஆற்றல்களை, பண்புகளை இயற்கைப் பொருள்களில் காண்பது ஒரு நிலை; கதிரவனில் இறைமையின் வெம்மையை, மதியில் தண்மையை, மாரியில் அருளை.....(4.25-32) எனக் கண்டு கூறுகின்றனர். இயற்கையும் இறையும் வேறுபடாத நிலையும் உண்டு.

> அங்கணேர் வானத் தணிநிலாத் திகழ்தரும்
> திங்களும் தெறுகதிர்க் கனலியும் நீ! (பரி. 1.41,42)

> வலனுயர் எழிலி மாக விசும்பும்
> நிலனு நீடிய இமயமு நீ! (பரி. 1.47,48)

சங்க இலக்கியத்தில் இயற்கை சிறந்த இன்றியமையாத இடம் பெறுவதை இவை காட்டுகின்றன. பதிற்றுப்பத்து, பத்துப் பாட்டு, ஐங்குறுநூறு போன்ற தொகை நூல்களில் தலைப்பாக வரும் தொடர்களும் இயற்கை இடம்பெறுவதைக் காட்டுகின்றன. வாழ்வியலோடு இணைந்து இயற்கை காட்டப்பெறுதல்,

தழையளித்தல், கொன்றை மலர்தல் மணக்காலக் கணிப்பாதல், தினைப்புனக் கதிர்வரல் களவுக்குக் களனாதல், கொன்றை மரத்தின் கீழ் மணம் பேசுதல் போன்ற பலவற்றால் புலனாகின்றது. வாழ்க்கையின் ஒழுங்கே இயற்கையும் இயல்பாகச் செல்லற்கு அடிப்படையாகின்றது என வாழ்வியல் தாக்கமும் இயற்கையில் அமைகின்றது.

> சிறுகுடி யீரே, சிறுகுடி யீரே
> வள்ளி கீழ்விழா, வரைமிசைத் தேன்தொடா,
> கொல்லை குரல்வாங்கி யீனா; மலைவாழ்நர்
> அல்ல புரிந்தொழுக லான். (கலி. 39)

## அடிக்குறிப்பு

1. சங்க இலக்கியக் கால எல்லையைக் கி. மு. 180 கி. பி. 290 வரை கணித்துக் குறுந்தொகை காலத்தால் முற்பட்டதாகவும், பரிபாடல் பிற்பட்டதாகவும் பட்டியல் செய்யப்படுகிறது. பார்க்க :

   V. I. Subramaniam, the Dating of Sangam Literature : Proceedings of the third International Conference Seminar, Paris, 1970. pp. 75-90.

2. 'Nature has been defined as the outer world of sense perception which is not man nor the intimate work of man'. 'Xavier S. Thani Nayagam, Landscape and poetry, Asia Publishing House, Bombay, 1966, p. 22.

3. 'இயற்கைக்கு எதிர்க் கண்ணாடி பிடிப்பது பாட்டு அன்று, புகைப்படக் கலை. பாட்டினைப் புகைப்படக் கலையாக்குவது, அதன் உயிருக்கே உலை வைப்பதாகும். நாம் காணும் இயற்கைப் பொருள்கள் துண்டு துணுக்குகள். இவற்றை ஒன்றுபடுத்திக் காட்டுவதே புலவன் பாட்டாம். இயற்கைக்கு எதிர்க் கண்ணாடி பிடிக்கின்ற நிலைமைக்கு மாறாக, மழுங்கித் தோன்றும் இயற்கை வடிவம் எந்த மறை பொருளின் நிழல் என்பதனை நமக்குக் காட்டி விடுகின்றான் புலவன். இதன்படி கண்ணாடி பிடிப்பவர் புலவரல்லர்-இயற்கையே. இயற்கை வெறும் நிழலே. காவியத்திலும் ஓவியத்திலும் வரும் காட்சியே உண்மைக் காட்சி. இயற்கை போன்றிருந்தது ஓவியம் என்பதன்று சிறப்பு; ஓவியம் போன்றிருந்தது இயற்கை என்பதே சிறப்பு. இயற்கை கலைத்திறம் போன்றிருப்பதே சிறப்பு'—தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், இன்ப உழைப்பு, 'பிறந்தது எப்படியோ', (4-ஆம்), 1955.

## துணை நூல்கள்

(1) 1948 — Treatment of Nature in Sangam Literature—M. Varadarajan, Ph.D. Madras.

(2) 1949 — Interpretation of Nature in Ancient Tamil Poetry—Xavier Thaninayagam. M.Litt. Annamalai.

(3) 1970 — பத்துப்பாட்டில் இயற்கை.

(4) 1971 — சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம் - முத்துக்கண்ணப்பர், பிஎச்.டி., சென்னை.

(5) 1971 — பரிபாடலில் இயற்கை - அன்னி மிருதுலகுமாரி தாமசு, எம்.ஏ. கேரளம்.

(6) 1972 — ஆற்றுப்படையில் இயற்கைப் பின்னணி - ஆயிஷா பேகம், எம். ஏ., கேரளம்.

## அறிவியல் ஆய்வு

1. சங்க இலக்கியத்தில் மலர்கள் - தாயம்மாள், எம். ஏ; கேரளம்: 1967, (வெளியிடப்படாதது.)
2. பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள் - செ. வேங்கடராமச் செட்டியார், பாரி நிலையம், சென்னை - 1960.
3. சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம் - பி. எல். சாமி, கழகம், சென்னை - 1967.
4. சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம் - பி. எல். சாமி, கழகம், சென்னை - 1970.
5. சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம் - பி. எல். சாமி, கழகம், சென்னை - 1976.
6. சங்க நூல்களில் மீன்கள் - பி. எல். சாமி, சேகர் பதிப்பகம், சென்னை - 1976.

# 2. சங்க இலக்கியத்தில் அணிநலம்

**சி. பாலசுப்பிரமணியன்**

தமிழிலக்கிய வரலாற்றில் சங்க காலம் பொற்காலம் எனப் போற்றப்பெறும் பெற்றி வாய்ந்ததாகும். முன்னைப் பழமைக் கும் பழமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் சங்க இலக்கியம் தொல்காப்பிய இலக்கணத்தின் பெரும்பகுதி யினையொட்டிக் காணப்படுகின்றது. பழந்தமிழ் இலக்கியமாகிய சங்க இலக்கியம் காதலையும் வீரத்தையும் பெரும்பாலும் பாடு பொருளாகக்கொண்டு எழுந்துள்ளது எனலாம். அறிஞர் எம்.எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை அவர்கள் ''காதலும் போரும் பழந்தமிழ் இலக்கியத்தின் பிழிவாகவும், சமயமும் தத்துவமும் இடைக்கால இலக்கியங்களின் சாரமாகவும், அறிவியலும் மானிடவியலும் இக் கால இலக்கியங்களின் போக்காகவும் இலங்குகின்றன'' என்று குறிப்பிட்டுள்ளார்.

சங்கத் தமிழ்ப் பாக்கள் அவை எழுந்த காலத்திலேயே பெரிதும் மக்களால் போற்றி வரவேற்கப்பட்டன எனலாம். ஏனெனில் பல அரசுகள் எழுந்த தமிழ்நாட்டில் மதுரை மாநகரம் சங்கம் வளர்த்த தலையாய நகரமாய்த் துலங்கியது. ஆண்டு தோறும் புத்தம் புதிய கவிதைகளைத் தமிழ் நாடெங்கிலும் வாழ்ந்த கவிஞர்கள் இயற்றிக் கொண்டுவந்து மாடங்கள் நிறைந்த மதுரை மாநகரில் இளவேனிற்காலத்து நிலாக்கால இரவுகளில் பொதுமக்கள் பலரும் கூடியுள்ள அவையில் அரங்கேற்றம் செய்வர். பொருள்தேடச் சென்ற தலைவன் தான் திரட்ட நினைத்த அளவு பொருள் சேர்க்க முடியாமற் போய்விடினுங்கூட, புத்தம் புதுக் கவிதைகள் அரங்கேறும் அவ்விளவேனிற் காலத்தின் நிலவெறிக் கும் இனிய இராப்போதில் மதுரைக்கு வந்து கவிச்சுவையில் திளைப்பதில் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டான் என்ற குறிப்பு கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையிற் காணப்படுகின்றது. எனவே தாம் எழுந்த காலத்திலேயே வாழ்வும் வளமும் பெற்றவை சங்க இலக்கியங்கள் எனலாம்.

மேலும் சங்ககாலத்து அரசர்களும் புலவர் பெருமக்களால் பாடல்வழிப் புகழப்படுவதனைப் பெரும்பேறாகக் கருதினர் என்பதனைத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் வஞ்சினக் கூற்றாலறியலாம். மாங்குடி மருதனாரைத் தலைமைப் புலவராகக் கொண்ட புலவரவை தன்னைப் பாட வேண்டும் என்ற விருப்பம் அம்மன்னன் வாய்மொழியாலேயே விளக்கமுறுவதனை மதுரைக் காஞ்சி புலப்படுத்துகின்றது.

காதல்,. வீரம், கொடை முதலிய பண்புகளைப் பாடுவது சங்கப் பாடல்களின் முதன்மை நோக்கம். இயற்கையின் வருணனை காதல், வீரம், கொடை முதலிய நிகழ்ச்சிகளைப் பாடுவதற்குப் பின்னணியாக அமைந்து இரண்டாம் இடத்தினைக் கவிதையிற் பெறுகின்றது.

சங்க இலக்கியம் அணிநலஞ் சிறக்கப் பெற்று மிளிர்வதனைக் காணலாம். சங்க இலக்கியத்தினை உவமைக் களஞ்சியம் என்று குறிப்பிட்டுப் பின்வருமாறு டாக்டர் மு. வரதராசனார் கூறுவர்:

''பிற்காலத்து நூல்களில் வரும் உவமைகள் பலவும் சங்கப் பாட்டுகளுக்குக் கடன்பட்டவை எனலாம். சங்க நூல்களில் அந்த உவமைகள் இயல்பாக அமைந்து காணப்படுகின்றன. அந்தப் பழங்காலப் புலவர்களால் அமைத்துத் தரப்பட்ட உவமைகளைப் பிற்காலத்தார் அவ்வாறே பின்பற்றி வழங்கியுள்ளனர்.''

(தமிழ் இலக்கிய வரலாறு, ப. 59)

பிற்காலத்தெழுந்த அணியிலக்கண நூல் தண்டியலங்காரமாகும். இந்நூலிற் பல அணிவகைகள் கூறப்பட்டிருந்தாலும் பழைய நூலான தொல்காப்பியத்தில் உவமை அணி ஒன்றே கூறப்பட்டுள்ளது. ஒரு பொருளைத் தக்க ஒப்புமை காட்டி விளக்கும் உவமை வினை, பயன், மெய், உரு ஆகிய நான்கு வகையில் பிறக்கிறது எனத் தொல்காப்பியப் பொருளதிகாரம் விளக்குகின்றது.

வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்

(தொல். உவம. 1)

மேலும் அவர் உயர்ந்த பொருள்வழி உவமையை விளக்க வேண்டும் என்பர்.

உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை.

(தொல். உவம. 3)

மேலும் அவர் சிறப்பு, நலன், காதல், வலி ஆகிய நிலைக் களன்களால் உவமை சிறப்புறும் என்பர்.

சிறப்பே நலனே காதல் வலியொடு
அந்நாற் பண்பும் நிலைக்களம் என்ப

(தொல். உவம. 4)

உயர்ந்த பொருளையே உவமை காட்ட வேண்டும் என்ப தற்கு எடுத்துக்காட்டாக உரையாசிரியர்கள்,

அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்

(பட்டினப். 298)

என்ற அடியினைக் காட்டுவர். வலிமை மிகுதியுடைய விலங்குகள் பலவற்றினும் அரிமா உயர்ந்த விலங்காதலின் அஃது உவமை யாகக் காட்டப்பட்டது என்பர் இளம்பூரணர். குறுந்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலின் முதலடியான 'தாமரை புரையும் காமர் சேவடி' என்பதைக் காட்டி, சிறப்புடைய பல பொருள் களிலும் தாமரை உயர்ந்ததாதலின் அஃது உவமை கூறப்பட்டது என்று அவர் மேலும் கூறுவர். இவ்வாறே சிறப்புப்பற்றி வந்த உவமைக்கு,

முரசுமுழங்கு தானை மூவரும் கூடி
அரசவை இருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை எழாஅல்

(பொருநர். 54.56)

என்ற அடிகளையும், நலம் பற்றி வந்த உவமைக்கு,

ஓவத் தன்ன இடனுடை வரைப்பின் (புறம். 251, 1)

....................................

என்ற அடியினையும், காதல் பற்றி வந்த உவமைக்கு,

கண்போல்வான் ஒருவனுளன் (தொல்.உவம. சூ. 4)

என்னும் அடியினையும், வலிமை பற்றி வந்த உவமைக்கு,

அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்
(பட்டினப். 298)

என்ற அடியினையும் எடுத்துக்காட்டுவர்.

இனி, சங்க இலக்கியத்திற் காணலாகும் உவமைகள் சில வற்றைக் காணலாம்.

**எடுத்துக்காட்டுவமை :**

பிற்காலத்தே எடுத்துக்காட்டு உவமையணி என்று குறிப் பிடப்பெறும் அணி ஒரோவழி சங்க இலக்கியத்திற் காணப்படுகின் றது. இவ்வணியிற் கூறப்பெறும் செய்திகள் அனைவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய - ஐயந்திரிபற ஒப்புக்கொள்ளக்கூடிய செய்திகள் எனலாம். புதிய கருத்தொன்றனைச் சொல்லவரும் புலவன் உலக மக்கள் ஏற்கெனவே உறுதியாக ஒப்புக்கொண்ட சில உண்மைகளை எடுத்துக்காட்டி, அவை போலவேதான் இப்போது கூறவரும் செய்தியும் ஒக்கும் என்பான். ஆனால் அவற்றில் உவம உருபு இடம் பெறாது.

புறநானூற்றுப் பாடலில் இவ்வணி சிறப்பாக விளக்கப்படு கிறது. மலைச்சாரலில் வாழும் மறப்புலி மாறுபட்டுச் சினந் தெழுந்தால் அதனை எதிர்க்கும் மான் கூட்டம் ஏதும் இல்லை; கதிரவன் சினந்து நின்றால் அதன் முன் இருள் நிற்காது; நுண்ணிய மணல் தெறிக்கவும், கல் பிளக்கவும் நடக்கும் எருதுக்குத் தான் நடப்பதற்கெனத் தனித்துறை ஏதும் தேவையில்லை; இதைப் போலவே அதிகன் போர்க்களம் புகுந்துவிட்டால் அவனை எதிர்த்து நிற்கும் வீரர்களும் இல்லை என்ற கருத்து பின்வரும் பாடலிற் குறிப்பிடப்படுகின்றது.

அடைமல்கு குளவியொடு கமழும் சாரல்
மறப்புலி உடலின் மான்கணம் உளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
இருளும் உண்டோ ஞாயிறு சினவின்
அச்சொடு தாக்கிப் பாருற் றியங்கிய
பண்டச் சாகாட்டு ஆழ்ச்சி சொல்லிய..
அரிமணல் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பொருநரும் உளரோ நீகளம் புகினே! (புறம். 90)

**தற்குறிப்பேற்ற உவமை :**

உலகில் இயல்பாக நிகழும் ஒரு நிகழ்ச்சியின்மீது கவிஞன் தன் கற்பனையை ஏற்றிப் பொருள் பொருத்தமுற உவமை கூறுவது தற்குறிப்பேற்றம் ஆகும்.

ஊடியிருந்த காதலரைக் கூடி மகிழுமாறு கூவியழைப்பது போலக் குயில் கூவுதல் விளங்கியது எனப் பின்வரும் நற்றிணைப் பாடல் நவிலும்.

பொதும்புதோறு அல்கும் பூங்கண் இருங்குயில்
கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகறல் ஓம்புமின் அறிவுடை யீரெனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய்யுற இருந்து மேவர நுவல....

(நற். 243.4-8)

சோலையில் இயல்பாகக் குயில் கூவுவதனை, அஃது ஊடியிருக்கும் காதலர்களைக் கூடி மகிழுங்கள் என்று கூவுவதாகக் கவிஞர் குறிப்பிடுவது தற்குறிப்பேற்றவணியாகும்.

**தடுமாறு உவமை :**

ஒரே இடத்தில் பொருளுக்கு உவமை கூறப்பட்டு, மீண்டும் அவ்வுவமை பொருளாகவும் தோன்ற அமைக்கப்பட்டால் அது தடுமாறுவமம் என்று கூறப்படும்.

நற்றிணைப் பாடலொன்றில் இத்தகைய தடுமாறுவமம் ஒன்றினைக் காணலாம்.

தும்பியொன்று நாவற்பழத்தைத் தன் இனமாகக் கருதி அதனை மொய்க்கின்றது. அந்தத் தும்பியை நாவற்பழம் எனக் கருதி நண்டு ஒன்று அதனைப் பற்ற முயல்கிறது. அப்போது அத்தும்பி வாய்விட்டுக் கத்துகின்றது. இதில் தும்பி நாவற்பழத்திற்கும், நாவற்பழம் தும்பிக்கும் உவமைப்படுத்தப்பட்டிருப்பதனைக் காணலாம்.

புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழம்செத்துப்
பல்கால் அலவன் கொண்டகோட்கு அசாந்து
கொள்ளா, நரம்பின் இமிரும் பூசல் ....

(நற். 35:2-5)

**விலக்குவமை:**

உவமைகளை முதற்கண் அமைத்து அவற்றைக் காரணங்கூறி மறுத்துக் கூறலும் உண்டு. அதனை விலக்குவமை அணி என்பர்.

முதலாவதாக, கலித்தொகையின் ஒரு பாடலில் நிலவு, மூங்கில், குவளைப் பூ, மயில், கிளி முதலியவை தலைவியின் பல்வேறு உறுப்பு நலன்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுப் பின் அவை பொருந்தா என விலக்கும் எதிர்மறைக் கூற்றும் உடன் அமையக் காணலாம். இவ்வாறு மறுப்பதால் உவமைகளைக் காட்டிலும் உவமேயப் பொருள் உயர்ந்தது என்னும் கருத்துப் பிறக்கின்றது.

முதலில் தலைவன் தலைவியின் நெற்றியையும், முகத்தை யும், தோள்களையும், கண்களையும், மெல்லிய சாயலையும், இனிய சொற்களையும் கண்டு வியந்து நிற்கிறான். பிறகு அவ் வுறுப்புகளுக்கும் பண்புகளுக்கும் தக்க உவமை கூறிப் பொருத்திப் பாராட்டுகின்றான். ஆயினும் அவ்வனைத்தும் அவன் காதலியின் அழகுக்குப் பொருத்தமானவையாக-அவன் மனத்திற்கு நிறைவு தருவனவாக இல்லை. எனவே முன்னே உவமை கூறிய பொருள் களையே பொருந்தா எனக்கூறி விலக்கி விடுகின்றான்.

''நெற்றி வியத்தற்குரிய அளவில் தேய்ந்து குறுகி உள்ளது; அதனால் இது பிறைமதியன்று. முகத்தில் மாசு ஒன்றும் இல்லை; அதனால் அது முழுமதியன்று. தோள்கள் மூங்கிலையொத்து உள்ளன. எனினும் மூங்கில் தோன்றும் இடமான மலை அங் கில்லை. கண்கள் மலரை நிகர்த்துள்ளன; எனினும் அப்பூக்கள் பூக்கும் சுனை அங்கு இல்லை.

அவள் மிகவும் மெல்ல நடக்கிறாள்; எனினும் அவள் மயில் அல்லள். குழைந்து குழைந்து பேசுகின்றாள்; எனினும் அவள் கிளி அல்லள்'' என்று மறுப்புக்குரல் எழுப்பிப் பழகிய உவமைகளை விலக்கி அவள் அழகுச் செவ்வியை மிகுதிப்படுத்தி யுரைக்கின்றான். ஒருவகையில் வியப்புச் சுவையும் கலப்பதனால் மருட்கை உவமை என்றும் உரைக்கலாம். அக்கலிப்பாடல் வருமாறு:

> நில்என நிறுத்தான் நிறுத்தே வந்து
> நுதலும் முகனும் தோளும் கண்ணும்
> இயலும் சொல்லும் நோக்குபு நினைஇ
> ஐதேய்ந் தன்று பிறையும் அன்று
> மைதீர்ந் தன்று மதியும் அன்று

வேயமர்ந் தன்று மலையும் அன்று
பூவமர்ந் தன்று சுனையும் அன்று
மெல்ல இயலும் மயிலும் அன்று
சொல்லத் தளரும் கிளியும் அன்று. (கலி. 5 : 56-14)

புறநானூற்றிலும் இத்தகைய உவமை இடம் பெற்றுள்ளது. புலவர்களெல்லாம் பாரி பாரி என்று பாரியை உயர்வாகப் புகழ்கின்றனர். ஆனால் இவ்வுலகில் பாரி மட்டும் இல்லை; மாரியும் உண்டு; அம்மாரி பாரியைப் போலவே உலகோரைப் புரக்கின்றது என்று நிந்தை சொல்லும் போக்கில் பாரியைப் புகழ்ந்திருக்கக் காணலாம்.

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டுஈண்டு உலகுபுரப் பதுவே.

(புறம். 107)

தண்டியலங்காரம் இப்பாடலை விலக்கணிக்கு எடுத்துக் காட்டாகத் தருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

**இல்பொருள் உவமை :**

உலகில் இல்லாத பொருளை உவமையாகக் கொண்டுவந்து உவமை கூறுவதனை இல்பொருள் உவமை என்பர். இதனை அபூத உவமை என்று தண்டியலங்காரம் குறிப்பிடும்.

ஞாயிறும் திங்களும் இணைந்து மண்ணுலகிற்கு வருவதென்பது நடவாத ஒன்றாகும்; ஏன்? நடக்க முடியாத செயலும் ஆகும். ஞாயிறும் திங்களும் இணைந்து மண்ணகத்திற்கு வருதல் போல் தமிழ்நாட்டு மன்னர்கள் இருவரும் இணைந்து பகையரசர்களை வெல்லச் சென்றனர் என்று கூறப்படுவதனைப் புறப்பாடலொன்றிற் காணலாம்.

உரவுச்சினம் திருகிய உருகெழு ஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலன்சேர்ந் தாங்கு
உடலருந் துப்பின் ஒன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை உணங்கப் பண்ணி

(புறம். 25:3-6)

இது போன்றே திங்களுள் தீத்தோன்றுவதும், நிழல் நிறைந்த குளத்து நீர்க் குவளை வெந்தழிவதும், ஞாயிற்றுள் இருள் தோன்று

வதும், தலைமகனின் வாய்மையிற் பொய் தோன்றுவது முதலான வற்றோடு உவமிக்கப்பட்டுள்ளமை இல்பொருள் உவமைகளுக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

குன்றகல் நன்னாடன் வாய்மையில் பொய்தோன்றில்
திங்களுள் தீத்தோன்றி யற்று,
ஈரத்துள் இன்னவை தோன்றின் நிழற்கயத்துள்
நீருள் குவளைவெந் தற்று,
தொடர்புள் இனையவை தோன்றின் விசும்பில்
சுடருள் இருள்தோன்றி யற்று.

(கலி. 41:23-24; 30-31;37-38)

**அந்தாதி உவமை:**

உவமையைப் பொருளாக்கியும் பொருளை உவமையாக்கி யும் இயைபுபடுத்தித் தொடுப்பது அந்தாதி உவமை என்பர்.

சிறுபாணாற்றுப்படையில் கதுப்பு உவமையாகவும் பொரு ளாகவும் வருகின்றது. இவ்வாறே சாயல், அடி, குறங்கு, வாழை, ஓதி, சுணங்கு, முலை, எயிறு முதலியனவும் உவமைகளாகவும் பொருளாகவும் அமைக்கப்பெற்று ஒரு தொடர்ச்சியாக ஒரு தொடர்பினைப்பெற்று வருகின்றன.

நெய்கனிந்து இருளிய கதுப்பின்; கதுப்பென
மணிவயின் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயில்மயில் குளிக்கும் சாயல்; சாஅய்
உயங்குநாய் நாவின் நல்லெழில் அசைஇ
வயங்கிழை உலறிய அடியின்; அடிதொடர்ந்து
ஈர்ந்துநிலந் தோயும் இரும்பிடித் தடக்கையின்
சேர்ந்துடன் செறிந்த குறங்கின்; குறங்கென்
மால்வரை யொழுகிய வாழை; வாழைப்
பூவெனப் பொலிந்த ஓதி; ஓதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும்பு அரற்றும் சுணங்கின்; சுணங்குபிதிர்ந்து
யாணர்க் கோங்கின் அவிர்முகை எள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை; முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்
இன்சேறு இகுதரும் எயிற்றின் எயிறென ....

(சிறுபாண். 14-28)

**இரட்டை உவமை:**

'இரட்டைக் கிளவியும் இரட்டை வழித்தே' என்பது தொல்காப்பிய உவமவியல் நூற்பா. அடையும், அது சிறப்பிக்கும் பொருளும், உவமையிலும் அடையும் பொருளுமாக இயைந்து வரும்.

எடுத்துக்காட்டாக, சண்பின் காயின் சுண்ணம் பூசப்பெற்ற மார்பு, பொன் துகள் படிந்த உரைகல்லை உவமையாகப் பெற்றுள்ளதனைப் பெரும்பாணாற்றுப்படையில் காணலாம்.

பொன்காண் கட்டளை கடுப்பச் சண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பு.

(பெரும்பாண். 220-221)

நற்றிணையில் இடம்பெறும் முதற்பாடலில் இரட்டை உவமைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டினைக் காணலாம்.

நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி.... (நற். 1 : 6-7)

**நிரல்நிறை உவமை:**

உவமைகள் ஒன்றன்பின் ஒன்று அடுக்கிக் கூறப்படுகின்றன. அவற்றைத் தொடர்ந்து அதே முறை வைப்பில் பொருள்களும் அடுக்கிக் கூறப்படுகின்றன. இதனைத் தொல்காப்பியனார் நிரல் நிறை உவமை என்பர்.

நிரல்நிறத் தமைத்தல் நிரல்நிறை.

(தொல். உவம. 38)

சங்க இலக்கியத்தில் ஒழுங்காக, முறை பிறழாமல் உவமைகளும் பொருள்களும் அமையும் முறை-நிரல் நிறையணி-இடம் பெற்றிருக்கக் காணலாம்.

பொன்னும் மணியும் முறையே மகளிரின் மேனிக்கும் கூந்தலுக்கும் உவமைகளாக இடம் பெற்றுள்ளன.

பொன்னும் மணியும் போலும் யாழநின்
நன்னர் மேனியும் நாறிருங் கதுப்பும்.

(நற். 166 ; 1-2)

அடுத்து, மலரும் மூங்கிலும் போல மகளிர் கண்களும், தோள்களும் காட்சி தந்தன எனக் கூறப்பட்டுள்ளது.

போதும் பணையும் போலும் யாழநின்
மாதர் உண்கணும் வனைப்பின் தோளும்.

(நற். 166 : 3-4)

நெருப்பும் காற்றும் வானத்தில் தோன்றுவதைப் போலத் துன்பமும் இன்பமும் ஒரே இடத்தில் அமைகின்றன என்பதனை நற்றிணைப் பாடலொன்று நவில்கின்றது.

தீயும் வளியும் விசும்பு பயந்தாங்கு
நோயும் இன்பமும் ஆகின்று மாதோ. (நற். 294:1–2)

**பல்பொருளுவமை :**

ஒரு பொருளுக்கு ஓர் உவமை கூறுவது மரபாகும். ஒன்றுக்கு மேற்பட்ட பல பொருள்களை உவமையாகக் கூறும்பொழுது அது வியப்புணர்ச்சியினை வழங்குவதோடு கவிஞனின் கற்பனையாற்றலையும் காட்டி நிற்கின்றது. இவ்வாறு அமையும் உவமை அணியினைப் பல்பொருள் உவமையணி என வழங்குவர்.

முல்லை, மகளிர் பற்களுக்கு உவமை காட்டப்படுவது உண்டு; இது போன்றே முத்தும் மகளிர் பற்களுக்கு உவமை கூறப்படுவது உண்டு. சில சமயங்களில் முல்லையும் முத்தும் மகளிரின் பற்களுக்கு உவமையாகத் தரப்படுவதும் உண்டு. வெண்ணிறமும், வடிவும், ஒளியும் இவற்றின் பொது இயல்புகளாகக் கொள்ளலாம்.

முகைமுல்லை வென்று எழில்முத்து ஏய்க்கும் வெண்பல்.

(பரி. 8. 76)

அன்னமும் மயிலும் புறாவும் மகளிரின் நடைக்கும் சாயலுக்கும் எழிலுக்கும் முறையே உவமிக்கப்பட்டுள்ளன.

ஆய்தூவி அனமென அணிமயில் பெடையெனத்
தூதுணம் புறவுஎனத் துதைந்தநின் எழில்நலம்.

(கலி. 56:15— 16)

**பிறிதுமொழிதலணி :**

கவிஞன், தான் கருதிய பொருளைக் கூறாமல் வெறும் உவமையை மட்டும் கூறிவிடுதல் ஒட்டணி அல்லது பிறிதுமொழி தலணி எனப்படும்.

கருதிய பொருள்தொகுத்து அதுபுலப் படுத்தற்கு
ஒத்ததுஒன்று உரைப்பின்அஃது ஒட்டென மொழிப.

(தண்டி. 52)

இவ்வணியினை நன்கு விளக்கக் கலித்தொகைப் பாடலொன்று எடுத்துக்காட்டாய் இலங்குகின்றது. எவரொருவரும் குளத்திற்குச் சென்று நீரைப் பருகுவது என்பது தங்கள் தாக விடாயைத் தீர்த்துக்கொள்வதற்குத்தானே தவிர அச்செயல் நீருக்கு இனிமை தரும் என்பதால் அன்று. இது போன்றே காதலன் ஒருவன் தான் விரும்பும் காதலியினைத் தழுவிக் கொள்வது தன் விருப்பம் தணிவதற்குத்தானே தவிர, அச்செயல் காதலிக்கு உவப்பளிக்குமா இல்லையா என்பதற்காக அன்று.

> வேட்டார்க்கு இனிதாயின் அல்லது நீர்க்கு இனிதென்று
> உண்பவோ நீருண் பவர்.
>
> (கலி. 62:10-11)

நற்றிணைப் பாடலொன்றும் பிறிதுமொழிதலணி துலங்கத் திகழ்வதனைக் காணலாம்.

மரம் சாகும் அளவிற்கு அதனை வெட்டி மருந்தாக மக்கள் கொள்ளமாட்டார்கள். அதுபோலவே உடல் உரம் அழியும் அளவிற்குத் தவத்தை மேற்கொள்ள மாட்டார்கள்; மக்கள் வளம் கெடும் அளவிற்கு மன்னர் வரிப்பொருளைக் கொள்ள மாட்டார்கள்.

> மரஞ்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்
> உரஞ்சாச் செய்யார் உயர்தவம்; வளம்கெடப்
> பொன்னும் கொள்ளார் மன்னர். (நற். 226:1-3)

**விபரீத உவமை:**

உவமையும் பொருளும் இடம் மாறி அமைவதால் ஒரு புதுமை விளையக் காணலாம்.

> பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
> மருளறு சிறப்பின் அஃது உவமமாகும்.
>
> (தொல். உவம். 9)

குவளை போன்ற கண் என்பது இயற்கையான உவமை; கண்போல் குவளை என்பது மாற்றம்; விபரீதம்.

தலைவியின் வடிவத்தை மயிலுக்கும், அவள் கூந்தலில் எழும் மணத்தை முல்லை மலரின் நறுமணத்திற்கும், அவள்தன் மருண்ட விழிகளை மானின் நோக்கிற்கும் தொகுத்து உவமை செய்யப்படுகின்றன.

நின்னே போலும் மஞ்ஞை யால, நின்
நன்னுதல் நாறு முல்லை மலர,
நின்னே போலு மாமருண்டு நோக்க,
நின்னே உள்ளி வந்தனென்
நன்னுதல் அரிவை காரினும் விரைந்தே.

(ஐங். 492:1-5)

**மாலை உவமை :**

உறவும் தொடர்பும் உள்ள பொருள்கள் ஒன்றோடு ஒன்று பிணைக்கப்பட்டு ஒரு மாலைபோல் அமையுமேயானால் அது மாலை உவமை எனப்படும். இஃது அந்தாதி உவமையோடு நெருங்கிய தொடர்புடையது.

பரிபாடலில் மாலை உவமை மாண்புறப் பொருந்தி வந்திருக்கக் காணலாம்.

திருமாலின் கொப்பூழில் தோன்றிய தாமரைப் பூவினைப் போன்றது சீரூர். அப்பூவின் இதழைப் போன்றன தெருக்கள்; இதழகத்து முகையைப் போன்றது அரசன் கோயில்; அப்பொகுட்டில் உள்ள தாதுக்களைப் போன்றவர் தண்டமிழ்க் குடிமக்கள்; அத்தாதினைத் தேர்ந்து உண்ணவரும் பறவைகளைப் போன்றவர் பரிசிலர் என்று குறிப்பிடப் பெறுவதனைக் காணலாம். கீழ்க் காணும் பரிபாடலில் உவமைச் செய்திகள் அந்தாதித் தொடை போன்று அமைந்து, ஒன்றனோடு ஒன்று தொடர்பு பெற்று மாலை போல் காட்சியளிக்கின்றன.

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர்; பூவின்
இதழகத்து அனைய தெருவம்; இதழகத்து
அரும்பொகுட்டு அனைத்தே அண்ணல் கோயில்;
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்;
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர்.

(பரி. திரட்டு-7:1-6)

**வேற்றுமை அணி :**

பொருளுக்கும் உவமைக்கும் வேறுபாடு காட்டி, இவை யிரண்டும் ஒவ்வா எனக் குறிப்பிட்டுப் பொருளைச் சிறப்பித்தல் வேற்றுமை அணி எனப்படும். உவமையினும் பொருளே சிறந்தது என்பது இதன் தனிச் சிறப்பாகும்.

புறநானூற்றில் வேற்றுமையணிக்குச் சிறந்த எடுத்துக் காட்டு காணலாம். சேர மன்னனொருவன் கதிரவனோடு உவமிக்கப்படுகின்றான். இவ்வவுவமையில் கதிரவன் சேரனோடு மாறுபடும் சிறப்புகளைச் சுட்டிக் காட்டிப் பின் வேறுபாடும் காட்டப்படுகின்றது.

கதிரவன் குறிப்பிட்ட காலங்களில் உதிக்கிறான்; இடம் விட்டு இடம் ஓடுகின்றான்; தன் நிலையில் மாறுபடுகின்றான்; மலையில் மறைந்து ஒளிந்து விடுகின்றான்; பகலில் மட்டும் உலகிற்கு ஒளி தருகின்றான். சேரமன்னன் இதற்கு மாறாக வீரமும், ஒடுங்கா வுள்ளமும், ஓம்பா ஈகையும் கொண்டு திகழ்கின்றான்; அவன் தோன்றுவதற்குக் குறிப்பிட்ட காலம் இடம் என்ற வரையறை இல்லை; எந்தக் காலத்திலும் இரவலர்க்குக் கொடை வழங்குவான்; பிறரிடமிருந்து அவன் தன்னை மறைத்துக்கொள்வதில்லை; தனக்கென எதையும் ஒதுக்கி வைத்துக் கொள்வதில்லை. இவ்வாறு சில வேறுபாடுகளைச் சுட்டிக்காட்டிக் கதிரவன் சேர மன்னனுக்கு ஒப்பாக மாட்டான் என்று நயம்படக் கிளத்துகின்றார் புலவர்.

ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்ஙனம் ஒத்தியோ வீங்குசெலல் மண்டிலம்
பொழுதென வரைதி புறங்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந்து ஒளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியால் பல்கதிர் விரித்தே.

(புறம். 8:4-10)

**சில சிறந்த உவமைகள்:**

கபிலர் 'குறிஞ்சி பாடக் கபிலர்' எனப் பாராட்டப் பெறுபவராவர். தோழி தலைமகள் தலைமகனிடத்துக்கொண்ட காதலைப் புலப்படுத்தும் நயம் போற்றத்தக்கது. பலா மரத்தின் சிறிய கிளையில் பெரிய பழம் தொங்குவது போன்று தலைவியின் சிறிய உயிர் கொண்ட இவள் உடம்பில் பெரிதான காமம் நிறைந்திலங்குகின்றது என்றாள்.

.............சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.

(குறுந். 18: 3-5)

நல்ல பசுவின் இனிய பாலானது அப்பசுவின் கன்றினாலும் உண்ணப்படாமல் கறக்கும் பாத்திரத்திலும் விழாமல், தரையிற் சிந்தி வீணானது போல, தலைமகளின் மாமையாகிய பேரழகு அவளுக்கு அழகு பயந்து நிற்பதாகாமலும், அவள் தலைவனுக்கு இன்பம் பயவாமலும் பசலையானது உண்ணுதற்கு இடமாகப் போகின்றது என்ற கருத்தை உள்ளடக்கிய பாடல் உவமை நலத்தால் சிறந்து விளங்குகின்றது.

கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்தூக் காஅங்கு
எனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை யுணீஇயர் வேண்டும்
திதலை யல்குலென் மாமைக் கவினே.

(குறுந். 27)

வாழ்வில் முன்பின் தொடர்பு ஒரு சிறிதும் இல்லாத தலைமகனும் தலைமகளும் ஊழ்வயத்தால் எதிர்ப்பட்டுக் கூடி மனம் ஒன்றுபடுதலைச் செம்மண் பூமியில் விழுந்த மழைநீர் செம்மண் நிறத்தைப் பெறுதலுக்கு உவமை காட்டிய புலவர் 'செம்புலப் பெயனீரார்' எனப்பட்டார்.

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே.

(குறுந். 40)

தலைமகள் ஒருத்தி, தலைமகன்மாட்டுக் கொண்ட காதலின் மிகுதியால் அவன் நாட்டு வறண்ட குழிகளில் மான் உண்டு எஞ்சிய கலங்கல் நீர் தேன்கலந்த பாலினும் இனியது என்று இயம்புகின்றாள்.

தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு
உவலைக் கூவல் கீழ
மானுண்டு எஞ்சிய கலுழி நீரே. (ஐங். 203:2-4)

ஞாயிறு காயும் வெம்மையான பாறையின் பக்கத்தில் கையில்லாத ஊமன் கண்களாலேயே காக்கும் வெண்ணெய் உணங்கல் போலத் தலைமகனின் காதல் நோய் பரவியுள்ளது என்று கூறப்படுகிறது.

ஞாயிறு காயும் வெவ்வறைற் மருங்கில்
கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற்கு அரிதே.

(குறுந். 58)

பழமொழியினை உவமையாக அமைத்தலுக்கும் இப்பாடலை எடுத்துக்காட்டலாம்.

**இதிகாசக் கதை நிகழ்ச்சிகளை உவமையாக எடுத்தாளல்:**

வள்ளலிடமிருந்து பெற்று வந்த பரிசுப் பொருள்களில் உயர்ந்த அணிகலன்களைப் புலவர் தம் சுற்றத்தினரிடம் தர, அவ்வணிகலன்களை எங்கெங்கே அணிந்து கொள்வது என்று தெரியாமல் முறைமாற்றி அணிந்து கொண்டனராம். இதற்கு இராவணன் சீதையை வௌவிச் சென்றபோது சீதை தன் அணிகலன்களைத் தரையில் போட, பின்னாளில் அதனைக் கண்டெடுத்த குரங்குகள் அவற்றை அணிந்துகொள்ளத் தெரியாமல் முறை மாற்றி அணிந்தமை உவமையாகக் கூறப்படுகிறது.

கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தாஅங்கு.

(புறம். 378 : 18-21)

**ஐம்பெரும் பூதங்களை உவமை காட்டல்:**

நிலம், நீர், தீ, காற்று, விசும்பு ஆகிய ஐம்பெரும் பூதங்களின் ஆற்றலோடு மன்னனின் பொறுமை, சூழ்ச்சி, வலிமை, ஆக்கல், அழித்தல் முதலிய ஆற்றல்கள் உவமிக்கப்படுகின்றன.

மண்திணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும்என் றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய்!

(புறம். 2:1-8)

**மகளிர் அழகுக்கு ஊர்களின் எழில் :**

சங்கக் கவிஞர்கள் பெண்களின் அழகைச் சில ஊர்களின் எழிலோடு உவமித்துப் பேசியிருக்கும் சிறப்பினைப் பின்வரும் தொடர்கள் கொண்டு அறியலாம்.

தண்குடவாயில் அன்னோள். (அகம். 44.18)

பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎம்
ஒண்டொடி. (அகம். 46.14)

**உவமை வழி வரலாற்றுச் செய்திகள் :**

தனக்குக் காப்பினை மிகுதிப்படுத்திய தாயினைக் கடிந்து கொள்ளும் தலைமகள், தன் தாய் பெண் கொலை புரிந்த நன்னன் போல வரையாநிரயத்துச் செல்ல வேண்டும் என மொழிந்துள்ளது கொண்டு உவமைவழி, சில வரலாற்றுச் செய்திகளை அறிகிறோம்.

பெண்கொலை புரிந்த நன்னன் போல.
(குறுந். 292.5)

**உள்ளுறை உவமை :**

திணையை உணர்வதற்கு உள்ளுறை உவமம் பெருந்துணை புரியும் என்பர் தொல்காப்பியனார்.

உள்ளுறை உவமம் ஏனை உவமம்எனத்
தள்ளா தாகும் திணையுணர் வகையே.
(தொல். அகத். 46)

கருப்பொருளோடு சார்த்தி ஒத்துப் பொருள் கொள்ளும் வகையில் இவ்வுள்ளுறைச் செய்தி கொள்ளப்படுகின்றது.

உள்ளுறுத் திதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத் திறுவதை உள்ளுறை உவமம்.
(தொல். அகத். 48)

உள்ளுறை உவமம் குறிப்பாகக் கொள்ளத்தக்கது என்றும், ஏனையுவமம் வெளிப்படையாக உணரத்தக்கது என்றும் கூறுவர்.

ஏனை உவமம் தானுணர் வகைத்தே.
(தொல். அகத். 49)

கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்.

(குறுந். 8:1-2)

''வயலருகிலுள்ள மாமரத்தினது கனிந்து வீழ்கின்ற இனிய பழத்தைப் பொய்கையிலுள்ள வாளை மீன்கள் கவ்வி உண்ணுதற்கு இடமாகிய ஊரையுடைய தலைவன்'' என்பது இதன் பொருளாகும்.

ஈண்டுக் கழனியினைத் தலைமகள் வாழும் ஊராகவும், மாமரத்தினைத் தலைமகளாகவும், மாம்பழத்தினைத் தலைமகனாகவும், பழனத்தினைப் பரத்தையர் வாழும் சேரியாகவும், வாளை மீன்களைப் பரத்தையராகவும் கொண்டு பார்த்தால் ஓர் அரிய உள்ளுறைக் கருத்துப் புலப்படும். தலைமகனே தலைமகளை விட்டு நீங்கிப் பரத்தையை நாடிச் சேர்ந்தானென்பதும், பரத்தை எந்த வகையிலும் பழிக்கத்தக்கவள் அல்லள் என்பதும் பொருள் வெளிப்படையாகும்.

**இறைச்சி :**

இறைச்சி என்பது கருப்பொருளின் புறத்ததாகவே பெறப்படும் குறிப்புப் பொருளாகும்.

இறைச்சி தானே பொருள்புறத் ததுவே.

(தொல். பொருளியல். 34)

கருப்பொருள்களின் புறத்ததாகக் கொள்ளப்படும் இறைச்சி வேறு; உவமை வழியாக உள்ளுறையைப்போல அமைக்கும் இறைச்சி வேறு என்பர் நச்சினார்க்கினியர்.

இறைச்சியில் பிறக்கும் பொருளு மாருளவே
திறத்தியல் மருங்கில் தெரியு மோர்க்கே.

(தொல். பொருளியல். 35)

இலங்கும் அருவித்து இலங்கும் அருவித்தே
வானின் இலங்கும் அருவித்தே; தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை.

(கலி. 41)

இப்பகுதிக்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் வருமாறு:

''சூளைப் பொய்த்தான் என்பதே கூற வேண்டும் பொருள். அதன் புறத்தே இங்ஙனம் பொய்த்தான் மலையகத்து நீர் திகழ்

வான் என் என இறைச்சிப் பொருள் தோன்றியவாறு காண்க'' என்பர்.

இவ்வாறு சங்க இலக்கியத்தில் உவமை என்கின்ற ஓர் அணியே பல்வேறு வகையிற் பாங்குற மிளிர்ந்து நிற்கிறது. சங்க இலக்கிய உவமைகள் உணர்ச்சிக்கு நிலைக்களனாய், கற்பனைக்கு ஊற்றாய், வடிவம் அமைந்து, சிறந்த கருத்தின் கொள்கலனாய்த் திகழ்வதனைச் சிறப்புறக் காணலாம். சங்ககாலக் கவிஞர்கள் இயற்கையை நுணுகிக் கண்டு, மக்கள் வாழ்க்கையினை அவ்வினிய இயற்கையின் பின்னணியில் வடித்துப் படிப்போர் மனம் மகிழ்வ தோடு கருத்து விளக்கமும் பெறும் அளவில் உவமைகளைக் கையாண்டுள்ளனர். சங்க இலக்கியம் உவமைக் களஞ்சியமாக அமைந்து, நமக்கு உவகை ஊட்டுவதோடு, வாழ்க்கையை வழி நடத்திச் செல்லக் கருத்துக் கருவூலங்கள் தந்து ஒளிவிடுகின்றது எனில் அக்கூற்று மிகையாகாது.

---

## கலந்துரையாடல்

**ச. வே. சுப்பிரமணியன் :**

முதலில் பொருள்கள் தோன்றிப் பின்தான் சொற்கள் தோன்றி இருக்க வேண்டும். எனவே பொருள் முந்தியது, சொல் பிந்தியது எனச் சொல்வதே பொருந்தும்.

**சவரிமுத்து :**

ஒன்றும் இல்லாததிலிருந்து உலகை உண்டாக்குபவன் கடவுள் என்று கிறித்துவ நூலில் கூறப்பட்டுள்ளது. ஆகவே, பொருளுக்குப் பின்தான் சொல் தோன்றியது என்பது அவ்வளவு பொருத்தம் இல்லை. இறைவன் சொல்லிலிருந்தே அனைத்தையும் உண்டாக்கவல்லவன். ஆதலால் பொருளுக்கு முந்தியது சொல் எனக் கொள்ளலாம்.

**குளோரியா சுந்தரமதி :**

இயற்கையைப் புலவர்கள் தம் கருத்துக்கேற்பப் புனைந்து பாடுகிறார்களா? உள்ளதை உள்ளவாறே பாடுகிறார்களா?

**ச. வே. சுப்பிரமணியன் :**

சங்க இலக்கியத்தில் வரும் இயற்கைப் புனைவுகளை நோக்கும்போது, சில படைத்துக் கொள்பவைகளாகவும், சில உள்ளதை உள்ளவாறே கூறுவனவாகவும் அமைந்துள்ளன.

> துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
> பிடிஊட்டிப் பின்உண்ணும் களிறுஎனவும் உரைத்தனரே
> (கலி. 11 : 8, 9)

எனக் கலித்தொகையில் வரும் காட்சி உள்ளதை உள்ளவாறே புனைவதாகும். ஆனால்,

> சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
> பிணைமான் இனிதுண்ண வேண்டிக்-கலைமாத்தன்
> கள்ளத்தின் ஊச்சுஞ் சுரமென்பர் காதலர்
> உள்ளம் படர்ந்த நெறி (ஐந்திணை ஐம்பது. 38)

எனவரும் காட்சி புலவரின் கருத்துக்கேற்பப் புனைந்து கூறுவதாகும். இது சங்க இலக்கியக் காட்சியின் வளர்ச்சி நிலையாகும். இதில் சிந்தனையும் கலந்துள்ளது. கவிஞன் எதை நினைத்துப் பாடுகின்றானோ அதை நாம் உணராவிடில் கவிதை கற்றுப் பயனில்லை.

**முருகேசன் :**

தெய்வம் இயற்கைப் பொருளா?
இயற்கையைப் பாத்திரநிலையில் வைத்துப் பார்க்கலாமா?

**ச. வே.சுப்பிரமணியன் :**

> திங்களும் தெறுகதிர்க் கனலியும் நீ
> ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
> மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ (பரி. 1 : 45-47)

என்று இறைவனை இயற்கையாகவே பரிபாடற் புலவர் பாடியிருத்தலால் தெய்வமும் இயற்கையேயாகும்.

பரிபாடலில் வையை இயற்கை நோக்கில் மட்டும் பாடப்படவில்லை. விழா எடுக்கும் நிலை, புனல் விளையாட்டு முதலியவற்றை நோக்கும்பொழுது பாத்திரநிலையாகவும் கருதலாம். சங்ககாலத்தில் இயற்கை வெறும் இயற்கைக்காக மட்டும் பாடப்படவில்லை. இயற்கையைப் பின்னணியாகக் கொண்டு வாழ்க்

கைக்குரிய நல்ல கருத்துகளைப் புலப்படுத்தினர். இயற்கை நீமையைப் புலப்படுத்தத் துணையாக வருவதில்லை.

**சிவத்தம்பி :**

இயற்கையோடு இயைந்த வாழ்வென்றால் என்ன? இயற்கையைத் தன் ஆற்றலுக்குக் கீழ்க் கொண்டு வந்து கட்டுப் படுத்தினார்களா? சங்க இலக்கியத்தில் இயற்கை என்னும்போது கலித்தொகை, பரிபாடல் என்னும் நூல்களையும் சங்க இலக் கியத்தோடு சேர்த்துக் கொள்ளலாமா?

**இரா. சாரங்கபாணி :**

இயற்கை வாழ்வு என்றால் வாழ்கின்ற மக்கள், தாம் வாழும் இடத்திற்கேற்ப உணவு, உடை, தொழில் முதலியவற்றைக் கொண்டு வாழ்தலாகும். குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடியும், தேன், தினை முதலியவற்றை உண்டும் வாழ்ந்தனர். மலை யிலுள்ள மயிலைக் குறிஞ்சித் தெய்வமாகிய முருகனுக்கு ஊர்தி யாகக் கொடுத்தனர். தேனும் தினையும் அவனுக்குரிய உண வாகக் கருதப்பட்டன. முருகன் குறவள்ளியை மணந்தான். இப்படிக் குறிஞ்சி நிலக் குன்றவர் வாழ்க்கை கூறப்படும். முல்லை நில ஆயர் ஆடுமாடுகளை மேய்த்தும் கண்ணனைத் தெய்வமாகக் கொண்டும் வாழ்ந்தனர். கண்ணன் முல்லை நில நப்பின்னை என்ற இடைச்சியை மணந்து குழல் ஊதி ஆடுமாடுகளை மேய்த் தான். இவ்வாறு நிலத்திற்கேற்ற சூழ்நிலையில் வாழ்வதுதான் இயற்கையோடு இயைந்து வாழ்வதாகும். பரிபாடலிலும் கலித் தொகையிலும் வரும் சில சொற்களை மட்டும் பார்த்து விட்டுப் பிற்காலத்தவை என்று கூறலாகாது. அவ்விரு நூலும் நாடக வழக்கில் அமைக்கப்பட்டவை. ஆதலால், பேச்சு வழக்குச் சொற்கள் ஏனைய சங்க நூல்களினும் அவற்றில் மிகுதியாக வர வாய்ப்புண்டு. தண்பரங்குன்றத்து முருகனை அந்துவன் பாடியதாக மருதனிள நாகனார் பாடிய அகநானூற்றுப் பாடலில் ஒரு குறிப்புக் காணப்பெறுகின்றது.

> சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்
> சினம்மிகு முருகன் தண்பரங் குன்றத்து
> அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை. (அகம். 59)

தண்பரங்குன்றத்து முருகனை அந்துவன் பாடிய பாடல் பரி பாடலில் உள்ளது. ஆகவே, அகநானூற்றுப் புலவராகிய மருத னிளநாகனாரும் பரிபாடற் புலவராகிய அந்துவனாரும் ஒரே

காலத்தவர் என்பது போதரும். அதனால் பரிபாடல் பிற் காலத்தது எனும் கருத்து ஒவ்வாது.

**தமிழண்ணல் :**

பண்டையோர் இயற்கையைக் கட்டுப்படுத்தியும் வாழ்ந்தனர் என்பதற்குச் சில குறிப்புகள் காணப்படுகின்றன. 'வளிதொழில் ஆண்ட உரவோர் மருக' என வரும் ஆட்சி கொண்டு, காற்றைக் கட்டுப்படுத்தித் தமக்குத் துணையாகப் பயன்படுத்தினர் என அறிகிறோம்.

'வருவிசைப் புனலைக் கற்சிறைபோல
ஒருவன் தாங்கிய பெருமை'

என்பதால் நீரைக் கட்டுப்படுத்தியுள்ளனர் என்பதும் தெரிகிறது. இவ்வாறு ஓரோவழி இயற்கையைக் கட்டுப்படுத்திய குறிப்புக் காணப்படினும், இயற்கை கற்பனைக்கே பெரிதும் பயன்பட்டது. இயற்கைக்குத் திணை வழியில் சில மரபுண்டு. தலைவன் தலைவி யைப் பிரிந்து செல்லும் வழி பாலையாகவே இருக்கும். வினை முடித்து வீட்டிற்குத் திரும்பி வரும் வழி தண்பதப் பெருவழியாக இருக்கும். திணைகளுக்குச் சில இயற்கை மரபுகள் இருப்பது போலத் துறைகளுக்கும் உண்டு. இவற்றையெல்லாம் சங்கப் பாக்களை நுனித்தாய்ந்து அறிதல் வேண்டும்.

**ஒருவர் கருத்து :**

அரிசி, வரகு, தினை முதலியவற்றை உணவாகக் கொள்வது இயற்கையோடு இயைந்த வாழ்வைக் காட்டாது. அரிசி உண்பவர் செல்வராகவும், வரகு முதலியவற்றை உண்பவர் ஏழையாகவும் தெரிகிறது. அதனால் இது திணையோடு ஒட்டிய வாழ்க்கையைக் காட்டாது வாழ்க்கைப் போராட்டத்தைக் காட்டுகிறது.

**ச. வே. சுப்பிரமணியன் :**

இஃது இலக்கிய நோக்கில் எழுந்த கருத்தாகத் தெரிய வில்லை.

**சி. பாலசுப்பிரமணியன் :**

உவமையும் பொருளும் இடம்மாறி அமைவது விபரீத உவமை.

பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பின் அஃது உவமமாகும். (தொல். உவம. 9)

இதற்குக்

கண்போல் குவளை எடுத்துக்காட்டாகும்.

**இரா. சாரங்கபாணி:**

பொருளே உவமம் செய்தல் என்பதற்கு உவமேயத்தை உவமையாகக் கூறுதல் எனப் பொருள் கொண்டு, கண்போலும் குவளை என உதாரணம் காட்டுகின்றனர். இந்த நோக்கில் பார்த்தால் எவ்வெவற்றை உவமையாகக் கூற வேண்டும்; எவ்வெவற்றை உவமேயமாகக் (பொருளாகக்) கூற வேண்டும் என வரையறை இருப்பதுபோல் தோன்றுகின்றது. புலவன் தன் நோக்கில் எதையும் உவமையாகவும் உவமேயமாகவும் கூறலாம். தொல்காப்பியர் உவமானத்தை உவமை, உவமம் என்றும், உவமேயத்தைப் பொருள் என்றும் கூறுவர். 'பொருளே உவமம் செய்தல்' என்றவிடத்து உவமேயத்தையே பொருள் என்று குறிப்பிட்டுள்ளார். ஆகவே பொருள் என்பதற்கு உவமேயம் எனப் பொருள் கொள்ள வேண்டும் என்பர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார். உவமேயமாக வரும் பொருளை, ஒரோவழி உவமானமாகக் கூறினாலும், அப்பொருளுக்கு உவமானத்திற்குரிய சிறப்பினைக் கொடுத்தல் வேண்டும். காட்டாகச் சூது என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் சூது என்னும் பொருளையே உவமையாக வைத்துப் பிறிதொன்றைப் பொருளாகக் கூறுவர். கூறினாலும் சூதையே சிறப்பித்துக் கூறியதாக - பொருளையே உவமம் செய்ததாகக் கருதவேண்டும்.

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற் றுயிர்

என்னும் குறளில் பொருள் உவமமாக வருதல் காண்க.

**அடிகளாசிரியர் :**

உவமம் என்பது அணியாகவும் அளவாகவும் வருகிறது. தருக்க நூலில் அளவு என்னும் பொருளில் வரும். வடமொழியில் உவமானம் உவமேயம் என்பர். உவமானம் என்ற சொல் தொல்காப்பியத்தில் ஆட்சி இல்லை. உவமம் என்ற சொல் காணப்படுகிறது. உவமானம், உவமம் என்பன வெவ்வேறு என்று தோன்றுகிறது. உவமேயத்தைத் தொல்காப்பியர் பொருள் என்கிறார். உவமமும் தமிழ்ச் சொல்லே ஆதல் வேண்டும். உவமானம் என்ற சொல்லைத் திரித்து உவமை எனக் கூறவில்லை.

உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்பூர் வது. (குறள். 1185)

இங்கு உவ, இவ என்பன சுட்டுச் சொற்களாகும். இச்சுட்டுச் சொல்லாகிய 'உவ' என்பதன் அடிப்படையிலேயே உவமம் என்ற சொல் அமைந்திருக்கலாம். தொல்காப்பியர் சுட்டிக் கூறா உவமம் எனக் குறிப்பிடுகின்றார். இதனால் உவமையின் இயல்பு ஒன்றனைச் சுட்டிப் புலப்படுத்துதல் என்பது புலனாகும். உவமை உருபுகளுள் அன்ன, ஆங்க என்னும் சுட்டுச் சொற்களும் இடம் பெறுகின்றன. உவ என்ற வடசொல்லுக்கு ஒரு பொருளோடு மற்ற பொருளைச் சேர்த்துச் சொல்வது என்பது பொருளாகும். தமிழில் 'உவ' என்பது ஒரு பொருளோடு வேறொன்றைச் சுட்டி இயைத்துக் கூறுவதாகும். ஆதலின் உவமை, பொருள் என்னும் இரண்டும் தமிழ்ச் சொல்லேயாம். இவற்றைக் குறிக்கும் உவமானம் உவமேயம் என்பன வட சொற்கள் ஆகும்.

## முடிவுரை

தொல்காப்பியர் கூறும் வண்ணங்களிலும் சில அணிகளை அடக்கலாம். ஏந்தல்வண்ணம் என்பது சொற்பொருட் பின்வருநிலையணி ஆகும். முரண் தொடையை விரோத அணி என்பர். வடமொழியிலே பல கலைகள் இருந்தாலும் அவை தமிழ் நாட்டிற்கு உரியவைகளே. தமிழர்களே வடமொழி பயின்று, பல தமிழ்க் கலைகளை வடமொழியில் எழுதி அம்மொழியை வளர்த்துள்ளனர். வடமொழி கூறும் அணி வகைகள் பெரும்பாலும் தமிழ்மொழிக்கு உரியனவே. தொல்காப்பியர் உவமை இயலில் கூறும் அணிகள் சங்க இலக்கியங்களில் எவ்வாறு இடம் பெற்றுள்ளன எனக் காணலாம். அவர் கூறும் உவம உருபுகள் சங்க இலக்கியத்தில் பயின்றுள்ளனவா? வினை, பயன், மெய், உரு என உருபுகளைப் பகுத்துக் கூறும் அப்பாகுபாடு சங்க இலக்கியத்தில் பொருந்தி வருகின்றனவா? என்றெல்லாம் காண வேண்டும். ''இரட்டைக் கிளவி இரட்டை வழித்தே'', ''வேறுபட வந்த உவமத் தோற்றம்'', ''அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே'', ''ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே'', ''தடுமாறி வரலும் கடிவரை இன்றே'' என்னும் தொல்காப்பிய உவமை இயல் நூற்பாக்கள் காட்டும் அணிகள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளனவா என ஆய்ந்து காணல் வேண்டும். இவ்வாறு தொல்காப்பிய உவம இயலிற் கூறப்பெறும் அணிகள் சங்க இலக்கியத்தில் எங்ஙனம் வளர்ச்சி பெற்றுள்ளன எனக் காணலாம்.

---

# இரண்டாம் அமர்வு

## தலைவர் : ச. வே. சுப்பிரமணியன்

### முன்னுரை

சங்க இலக்கியப் பாடல்கள் மூன்று அடியிலிருந்து ஏறத்தாழ எழுநூறு அடிவரை இடம் பெற்றுள்ளன. சங்க இலக்கியத் துணுக்குகள், காப்பியச் செய்திகளுக்குத் துணையாய் அமைந்துள்ளன. ஆட்டனத்தி ஆதிமந்தி பற்றிய சங்க இலக்கியக் குறிப்பு சிலப்பதிகாரத்திலும் காணப்படுகிறது. சிலம்பில் வரும் பத்தினிப் பெண்டிர் எழுவர் கதைக்குச் சங்க இலக்கியமே அடிப் படையாகலாம். பரத்தைக்குள்ள இழிவை நீக்கி, இளங்கோ வடிகள் மாதவி பாத்திரத்தைப் படைத்துச் சிறப்புச் செய்துள் ளார். பரிபாடலில்வரும் திருமால் பற்றிய செய்தியை ஆய்ச்சியர் குரவையிலும் முருகன் பற்றிய செய்தியைக் குன்றக் குரவையிலும் காணலாம். காப்பியத்திற்கு வேண்டிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

# 3. சங்க இலக்கியங்களில் காப்பிய நோக்கு

தா. ஏ. ஞானமூர்த்தி

**தொன்மை இலக்கியம் :**

தமிழிலக்கியங்கள் அனைத்திலும் மிகத் தொன்மையானவை சங்க இலக்கியங்களே. அவை அகம், புறம் என இருவகைப் பொருள்களைக் கொண்டு தனி நிலைச் செய்யுட்களால் அமைந்தவை. இச்சங்ககாலத் தனிநிலைச் செய்யுட்களின் வளர்ச்சியே பின்பு தோன்றிய தொடர்நிலைச் செய்யுட்கள் அல்லது காப்பியங்கள் எனலாம்.

**காப்பிய வளர்ச்சியின் நான்கு நிலைகள் :**

சாட்விக்கு (Chadwick) என்பவர் காப்பிய வளர்ச்சியினை நான்கு நிலைகளாகப் பகுத்துரைக்கிறார்[1]. அவர் கருத்துப்படி, போரில் அரசர்கள், வீரர்கள் ஆகியோரின் வெற்றியைக் குறித்துப் பாடும் பாடல்களும், மன்னர்களின் சிறப்பைப் பற்றிய துன்பவுணர்ச்சிப் பாடல்களும் காப்பிய வளர்ச்சியின் முதனிலையைக் குறிப்பனவாகும். நம் சங்க இலக்கியங்கள் - சிறப்பாகப் புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியவை பெரும்பாலும் அரசவைப் பாடல்களின் தொகை நூல்களாகும். அப்பாடல்கள் மன்னர்கள், வீரர்கள் ஆகியோரின் வெற்றிகளைப் போற்றியும், இறந்துபட்ட வீரர்களுக்காக உள்ளம் பெரிதும் இரங்கியும் பாடப்பெற்றவைகளாகும். அவற்றுள் மன்னர்களின் வெற்றியைப் பற்றிப் பாடும் அரசவாகைத் துறைப்பாடல்களும் அவர்கள் இறந்துபட்ட நிலையைப் பற்றிப் பாடும் கையறுநிலைப் பாடல்களும் குறிப்பிடத் தக்கனவாகும்.

இரண்டாம் நிலையாவது அரசனது வெற்றியைப் பொருளாகக் கொண்டு பாடப்பெற்ற கதைப் போக்கான பாடல்களா

கும். பத்துப்பாட்டு போன்ற நெடும்பாடல்கள் இவ்விரண்டாம் நிலை வளர்ச்சியைச் சார்ந்தவையாகக் கொள்ளலாம். கவிஞர்கள் அரசவைகளுக்குச் சென்று அரசர்கள், குறுநில மன்னர்கள் ஆகியோரின் வீரச் சிறப்பினையும் வெற்றியையும் வள்ளண்மையையும் அறவொழுக்கத்தையும் புகழ்ந்து பாடிய பாடல்களே அவைகள்.

கதைப்பாடல்கள் (Ballads) தோன்றிய காலம் மூன்றாம் நிலை எனலாம். அக்காலத்தில் சிக்கலான கதைகள் எளிமையான முறையில் பாடப் பெற்றன. குறிப்பாக நிகழ்ச்சிகளைப் பாடும் நிலை மாறிப் பொதுவாக வாழ்க்கை வரலாறுகள் கதைப்போக்கில் பாடப் பெற்றன. இக்கதைப் பாடல்கள் ஏறத்தாழ நாட்டுப்புறப் பாடல்களுக்கு ஒப்பாக விளங்கின எனலாம். இத்தகைய கதைப் பாடல்கள் பழங்காலத் தமிழகத்தில் இருந்தனவா என்பது ஐயத்திற்குரியது. ஏனெனில் அத்தகைய பழங்காலக் கதைப்பாடல்கள் நமக்குக் கிடைக்கவில்லை.

சாட்விக்குக் கருத்துப்படி நான்காம் நிலையாவது, காப்பியக் கவிதைகள் தோன்றிய காலமாகும். அக்காப்பியங்கள் வடிவத்திலும், உணர்விலும் அவை பாடப்பெற்ற காலத்தின் இயல்புகளைக் குறிக்கும் தன்மையுடையவை.

சாட்விக்கு, பொதுவாகப் பழமையான உலக இலக்கியங்களை ஆராய்ந்து காப்பிய வளர்ச்சியின் இந்நான்கு நிலைகளைக் குறித்துள்ளார் எனலாம். இந்நான்கு நிலைகளுள் மூன்றாம் நிலையைத் தவிர ஏனைய மூன்றும் தமிழ்க் காப்பிய வளர்ச்சிக்குப் பொருந்துவனவாக உள்ளன.

புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியவற்றின் புறப்பாடல்களேயன்றிச் சங்க அகப்பாடல்களும் காப்பிய வளர்ச்சிக்குத் துணைபுரிந்துள்ளன எனலாம்.

**காப்பியத்தின் முக்கியக் கூறுகள் :**

கதை, பாத்திரங்கள், உறுதிப் பொருள்களாகிய அறம், பொருள், இன்பம் ஆகியவை காப்பியத்தின் சிறப்பான கூறுகளாகும். இவை பற்றிய குறிப்புக்கள் சங்க இலக்கியங்களிலே அமைந்திருத்தலைக் காணலாம்.

**கதை - இராமாயணம் :**

இராமாயணம், பாரதம் ஆகியவற்றின் கதைக்குறிப்புக்கள் சங்கப் பாடல்களில் உள்ளன.

''கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாங்கு''[2]

என்பன புறநானூற்றடிகள்.

''பகைவரை அழிக்கும் பேராற்றல் வாய்ந்த இராமனுடன் கூடிப்போந்த சீதையை மிக்க வலிமையுடைய அரக்கனாகிய இராவணன் கவர்ந்து சென்றபோது அவள் கழற்றி நிலத்தே எறிந்த அணிகலன்களைக் குரங்கின் சுற்றம், அவைகளை அணியும் முறையறியாது அணிந்து கொண்டதுபோல'' என்பது இவ்வடிகளின் பொருள். இளஞ்சேட்சென்னியிடமிருந்து பரிசிலாகப் பெற்றுவந்த விலையுயர்ந்த அணிகலன்களைப் பொருநனுடைய சுற்றம் முறைமாறி அணிந்துகொண்டதற்கு உவமையாக இவ்வடிகள் வந்துள்ளன.

''தென்மா விலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா விலங்கை''[3]

என இலங்கையின் சிறப்பைச் சிறுபாணாற்றுப்படை பாடுகிறது.

''வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கு முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீ ழாலம் போல
ஒலியவிந் தன்றிவ் வழுங்க லூரே''[4]

என்பது அகநானூறு.

''பாண்டியரது பழைய கோடிக்கரையில் அமைந்த அலை ஒலிமிக்க கடற்றுறை அருகே இராமன் அரக்கரை வெல்லுதற்குரிய மறைச் செய்தியை வானர வீரர்களோடு ஆராயும்பொருட்டு ஆலமரத்தின் பறவைகளின் ஒலியைக் கைகவித்து அடங்கச் செய்ததுபோலத் தலைவிக்கு வதுவை கூடிய பின்பு அவளைப்பற்றி அலர் தூற்றிய ஆரவாரம் அடங்கிற்று'' என்பது இவ்வடிகளின் பொருள். இதில் இராம காதையின் குறிப்பு வந்துள்ளமையைக் காணலாம்.

**பாரதம் :**

இனிப் பாரதக் கதைக் குறிப்புக்கள் வரும் இடங்களைக் காண்போம்.

"குதிரைப் படையையுடைய பாண்டவர் ஐவருடனே அவர்தம் நாட்டைக் கவர்ந்த துரியோதனன் முதலான நூற்றுவரும் பொருகளத்தில் போரிட்டு அழியும்வரை பெருஞ்சோறாகிய சிறந்த உணவினை இருபடைக்கும் வரையாது வழங்கியவனே" என்று புறநானூற்றில் சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகனார் புகழ்ந்துரைக்கிறார்.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" [5]

இதனையே,

"முதியர்ப் பேணிய உதியஞ்சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை" [6]

என அகநானூற்றடிகள் குறிக்கின்றன.

பாண்டவர் ஐவரும் துரியோதனன் முதலான நூற்றுவரையும் பொருகளத்து அழித்த செய்தியை,

"ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப்
பேரமர்க் கடந்த கொடிஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவின் ஐவர் போல" [7]

எனப் பெரும்பாணாற்றுப்படை பாடுகிறது.

பாண்டவர் ஐவரொடு போரிட்ட பேராண்மை வாய்ந்த நூற்றுவரின் வீரச்சிறப்பினை,

"போர்தலை மிகுந்த ஈரைம் பதின்மரொடு" [8]

என்ற பதிற்றுப்பத்து அடி குறிப்பிடுகிறது.

இச்சான்றுகளினின்றும் இராமாயணக்கதையும் பாரதக் கதையும் சங்ககாலத்தில் நன்கு வழக்கிலிருந்தன என்பது தெளிவாகிறது. தொன்மைக் காலத்திலிருந்தே செவி வழக்காக வழங்கி

வந்த இக்கதைகளைப் பொருளாகக் கொண்டு சங்க காலத்திலோ அதற்கடுத்த சில ஆண்டுகளுக்குள்ளோ இராமாயணமும் பாரதமும் தொடர்நிலைச் செய்யுட்களாக இயற்றப்பட்டிருத்தல் வேண்டும். இவை வடமொழி இராமாயணத்தையோ பாரதத்தையோ தழுவி எழுதப்படவில்லை எனலாம்.

''இக்காலத்தில் பாரதம் தமிழில் வடமொழியைத் தழுவி இயற்றப்பட்டுள்ளதாக யாதொரு குறிப்பும் இல்லை''[9] என எஸ். வையாபுரிப் பிள்ளை கூறுவது இக்கருத்தை வலியுறச் செய்கிறது.

**தகடூர் யாத்திரை :**

சேரமான் பெருஞ்சேரலிரும்பொறை, அதியமான் நெடுமானஞ்சியை எதிர்த்துப் போரிட்டு வென்றனன் என்ற செய்தியினைப் பதிற்றுப்பத்தின் எட்டாம்பத்திலிருந்து அறிகிறோம்.

''வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயி லிறும்பிற் றகடூர் நூறி
பேஎய மன்ற பிறழ்நோக் கியவ
ரோடுறு கடுமுரண் டுமியச் சென்று
வெம்முனை தபுத்த காலை..........''[10]

எனப் பெருஞ்சேரலிரும்பொறையின் வெற்றியைப் பதிற்றுப்பத்து பாடுகிறது.

''போரில் வல்ல வீரர்கள் மிக்க வீர உணர்வோடு காக்கும் காவற்காட்டையுடைய அதியமானின் தகடூரை அழித்துச் சீற்ற மிகுதியால் பகைவர்கள் அஞ்சும்படி அவர்களைப் பிறழ நோக்கி, அப்பகைவர் வலிமை கெடும்படி சென்று பகைப்புலத்தை அழித்த போது''

என்பது இவ்வடிகளின் பொருள்.

தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் வீரச் செயல்கள் பற்றிய வரலாறு தமிழகத்தில் நெடுங்காலம் நிலவி வந்திருத்தல் வேண்டும். இவற்றைக் கதைப்பொருள்களாகக் கொண்டு தகடூர் யாத்திரை என்ற தொடர்நிலைச் செய்யுள் தோன்றியது எனலாம். இக்காப்பியமும் சங்ககாலத்திலோ அதற்குப் பின்பு சில ஆண்டுகளுக்குள்ளோ தோன்றியிருத்தல்

வேண்டும். யாத்திரை என்ற வடசொல்லின் பொருள் படை யெடுத்துச் செல்லுதல் என்பதாகும்.

ஒருநாட்டில் நெடுங்காலச் செவி வழக்காக வழங்கி வந்த கதைகளே காப்பியத்திற்கேற்றனவாகும். பல தலைமுறைகளாக வழங்கிவரும் ஒரு கதையே நாட்டின் பண்பாட்டில் ஊறியிருக்கும். உலகக் காப்பியங்கள் பலவற்றிலும் அவற்றின் கதைகள் பழங் கதைகளாக இருத்தலைக் காணலாம்.

**பாட்டும் உரையும் விரவி வருதல் :**

தகடூர் யாத்திரையும் மேலே குறிப்பிட்ட இராமாயணமும், பாரதமும் தமிழில் தோன்றிய தொன்மைக் காலக் காப்பியங் களாகும். இவை தொல்காப்பியர் வகுத்துள்ள 'தொன்மை' என்ற இலக்கணத்திற்கேற்ப அமைந்தவை என்பதைப் பழம் உரையாசிரி யர்களின் உரையிலிருந்து அறிகிறோம்.

> ''தொன்மை தானே சொல்லுங் காலை
> உரையொடு புணர்ந்த பழமை மேற்றே'' 11

என்பது தொல்காப்பியம்.

''தொன்மையாவது உரையோடு பொருந்திப் போந்து பழமைத்தாகிய பொருள்மேல் வருவன. அவை இராமசரிதமும் பாண்டவ சரிதமும் முதலாகியவற்றின்மேல் வருஞ்செய்யுள்'' என இளம்பூரணர் இதற்கு உரை கூறுகிறார்.

இந்நூற்பாவிற்குப் பேராசிரியர் கூறும் உரையாவது, ''தொன்மை என்பது உரைவிராஅய்ப் பழமையவாகிய கதைப் பொருளாகச் செய்யப்படுவது என்றவாறு. அவை பெருந்தேவனா ரால் பாடப்பட்ட பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன'' என்பதாகும்.

இவ்வுரையாசிரியர் உரைகளிலிருந்து இராமாயணம், பார தம், தகடூர் யாத்திரை ஆகியன பழங்கதைகளைப் பொருளாகக் கொண்டவை என்பதும், அவை பாட்டும் உரையும் விரவி வந்த தொடர்நிலைச் செய்யுள் அல்லது காப்பியம் என்பதும் தெளிவா கின்றன.

இராமாயணம், தகடூர் யாத்திரை ஆகியவற்றைப் பாடிய புலவர்கள் பெயர் தெரியவில்லை. பாரதத்தைப் பெருந்தேவனார் பாடினார் என்பது பேராசிரியர் உரையிலிருந்து தெரிகிறது.

இக்காப்பியங்களில் உரையும் பாட்டும் விரவி வந்துள்ளமை யால் இவை மிகவும் தொன்மைக் காலக் காப்பியங்களாகும்.

''இந்திய இலக்கியங்களில் மட்டுமன்றி ஏனைய இலக்கியங் களிலும் காப்பியக் கவிதையின் மிகப் பழைய வடிவம் உரையும் பாட்டும் விரவி அமைவதாகும்'' என்று விண்டர்விசு என்பவர் கூறுவது ஈண்டுக் கூறத்தக்கதாகும்.[12]

இப்போது இந்நூல்கள் முழுமையாகக் கிடைக்கவில்லை. தொல் காப்பியம் பொருளதிகாரத்தில் புறத்திணையியலின் சில நூற் பாக்களின் உரையில் மேற்கோள்களாகப் பாரதம், தகடூர்யாத் திரை ஆகியவற்றின் பாடல்கள் நச்சினார்க்கினியரால் தரப்பட் டுள்ளன. புறத்திரட்டில் முப்பத்து மூன்று பாரதப்பாடல்கள் வெண்பா யாப்பில் உள்ளன. நச்சினார்க்கினியர் மேற்கோள் களாகக் காட்டியுள்ள பாரதப் பாடல்கள் வெண்பாவிலும் ஆசிரி யப்பாவிலும் உள்ளன. புறத்திரட்டில் காணும் தகடூர்யாத்திரைப் பாடல்கள் 44. அவை வெண்பாவிலும், ஆசிரியப்பாவிலும் அமைந்துள்ளன.

**சங்க இலக்கியத்தில் சிலப்பதிகாரக் கதைக்குறிப்பு :**

சிலப்பதிகாரக் கதைக்குறிப்புக்கள் சங்க இலக்கியங்களில் உள்ளன.

பேகன் என்ற வள்ளல் தன் மனைவியாகிய கண்ணகியைப் பிரிந்து மற்றொருத்தியோடு வாழ்ந்தான் என்பது,

''எம்போல் ஒருத்தி நலனயந் தென்றும்
வருஉம் என்ப வயங்குபுகழ்ப் பேகன்
ஒல்லென ஒலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே'' [13]

என்ற புறநானூற்று அடிகளினின்றும் நமக்குப் புலனாகிறது.

''புகழ்விளங்கும் பேகன் முல்லைவேலியாகவுடைய தேரொலிக் கும் நல்லூரின்கண் எம்போல் ஒருத்தியின் அழகை என்றும் காதலிக்கிறான்'' என்று பேகனிடம் பரிசில் பெறவந்த பரணரை நோக்கி அவன் மனைவி கண்ணகி கூறியதாக இப்புறப்பாடல் உணர்த்துகிறது.

சிலப்பதிகாரத்தில் கோவலன் தன் மனைவி கண்ணகியைப் பிரிந்து மாதவியோடு வாழ்ந்தான் என்று கூறப்படுதற்கு இப் புறநானூற்றுச் செய்தி ஒத்துள்ளதைக் காணலாம்.

கோவலன் இறந்துபட்டதனால் தனக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தாங்கமாட்டாது ஒரு முலையைத் திருகி எறிந்தாள் என்பதைச் சிலப்பதிகாரக் கதை கூறுகிறது. இச்செய்தியும் நற்றிணை 216ஆம் பாடலில்

''எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்
குருகார் துழனியின் இதணத் தாங்கண்
ஏதி லாளன் கவலை கவற்ற
ஒருமுலை யறுத்த திருமா வுண்ணி''

என அமைந்துள்ளது.

இந்நற்றிணை அடிகளுக்கு ஒப்பாக,

''கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை யிழந்து தனித் துயரெய்தி''[14]

என்ற சிலப்பதிகார அடிகளைக் காணலாம். இது கண்ணகி கதை ஒரு பழங்கதை என்பதை வலியுறச் செய்கிறது. நற்றிணைக்கு உரையெழுதிய பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் ''திருமா வுண்ணி என்பது கண்ணகி கதையைக் குறிக்கின்றது போலும்'' என்பர்.

மேற்கூறிய சான்றுகளால் சிலப்பதிகாரக் கதை இளங்கோ வடிகளுக்கு முன்னரே சங்ககாலத்தில் வழங்கி வந்த ஒரு பழங்கதை என்று கொள்ளலாம்.

**இளங்கோவடிகள் காலத்தில் நடந்த உண்மைக்கதை :**

ஆனால் சிலப்பதிகாரத்தின் பதிகத்தில் சாத்தனார் என்ற புலவர் கோவலன் கண்ணகி ஆகியோரின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளை நேரில் கண்டதாகவும், அவர்களின் வாழ்க்கைக் கதையினை அவர் இளங்கோவடிகளுக்குக் கூறியதாகவும், பின்பு அக்கதையினைப் பொருளாகக் கொண்டு இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தைப் படைத்ததாகவும் கூறப்பட்டுள்ளது.[15] மேலும் கண்ணகியின் கோயிலுக்கு இளங்கோவடிகள் சென்றதாகவும் கண்ணகி தேவந்திகையின்மேல் தோன்றி அவர் அரச பதவியை நீத்துத் துறவறம் பூண்டதைப் பற்றிப் புகழ்ந்து கூறியதாகவும் சிலப்பதிகாரம் வரந்தருகாதை உரைக்கிறது.[16]

**பதிகச் செய்தியும் அகச்சான்றும் :**

சிலப்பதிகாரத்தின் பதிகம் பிற்காலப் புலவர் ஒருவரால் பாடப்பெற்று அதனுடன் இணைக்கப்பட்டதாகும். எனவே அப் பதிகம் கூறும் செய்திகளை நாம் தக்க சான்றாகக் கொள்ளுதல் இயலாது. வரந்தரு காதையில் கண்ணகி இளங்கோவடிகள் முன் தோன்றி அவர் துறவற நெறியினைப் புகழ்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது உண்மையில் ஓர் அகச்சான்றாகும். காப்பிய ஆசிரியர் காப்பியக் கதையோடு தம்மை இணைத்துப் பாடுவது பழங்காலக் காப்பியங்களில் நாம் காணும் மரபாகும்.

**வியாசபாரதத்தில் வியாசர் :**

வியாசபாரதத்தின் வியாசரே கதையில் ஒரு பாத்திரமாக அமைந்திருப்பதைப் பல இடங்களில் காணலாம். பாண்டவர் தங்கி இருந்த அரக்கு மாளிகையைத் துரியோதனன் எரிக்கிறான். பாஞ்சால நாட்டு இளவரசியாகிய திரௌபதிக்கு அந்நாட்டில் சுயம்வரம் நடப்பதாக ஒரு பிராமணன் மூலம் அவர்கள் அறிகிறார்கள். அப்போது வியாசர் அவர்களிடம் வந்து அவர்கள் பாஞ்சால நாட்டுக்குச் சென்றால் நன்மைகள் விளையும் என்று அறிவுறுத்தி அங்குப் போகுமாறு உரைக்கிறார். இதுபோலக் கதையின் பல இடங்களில் வியாசர் ஒரு பாத்திரமாகத் தோன்றுகிறார்[17].

பழங்காலக் காப்பிய ஆசிரியர்கள் தம் காப்பியங்களில் தம்மையும் பாத்திரங்களாகப் படைத்துக் கொள்வது மரபாக இருந்தது என்பதை வையாபுரிப் பிள்ளை, சாசர் எழுதிய 'கான்டர்பரி டேல்ஸ்' என்ற கதையினை எடுத்துக்காட்டாகக் காட்டி, சிலப்பதிகாரக் கதை பழங்கதையே என்பதை நிறுவுகிறார்.[18]

எனவே சிலப்பதிகாரக் கதை சங்ககாலத்திலிருந்து வழங்கி வந்த ஒரு பழங்கதை என்று கருதலாம். அக்கதையை ஒரு பழங்கதை என்று கொள்வதால் அக்காப்பியத்தின் சிறப்பு ஒரு சிறிதும் குன்றுவதாகாது.

**பாத்திரங்கள் :**

சங்கப் பாடல்களில் அமைந்துள்ள தலைவன், தலைவி, பாங்கன், தோழி, நற்றாய், செவிலி போன்ற அகமாந்தர்களைக் காண்கிறோம். இவ்வக மாந்தர்க்குரிய இயல்புகளைத் தொல்காப்பியர் விதித்துள்ளார்.

**தொல்காப்பியர் விதிக்கும் பண்புகள்:**

தலைவன் பெருமைக்குரிய பண்புகளும் அறிவும் உடையவனாக இருத்தல் வேண்டும்.[19] அச்சமும், நாணமும் பேதைமையும் தலைவிக்குரிய இன்றியமையாத பண்புகளாம்.[20] பின்பு தலைவி, தோழி, நற்றாய், செவிலி ஆகிய நான்கு முதன்மைப் பெண் மாந்தர்க்குரிய பொதுவான பண்புகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இந்நால்வரும் ஓர் உயிர் உடையவர்போல அன்பினால் ஒருவருக்கொருவர் பிணைக்கப்பட்டவராவர். நாணமும் பேதைமைத் தன்மையும் அவர்கள்பால் சிறப்பாக அமைந்திருத்தல் வேண்டும்.[21] மேலும் அடக்கமும் அமைதியும் நேர்மையும் தக்க பதிலிறுக்கும் தன்மையும் அறிவும் வாய்ந்தவராதல் வேண்டும்.[22] தலைவன் கூற்றுக்கு மாறுபடக் கூறுதல் பாங்கனுக்குரியது.[23]

சங்கப் பாடல்களின் அகமாந்தர்கள் தொல்காப்பியர் விதித்துள்ள இவ்வியல்புடையவர்களாகவே படைக்கப்பட்டுள்ளனர்.

**அகமாந்தர்களின் வளர்ச்சியே காப்பியப் பாத்திரங்கள்:**

காப்பியத்தின் முக்கியக் கூறுகளில் ஒன்றான பாத்திரங்கள் பெரிதும் காப்பியத்துக்கு உரமூட்டுவனவாகும். பாத்திரங்கள் காப்பியத்திற்குப் பல்வகையான சுவைகளை நல்குவதோடு, கவிஞனின் கருத்தை விளக்கும் வாயில்களாகவும் அமைகின்றன. சங்கப்பாடல்களில் காணும் கதைமாந்தர்களின் வளர்ச்சியே தமிழ்க் காப்பியங்களில் படைக்கப்பட்டுள்ள முதன்மைப் பாத்திரங்கள் எனலாம். சான்றாகச் சிலப்பதிகாரத்தில் கோவலன், கண்ணகி, மாதவி தோழியர் தேவந்திகை, வயந்தமாலை ஆகியோரும், சிந்தாமணியில் சீவகன், அவன் மனைவியர் எண்மர், தாய் விசயை, தோழர் நந்தட்டன், பதுமுகன் முதலானவர்களும் சங்கப் பாடல்களில் காணும் தலைவன், தலைவி, தோழி, பாங்கன், நற்றாய் போன்றோரின் பண்புகள் அடிப்படையில் உருவாக்கப்பெற்ற பாத்திரங்களேயாகும்.

**உறுதிப்பொருள்—இன்பம்:**

சங்க இலக்கியங்களில் உறுதிப் பொருள்களாகக் கூறப்படுவன அறம், பொருள், இன்பம் ஆகியனவாம். சங்க அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் ஒருவனும் ஒருத்தியும் நடத்தும் காதல் வாழ்க்கையினின்றும் பெறும் இன்பத்தினைப் படிப்படியாகப் பாடுகின்றன. தலைவனும் தலைவியும் ஊழ்வினைப் பயனாக

எதிர்ப்பட்டு இருவரும் காதல்வயத்தராதலும், காதலித்துத் தலைவன் நீங்க, பிரிவுக்காகத் தலைவி வருந்துதலும், களவொழுக்கம் சில நாட்கள் நீடித்த பிறகு தலைவன் தலைவியை வரைந்து கொண்டு இன்ப வாழ்வு வாழ்தலும் சங்க கால அகப்பாடல்களில் உணர்த்தப்படுகின்றன.

''பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயின்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ'' [24]

என்ற தலைவியின் கூற்று ஊழ்வினையினால் அவளும் தலைவனும் ஒன்றுபட்டமையை உணர்த்துகின்றது.

''நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கள் முனிவின்று
நனந்தலை யுலகமுந் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே'' [25].

இவ்வகப் பாடலில் அமைந்துள்ள தலைவியின் பிரிவுத்துன்பம் நம்நெஞ்சை நெகிழச் செய்கிறது.

தலைவன் தலைவியை வரைதலும், இருவரும் இன்ப வாழ்க்கை நடத்துதலும் பற்றிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் மலிந்துள்ளன. இச்சங்க இலக்கிய அகமரபு, காப்பியங்களில் கதைகளின் அமைப்புக்கேற்பச் சுவைபடப் பாடப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரத்தில் மனையறம்படுத்த காதையில் கோவலன் கண்ணகியின் நலம் பாராட்டலும், சீவகசிந்தாமணியில் குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை ஆகியோரைச் சீவகன் தற்செயலாய் எதிர்ப்பட்டு அவனும் அவர்களும் காதல் வயத்தராதலும் அவன் அவர்களை மணத்தலும், அவன் பிரிந்த பின், பிரிவுக் காற்றாது அவர்கள் வருந்தித் தூற்றுதலும், முடிவில் அரசேற்ற பின்பு தம் மனைவியர் எண்மருடன் அவன் இன்பவாழ்வு வாழ்தலும் சங்க இலக்கிய மரபுகளை யொட்டியனவேயாகும். மிதிலைக்காட்சிப் படலத்தில் இராமனும் சீதையும் ஒருவரையொருவர் கண்டு காதலிப்பதும் பின்பு இருவரும் காதல்நோயால் பெரிதும் ஏங்கி வருந்துதலும் அகப்பாடல்கள் மரபுப்படி கம்பரால் பாடப்பட்டவையாம்.

**அறமும் பொருளும் :**

அன்பு, அருள், ஈகை, தனக்கென வாழாப் பிறர்க்குரியனாதல் போன்ற அறங்களும், மன்னர்தம் நாட்டை உயிரினும் ஓம்புதல்,

செங்கோன்மை, போர் மேற்செல்லுதல், வீரம் இன்னோரன்ன பொருட்சிறப்புக்களும் புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய புறத்திணைப் பாடல்களில் பாடப்பட்டுள்ளன. தமிழ்க் காப்பியங்கள் இப்பாடல்களின் அடியொற்றி ஆங்காங்கே பொருந்திய இடங்களில் அறம், பொருள் ஆகியவற்றை விரிவாகப் பாடியிருத்தலைக் காணலாம்.

விரிவஞ்சி, இரண்டொரு எடுத்துக்காட்டுக்கள் மட்டும் ஈண்டுக் காண்போம்.

''அருளையும் அன்பையும் நீக்கியவர் நீங்காத நரகத்துக்குச் செல்வர். நீ அத்தகையரோடு பொருந்தாது, நின் நாட்டைக் குழந்தையைக் காப்பது போல அன்புடனும் அருளுடனும் பாதுகாப்பாயாக!'' எனக் கோப்பெருஞ்சேரலிரும்பொறைக்கு நரிவெரூஉத் தலையார் அறிவுறுத்துகிறார்.

''அருளும் அன்பும் நீங்கி நீங்கா
நிரயங் கொள்பவரோ டொன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி''[26]

என்பது புறநானூறு.

''தாயொக்கு மன்பின் தவமொக்கும் நலம்பயப்பின்''[27] எனக் கம்பர், தயரதன் தன் குடிமக்களை ஓம்பிய திறத்தைப் பாடுவது இப்புறப் பாடலின் பொருளோடு ஒப்புநோக்கத்தக்கது.

''உண்டா லம்ம விவ்வுலகம்...............
.........................................
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே''[28]

என்ற 182ஆம் புறநானூற்றடிகளின் பொருளுக்கு விளக்கமாகச் சிலப்பதிகாரத்தில் கோவலன் அருட்செயல் அமைந்திருத்தலை உணரலாம்.

தன்னிடம் தானம் பெறவந்த முதுமறையோனை மதயானை பற்றிக் கொள்ளுதலைக் கண்ட கோவலன் தன்னுயிரைப் பொருட்படுத்தாமல் அவ்வியானைமீது பாய்ந்து அதனின்று மறையோனை விடுவிக்கிறான்.[29]

'இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பகைநாட்டில் வீரர் களால் காக்கப்பட்ட திரண்ட பூக்களையுடைய கடம்ப மரத்தை வெட்டி எறிந்தனன்''[30] என்று பதிற்றுப்பத்து பாடுகிறது. செங்குட்டுவனும் இத்தகைய வீரச் செயலைப் புரிந்தனன் எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. ''மாநீர் வேலிக் கடம்பெறிந்து''என்பது சிலப்பதிகார அடி.

போரில் மிக்க வீரமுடன் போரிட்டு இறந்த வீரனுக்கு நடுகல் நட்டு அதை வழிபடுவது வழக்கம். இச்செய்தி புறநானூற்றுப் பாடல்களில் காணப்படுகிறது.

''ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை
நடுகற் கைதொழுது பரவும்''[31]

இம்மரபையொட்டியே செங்குட்டுவன் வீரபத்தினியாகிய கண்ணகிக்கு இமயமலையினின்று கல்லெடுத்து வந்து படிமம் அமைத்து வழிபட்டனன் என்பதைச் சிலப்பதிகாரம் நடுகற்காதையால் அறியலாம்.

இங்ஙனம் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று உறுதிப் பொருள்களையொட்டிய உயரிய கருததுக்களைக் கொண்டமையும் காப்பியமே தரம் வாய்ந்ததாய், என்றும் நிலைபேறுடைய பேரிலக்கியமாய் விளங்கும். இதற்குரிய வித்துக்கள் சங்க இலக்கியங்களிலே மலிந்துள்ளன. இச்சங்கப் பாடல்களாகிய தனி நிலைச் செய்யுட்களே நாளடைவில் கதை தழுவிய தொடர்நிலைச் செய்யுட்களாகிய காப்பியங்களாக விரிந்து மலர்ந்தன என்பதில் ஐயமில்லை.

**அடிக்குறிப்புக்கள் :**

1. Munro Chadwick, H., **The Heroic Age**, 1912.9.94
2. புறநானூறு (பா. 378 : 18-21)
3. சிறுபாணாற்றுப்படை (அடி 119-120)
4. அகநானூறு (பா. 70 : 13-17)
5. புறநானூறு (பா. 2 : 13-16)
6. அகநானூறு (பா. 233 : 8-9)
7. பெரும்பாணாற்றுப்படை (வரி 415-417)
8. பதிற்றுப்பத்து, இரண்டாம்பத்து, (பா. 4-5)
9. எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழ் இலக்கிய சரித்திரத்தில் காவியகாலம் 1857, ப. 77.

10. பதிற்றுப்பத்து, எட்டாம்பத்து (பா. 8 : 8-12)
11. தொல்காப்பியம், செய்யுளியல் நூற் பா. 229
12. Wintermitz, M. , Some problems of Indian Literature P. 44
13. புறநானூறு (பா. 144 : 11-14)
14. சிலப்பதிகாரம், காட்சிக்காதை, அடி 57-58
15. மேற்படி, பதிகம், அடி 10-89
16. மேற்படி, வரந்தருகாதை, அடி 171-182
17. ஸ்ரீநிவாஸாசாரியார், தி. ஈ., தமிழ் மொழிபெயர்ப்பு வியாச மஹாபாரதம், ஆதிபருவம் 1914, பக். 675
18. எஸ். வையாபுரிப் பிள்ளை, காவிய காலம், 1951, ப. 113
19. "பெருமையும் உரனும் ஆடூஉ மேன" (தொல்காப்பியம், களவியல், 7)
20. "அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்தல்
நித்தமும் பெண்பாற்குரிய என்ப" (தொல். களவியல், 8)
21. "உயிரும் நாணும் மடனும் என்றிவை
செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கு முரிய" (தொல். பொருளியல், 6)
22. செறிவும் நிறைவுஞ் செம்மையுஞ் செப்பு
மறிவு மருமையும் பெண்பா லான" (தொல். பொருளியல், 14)
23. "மொழியெதிர் மொழிதல் பாங்கற்குரித்தே" (தொல். கற்பியல், 41)
24. குறுந்தொகை பா. 366
25. மேற்படி பா. 6
26. புறநானூறு, பா. 5
27. கம்பராமாயணம், அரசியற்படலம், பா. 4
28 புறநானூறு ,182
29. சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, அடி 41-53
30. பதிற்றுப்பத்து, பா. 11
31. புறநானூறு, (பா. 306 3,4)

# 4. சங்க இலக்கியம் ஒப்பியல் நோக்கு

## இராம. பெரிய கருப்பன்

சங்க இலக்கியம் பலவகைகளில் சிறப்புடையது என நம்மால் உணர முடிகிறது. ஆனால் அதனைப் பிறருக்கு விளங்கும் வண்ணமோ, பிறர் ஏற்கும் வண்ணமோ நம்மால் எடுத்துச்சொல்ல முடிகிறதா? அதுதான் இடர்ப்பாடாக இருக்கிறது.

குன்றின் மேல் ஏறிக்கூவுவதுபோல் 'சங்க இலக்கியமே மிகச் சிறந்தது; மிகத் தொன்மையானது; அதற்கு நிகராகப் பிறிதோரி லக்கியம் உலகிலேயே இல்லை' என நாம் வாய்ப்பறை சாற்றினால் உலகம் அதனை ஏற்றுக்கொண்டுவிடுமா? அதற்கு மாறாக எதி ருணர்வே அரும்புகிறது. 'தமிழர்கள் உணர்ச்சிவயப் பட்டுத் தம் இலக்கியம் பெரிதெனப் புகழ்ந்து தாமே அதில் மயங்கி விடுகின்ற னர். அதனை மெய்ப்பிக்க அவர்களிடம் போதிய சான்றுகள் இல்லை. இது வெறும் தற்புகழ்ச்சி' என்றே பெரிதும் பிறர் நம்மை மதிப்பிடுகின்றனர்.

ஆகவே, பிறமொழியினரும் பிற நாட்டினரும் ஏற்குமாறு, சங்க இலக்கியத் திட்ப நுட்பங்களை வெளிக்கொணர வேண்டும். அதற்கான ஆராய்ச்சி அணுகுமுறைகள் பலவற்றைப் பெறுதற்கு, நமக்கு ஒப்பிலக்கியம் சிறந்த கருவியாகும். இச்சிறு கட்டுரையில், சங்க இலக்கியத்தை ஒப்பியல் நோக்கில் அணுகுவதற்குரிய ஆய்வு முறைகள் சில சுட்டிக்காட்டப்படுகின்றன. இவை போன்ற பல வென்பதற்கு இஃதோர் வழிகாட்டியாக அமைதல் கூடும்.

இலக்கியம் எவ்வாறு உருவாகிறது? என அறிவதற்குப் பற் பல ஒப்பியல்நெறி அணுகுமுறைகள் உள்ளன. ஓர் இலக்கிய வகைமை எவ்வாறு உருவாகிறது? வளர்கிறது? தளர்கிறது? அல்லது மாறுகிறது? என இவ்வாறு ஆராய்வது கூர்தலறமுறை வழிப்பட்ட தாகும். வாய்மொழிப் பண்புகள் பற்றி நன்கு அறிந்துகொண்டு, அவற்றைச் சங்க இலக்கியத்தில் ஏற்றிப் பார்த்தால், சங்க இலக் கியம் என்ற பூங்கா எவ்வாறு பல்வேறு வகைகளாகக் கிளைவிட்டு

வளர்ந்து பூத்துக் குலுங்குகிறது என்பதை உணரலாம். வாய் மொழி இலக்கியமும் வரிவடிவ இலக்கியமும் ஒன்றுடன் ஒன்று கொண்டும் கொடுத்தும் வளர்கின்றன என்பர். எவ்விலக்கியத்தில் வாய்மொழிப் பண்பு மிகுதியும் உளதோ,அது உயிர்ப்புமிக்கதாய் மக்களிடையே உலவுகிறது. இன்றளவும் நிலைபெற்று, மனத்தைக் கவர்வதற்குச் சங்க இலக்கியத்திலுள்ள முதன்மையான கூறுகள் இவ்வாய்மொழிப் பண்புகளே எனலாம்.

உறவுடைய இரண்டு மொழிகளிடையே உள்ள இலக்கியங் களை ஒப்பிடுவது மட்டுமே ஒப்பிலக்கியம் எனக் கருதப்பட்ட காலம் ஒன்றுண்டு. இலக்கியத்தை அதனோடு தொடர்புடைய துறைகளோடெல்லாம் இணைத்துப் பார்க்கலாம் என்ற மரபு உருவாகி நெடுநாளாகிவிட்டது. எடுத்துக்காட்டாக சங்க இலக் கியத்தைச் சமுதாயவியற் கண்கொண்டு பார்த்து, அது எந்த அளவு சமுதாயத்தைப் பிரதிபலிக்கிறது ? சமுதாயத்தில் எந் நிலையினைச் சித்திரிக்கிறது ? எவ்வாறு சித்திரிக்கிறது? அதன் சமுதாயப் பயன்பாடு யாது? என இவ்வாறு ஆராயலாம். இஃது ஒப்பிலக்கிய நோக்கில் 'இலக்கியமும் சமுதாயமும்' என உடன் வைத்து, ஒன்றுடன் ஒன்று ஒட்டியும் உறழ்ந்தும் காண்பதாகும். இதற்குப் பிறமொழி இலக்கிய அறிவும் பிறநாட்டுச் சமுதாய அறிவும் அவையிரண்டின் உறவு பற்றிய தெளிவும் தேவைப்படும்.

நூற்றுக்கணக்காக உலக வாய்மொழிப் பாடல்களைக்கண்டு, தொகுத்து, ஆராய்ந்த மேலைநாட்டார் முதன் முதல் அவற்றிற் கும் வரிவடிவ இலக்கியத்திற்கும் இருந்த ஒற்றுமை வேற்றுமை களை ஆராயப் புகுந்ததன் பயனாகவே ஒப்பிலக்கியம் மலர்ந்தது.

சமுதாயப் பின்னணியும் வாய்மொழி அடிப்படையும் உலக இலக்கியங்கள் அனைத்திற்கும் பொதுவானவை. எனவே, உலக ளாவிய கண்ணோட்டத்தில், இவ்வகைப் பொதுப் பண்புகளை ஆராய்வதும் ஒப்பிலக்கிய எல்லைக்குள் வருகிறது.

சங்க இலக்கியத்தில் 'வாய்மொழியும் வரிவடிவமும்' என்ற அடிப்படையில், ஒப்பிட்டுச் சில உண்மைகளைக் காண நிறைய வாய்ப்பிருக்கிறது. அதன் மூலம் சங்க இலக்கியம் முகிழ்த்து, அரும்பி, மலர்ந்த வளர்ச்சி நம் மனக்கண்களுக்குப் புலனாகும். ஆனால் சங்க காலத்தில் வழங்கிய வாய்மொழிப் பாடல்களை நாம் இன்று அறியவியலாது. பிறகு எவ்வாறு ஒப்பிடுவது? அதற்கும் ஒரு வழி உளது. வாய்மொழிப் பண்புகளை இன்று இவையிவை என இலக்கணமாக வரையறைப்படுத்தியுள்ளனர். முனைவர்

க. கைலாசபதி மேலைநாட்டறிஞர் சி. எம். பௌராவைப் பின் பற்றி, சங்க இலக்கியம் வாய்மொழி மரபினது என நிலைநாட்ட முயன்றுள்ளார். நாம் வேறொரு வகையில், வாய்மொழி இலக்கியப் பண்புகளை ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு, அவை சங்க இலக்கியத்தில் உள்ளனவா என்று தேடலாம். அல்லது சங்க இலக்கியப் பாக்களைக் குறிப்பிட்டுவிட்டு, அவற்றுள் இவை யிவை வாய்மொழிப் பண்புகள் என அறுதியிடலாம். அவற்றின் மூலம் சில இடைவெளிகளுக்கு விளக்கம் கிடைக்கும். சங்க இலக்கிய இயல்பை-பண்பை-நலனைத் துல்லியமாய் மதிப்பிடவும்கூடும்.

நாட்டுப்புறப் பாடல்களில் திரும்பவரும் பாங்கு அழகானது. மேலை நாட்டார் காட்டும் இத்திரும்பவரும் பாங்கு சொற்கள், தொடர்கள், கருத்துக்கள் எங்கெங்கோ திரும்பத் திரும்ப வருவன பற்றியதாகும். தமிழில் இது அம்முறைப்படியே அமைந்திருப்பதுடன், இன்னும் நன்றாகவும் செவ்விய வடிவம் பெறுகிறது.

இன்று வழங்கும் வள்ளி தாலாட்டில்,

''உழக்குத் தினை விதைத்து - வள்ளி
ஓடிக்கிளி விரட்டி
பதக்குத் தினை விதைத்து - வள்ளி
பாடிக் கிளி விரட்டி
நாழித் தினை விதைத்து - வள்ளி
நடந்து கிளி விரட்டி''

என்று வருமிடத்தில், திரும்பவரும் பாங்கு வள்ளி அங்குமிங்கும் ஓடிக் கிளி விரட்டுவதை மட்டும் காட்டவில்லை; அப்பாடல் வாய்மொழியாய்ப் பாடப்படுவதால்தான் அலைபோல, ஊசல்போலத் திரும்ப வரும் பாங்குடன் அமைந்துள்ளது என்பதையும் காட்டுகிறது.

'உறங்காத கண்ணுக்கு ஊசிகொண்டு மையெழுதி
தூங்காத கண்ணுக்குத் துரும்புகொண்டு மையெழுதி''

என்று வருவதையும் ஒப்பு நோக்குக. மற்றுமொரு தாலாட்டு ஒரே செய்தியை எவ்வாறு திரும்பத் தருகிறது எனக் காண்போம்.

''வாழை இலை பரப்பி வந்தாரைக் கையமர்த்தி
வருந்தி விருந்து வைக்கும் மகராசன் பெயரனோ?
தென்னை இலைபரப்பிச் சென்றாரைக் கையமர்த்தித்
தேடி விருந்துவைக்கும் திசைக்கருணர் பெயரனோ?''

இதுபோல் இன்னும் நூற்றுக்கணக்கானவை, இதைவிட, நீண்டு கருத்தொற்றுமையுடைய பத்திகள் திரும்ப வருதலை எடுத்துக்காட்டுதல் இயலும். கலித்தொகையில் தாழிசைப் பகுதி ஒன்று வருமாறு :

''அன்பிலன் அறனிலன் எனப்படான் எனஏத்தி
நின்புகழ் பலபாடும் பாணனும் ஏமுற்றான்
நஞ்சுயிர் செகுத்தலும் அறிந்துண்டாங் களியின்மை
கண்டும்நின் மொழிதேறும் பெண்டிரும் ஏமுற்றார்
முன்பகல் தலைக்கூடி நண்பகல் அவள்நீத்து
பின்பகல் பிறர்த்தேறும் நெஞ்சமும் ஏமுற்றாய்''

(கலி. 74)

இங்ஙனம் ஒருபொருள்மேல் பலஅடுக்கிவரும் செவ்விய தமிழ் வடிவங்கள், உலக இலக்கியத்தில் காணப்படும் செவ்விய வடிவங்கள் சிலவற்றோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்கனவாகும். 'ஏமுற்றாய்' என்ற பொதுச்சொல் ஒன்று திரும்பவருவதும் கருது வதற்குரியது. ஐங்குறுநூற்றில் இருபத்திரண்டாம் பத்து; ஒவ்வொரு பாடலும் அன்னாய் என்று முடிகிறது. கிளியே என்று முடிவதைக் கிளிக்கண்ணி என்றும், 'எந்நாளோ' என்று முடிவதை எந்நாட்கண்ணி என்றும் குறிப்பிடுவதுபோன்று, இதனை 'அன்னாய்ப்பத்து' என அன்றே அழைத்தனர். ஐங்குறுநூற்றுப் பத்துக் களில், பத்தும் கூடி ஒரே பாடலின் உறுப்புக்கள் போலவும்; ஐந்தைந்தாக இரு பகுதிகள் கொண்ட பத்து உறுப்புக்கள் போலவும் சிலவற்றில் இவ்வரன்முறை மாறிய சிற்சில தொகுதிகளாலான உறுப்புக்கள் போலவும் இணைந்திருப்பதை உற்றுநோக்க வேண்டும். ஆசிரியப்பாவிலும் வாய்மொழித்தன்மை இருப்பதை இவை சுட்டுகின்றன. ஆயினும் முதன்முதல் செவ்விய எழுத்துவடிவை ஏற்றது ஆசிரியமேயாம். கலி, பரி, வரி என்பன தத்தம் பெயருக் கேற்ப வாய்மொழித் தன்மை மிக்கன.

'மித்து' (myth) எனப்படுவது வாய்மொழி மரபு அடிப்படை உடையதே என்பர். மக்களிடையே நாட்டுப்புறக் கதையாய், வரலாற்றுப் புனைகதையாய், புராணத் தொன்மைக் கதையாய் வழங்கி வழங்கியே அது பல்வேறு வடிவெடுத்து வளர்கிறது. பின்பு அது இலக்கியப் படைப்பாளியிடம் கற்பனையுருப் பெற்றுக் கையும் காலும் வைத்த பொய்யாக-நம்பவியலாக் கதையாக உருப்பெறு கிறது. சமய மெய்யுணர்வாளரின் தத்துவ விளக்கத்திற்கும் இலக்கியவாதியின் கருத்து வெளியீட்டிற்கும் அது பெரிதும் உதவு கிறது. மனிதஇனம் நுண்பொருள்களைப் பருப் பொருட்களாகக்

காட்டி உணர்த்தவே முந்துகிறது. குழந்தையின் சிறப்பை உணர்த்த வேண்டுமேல் இலஞ்சியமே, மாங்கனியே, முத்தே என இயற்கையாகக் காண்பது ஒருமுறை. கருணனே, தருமவான் பெயரனே அருச்சுனரே என்றிவ்வாறு புராணப் பாத்திரங்களாகக் காண்பது பிறிதொரு முறை. இம்மாந்தர்களைப் பற்றிய உணர்வு அனைவருக்கும் இருப்பதால் பாடல்கள் உடனே விளங்குகின்றன. கலித்தொகைப் பாடல்களிலும் பரிபாடல்களிலும் புராணக்கூறு மிக்கிருப்பதற்கு அவை பெரிதும் வாய்மொழிப் பண்பைச் சார்ந்திருப்பதே காரணமாகும்.

வாய்மொழி மரபு தழுவிய யாப்பு வடிவங்களில் கொச்சை மொழி வழக்காறுகளும், இலக்கண மாற்றங்கள் அல்லது மீறல்களும் இடம் பெறும். பாரதியார் பாடல்களில் 'பாயுது, பிறக்குது, ஆச்சு, போச்சே' என இவ்வாறு உலகவழக்குச் சொல்வடிவங்கள் இடம்பெறுவதைச் சிலர் குற்றமாகக் கருதி விவரிப்பர் - விவாதிப்பர். ஆனால் ஒருண்மையை அவர்கள் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். ஆசிரியம், வெண்பா, விருத்த வடிவங்களில் பாடும்போது பாரதியார் யாண்டும் இக்கொச்சை வடிவங்களைப் பயன்படுத்திக் கொண்டிலர். ஆனால் அவரே கும்மி, சிந்து, கண்ணி வடிவங்களில் பாடும்போது இவற்றைப் புகுத்தும் இன்றியமையாமைக்கு ஆளாகிறார். மேற்கூறிய பாவடிகளில் எவ்வெவற்றில் சொல்வடிவத் திரிபுகளும் புராணக் கூறுகளும் இடம்பெறுகின்றனவோ, அங்கெல்லாம் வாய்மொழி மரபு உளதெனத் தெளிதல் வேண்டும்.

எண்ணு வண்ணம் என்ற ஒன்றைத் தொல்காப்பியர் எடுத்துக் கூறுகிறார். இது வாய்மொழி மரபு சார்ந்தது. வண்ணம் பற்றிய தொல்காப்பியர் கருத்துக்களுக்கு, சங்கப் பாடல்களிலிருந்து முழுமையாக எடுத்துக்காட்டுத் தரவியலாமல் உரையாசிரியர்கள் இடர்ப்படுகின்றனர். அங்குமிங்குமாக ஒன்றிரண்டு அடிகளைக் காட்டுவர். பாட்டின் முழுமைநோக்கில் அமையாமல், வண்ணங்கள் என்பன ஓரிரு அடிகளில் வருமெனல் பொருத்தமுடைத்தாகத் தோன்றவில்லை. எனவேதான் தொல்காப்பியரின் வண்ணப்பகுப்பு வாய்மொழிசார்ந்த மரபாக இருந்தது என உணரப்படுகிறது. நாட்டுப்புறப்பாக்களில் வண்ணம் பாடுதல் உண்டென்பர். பரிபாடலில் சில இடங்களில் வல்லெழுத்துக்களாகவோ, நெட்டெழுத்துக்களாகவோ தொடர்ந்து, பல அடிகளில் வண்ணங்கள் உருவாகக் காண்கிறோம். அதன் நாட்டுப்புறத்தன்மையையே அது காட்டுகிறது. எண்ணு வண்ணம்

ஒன்றை வைத்துக்கொண்டே, வண்ணம் என்ற இலக்கியத்திறன் வாய்மொழி மரபிலிருந்து பெறப்பட்டது என நிறுவலாம்.

ஏற்றப் பாட்டில் எண்கள் ஏறுவரிசையாகப் பாடலுடன் கூடிச் செல்வதைக் கேட்கலாம். மற்றைய நாட்டுப்புறப் பாடல் களிலும் எண்ணுதல் என்பது பல்வேறு வடிவங்களில் காணப்படும். ''ஏலம் சருக்கரையும் இளங்கொடிக்கால் வெற்றிலையும் சாதி வெள்ளைச் சுண்ணாம்பும்' என்றிவ்வாறும் எண்ணப்படும். கலித் தொகையில் கீழ்வருமாறு எண்ணுவண்ணம் இடம் பெறுகிறது.

ஒருத்தி
செயலமை கோதை நகை
ஒருத்தி
இயலார் செருவில் தொடியொடு தட்ப
ஒருத்தி
தெரிமுத்தம் சேர்ந்த திலகம்
ஒருத்தி
அரிமாண் அவிர்குழை ஆய்காது வாங்க (கலி. 92)

இவ்வாறு ஒவ்வொருத்தியாக மேன்மேலும் எண்ணிச் சொல்லும் மருதக்கலிப் பாடல் போலவே, பரிபாடலிலும் ஒரு பகுதி உள்ளது.

ஒருதிறம்
பாணர் யாழின் தீங்குரல்எழ
ஒருதிறம்
யாணர் வண்டின் இமிழிசை எழ
ஒருதிறம்
கண்ணார் குழலின் கரைபுஎழ
ஒருதிறம்
பண்ணார் தும்பி பரந்திசை ஊத (பரி. 17)

பரங்குன்றில் கேட்கும் ஓசைகள் இவ்வாறு மேன்மேலும் எண்ணப்படுகின்றன. கலிப்பாவில் இடம்பெறும் சிற்றெண், பேரெண் என்பனவும் இதனை ஒட்டி வளர்ந்தனவே. குறுந் தொகை போன்ற தொகைப் பாடல்களில், ஆசிரியத்திலும் இவ் வெண்ணு வண்ணம் அரிதாக இடம் பெறுகிறது.

தாழிசை, துறை, விருத்தம் என்பன பா இனங்கள் மட்டு மல்ல; தொடக்கத்தில் அவை கலி, பரிபாடல், வரிப்பாடல்களில் உள்ளுறுப்பாக இருந்து பிரிந்து வளர்ந்தனவேயாம். பரிபாடலில் எத்தனையோ இடங்களில் விருத்த வடிவங்கள் கலந்துள்ளன.

வரிப் பாடலிலும் பற்பல விருத்த வடிவங்கள் உள. சங்க இலக்கியத்துள் வெண்பா யாப்பைக் கூறுகிறார். கலித்தொகைப் பாடல்களுள், நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, குறள் வெண்பா, கலிவெண்பா, அனைத்திற்கும் சான்றுகள் உள. சிந்தாமணியில் காந்தருவதத்தையாரிலம்பகத்தில் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கிய கொச்சகங்கள் உள. தமிழ் யாப்பு வடிவப்பரிணாம வளர்ச்சி நுட்பமாய் ஆராயப்பட வேண்டும். அதற்கு முன்னர்த் 'தமிழ் வாய்மொழி இலக்கிய யாப்பு வடிவம்' பற்றிய வரன்முறைகளை வகுத்து, அறிந்து கொள்ளுதல் பயனுடையதாகும்.

யாப்பு வடிவம் என்னும்போது விருத்த வடிவங்கள் பலதேவராட்டம், ஒயிலாட்டம் எனும் ஆட்டங்களோடு ஒத்திருத்தல் கருதத்தக்கது. வரிசையாக நின்று, இரண்டடி முன் வைத்தும், இரண்டடி பின் வைத்தும், மூன்றடி முன் வைத்தும், மூன்றடி பின்வைத்தும் இதுபோல் பல்வேறு வகைப்படுத்தி ஆடுகின்றனர். அறுசீர் விருத்தம் என்றால் மூன்று சீர் ஒரு தன்மையாக அமைய, அடுத்த மூன்று சீரும் அஃதேபோல அமைய அறுசீர் கொண்ட ஓரடி உருவாகிறது.

தேமாங்காய் தேமா தேமா
தேமாங்காய் புளிமா தேமா

ஓரடி என்பது சீராகப் பாதங்களை முன்னும் பின்னும் வைப்பதிலுளது. எனவே சீர் கொண்டது 'அடி' எனப்படுகிறது.

'பத்து' எனும் ஒரு பாட்டுநெறி சங்க இலக்கியத்தே முகிழ்த்தது. ஒருபொருள்மேல் மூன்றடுக்கியதே, பத்தடுக்கிய நிலைக்கு இட்டுச்சென்றிருக்கலாம். பத்துக்களாகப் பாடுவது, பத்துப் பத்துக்களாகப் பாடும் மரபிற்கே இட்டுச் சென்றது. இப்பத்துக்களில் ஐங்குறுநூற்றுப் பதினெட்டாம் பத்தும், பதிற்றுப் பத்து நாலாம்பத்தும் அந்தாதித் தொடையுடையன.

பத்தின் வேறுபாடுகளாக இலக்கிய வகைகள் தமிழில் கிளைத்துள்ள முறை, அதன் பரிணாம வளர்ச்சியைக் காட்ட வல்லது. ஐந்திணை ஐம்பது, எழுபது, திணைமாலை நூற்றைம்பது என இவ்வாறு ஒருபுறம் வளர்ச்சி பெறக் காண்கிறோம். ஒருபா ஒருபஃது, இருபா இருபஃது, இரட்டை மணிமாலை, மும்மணி,

நான்மணி என இவ்வாறு பிறிதொருபுறம் வளரக் காண்கிறோம். பத்தி இலக்கியம் கண்ட முதல் அந்தாதிகள் பலவும் இவ்வகையைச் சார்ந்த வளர்ச்சியே. முத்தொள்ளாயிரம், நாலாயிரம் எனவும் இவை பெயர் பெறுமளவு எண்ணிக்கை வளர்ச்சிகளைக் காண்கிறோம். இவை எல்லாம் 'பத்தின்' கூர்தலற வளர்ச்சியென மதிப்பிடற்பாலன.

தமிழில் உள்ள சங்க இலக்கியமும் கிரேக்கப் பழைய இலக்கியமும் பெரிதும் ஒற்றுமைச் சாயல்களைக் கொண்டு திகழ்கின்றன. இலத்தீன் மொழி இலக்கியத்திலும் இப்பாங்கு உளது. வேற்றுமைகளே வெளிப்பட நோக்குவோர்க்குப் புலனாகுமெனினும், உள்ளார்ந்த வளர்ச்சி நிலைகளின் அளவு, தகுதி, வகைமை, காலம், கோட்பாடுகளில் இவை ஒன்றுடன் ஒன்று வைத்து நோக்கத்தக்கன வென்றும் அதன் மூலம் நன்கு விளங்கத்தக்கன என்றும் குறிப்பிடலாம். சங்க இலக்கியம் தோன்றிய சமுதாயப் பின்னணிக்கும் கிரேக்க, இலத்தீன் இலக்கியங்கள் தோன்றிய சமுதாயப் பின்னணிக்கும் மிகப் பலவான ஒற்றுமையடித்தளங்கள் உள்ளன. சிறப்பாக இலக்கிய வகை, கொள்கை, திறன் அடிப்படையிலான கூறுகளில் - அவற்றின் உட்பண்பும் உள்ளுணர்வுமென்ற பகுதிகளைச் சிந்தித்தால், மனித நாகரிக வளர்ச்சியில் சிந்தனை ஒருமைகள் எங்ஙனம் இழையோடுகின்றன என்று தெளியலாம். எந்த இரண்டு அல்லது பலவற்றிடையே பொதுமைக்கூறுகள் சிலவேனும் இழைபோல ஊடுருவி நிற்கின்றனவோ அவையே ஒப்பிடற்பாலனவாம். பேராசிரியர் சி. எம். பௌரா கிரேக்க இலக்கியமும் சமுதாயமும் வீரயுகமும் பற்றிப் பல நூல்களை எழுதியுள்ளார். அவை தெளிவான கருத்தோட்டமுடையவை. அவற்றுள் 'தொன்மைக் காலக் கிரேக்க இலக்கியம்' (Ancient Greek Literature) என்ற நூலில், தெளிவாக அதன் கூறுகளை விளக்குமவர், அந்நூலின் முன்னுரையில் அவ்விலக்கியத்தின் சிறப்புக்களையெல்லாம் நன்கு தொகுத்துரைக்கிறார். அவற்றுட் பல கூறுகள் சங்க இலக்கியத்தைப் படித்தாராய்ந்து எழுதிய முன்னுரைபோல, அதற்கும் ஏற்புடையனவாய் உள்ளன. அவற்றுள் சில வருமாறு:

(1) பழைய பேரிலக்கியத்தின் எஞ்சிய சிறு பகுதியாகக் கிடைத்திருப்பனவே இன்றுள்ள கிரேக்க இலக்கியம்.

(2) கிடைக்காமல் போன அப்பேரிலக்கியப் பரப்பு மிகவலுவானது; அதன் ஆற்றல் மிகப்பெரிது.

(3) பிற்கால இலக்கியம் அனைத்திலும், மற்றும் மக்கள் நாகரிகப் பண்பாட்டிலும் தன் செல்வாக்கைப் பரப்பிய சிறப்பு அதற்குண்டு. கிரேக்க இலக்கியம் இலத்தீன் இலக்கியத்தை வளப்படுத்தி, அதன் மூலம் ஐரோப்பிய இலக்கியத்தைச் செழிக்கச் செய்து இக்கால இலக்கியத்திலும் தன் தாக்குறவைச் செலுத்தி நிலைபெற்றுள்ளது.

(4) கிரேக்க இலக்கியப் பண்பு, வேண்டாதவற்றைப் புனையாமல் தவிர்ப்பது; உணர்விற்கும் பாட்டின் கட்டுக்கோப்பிற்கும் வேண்டியதை மட்டுமே புனைவது. பாடலின் ஒவ்வோருறுப்பும் சிறப்பாக அமைவது.

(5) கவிதை வெளிப்பாட்டில் 'எது சிறந்தது' என்பதைப் பற்றி, கிரேக்கர்கள் மிகத் தெளிவான சிந்தனை பெற்றிருந்தார்கள். எங்கே அழகிருக்கிறது எனவும், அல்லாதவற்றை எவ்வாறு தவிர்ப்பது எனவும் உணர்வதில் அவர்கள் நிகரற்ற, இயல்பான ஆற்றலுடையவர்கள்.

(6) பாட்டும் உரையுமாக அவை இரு பகுதிகளாகப் பிரிந்து வளர்ந்தன. பாட்டு நாடகம், தனிநிலை, காப்பியம் என்ற முத்திறத்தது. உரை வரலாறு, மெய்யுணர்வு, சொற்பொழிவு என்ற முத்திறத்தது.

(7) கிரேக்க மொழியின் எளிய தொடரமைப்பு நிறைந்த சொல் வளம், பல கிளைமொழி வழக்குகள், முன்னைய வழக்காறொழிந்த மொழிகளின் எஞ்சிய கூறுகள் போல்வன சிக்கலான சிந்தனைகளையும் எளிதாகவும், தெளிவாகவும் கூற வழி வகுத்தன. குறுகிய நீண்ட அசைகள் சந்தப் பாக்கள் புனைய உதவின. இவ்வாறு அம்மொழிச் சிறப்பே அதன் இலக்கிய வளத்திற்கு அடிப்படையானது.

(8) புதிய புதிய வடிவங்களையோ, வகைமைகளையோ காண்பதிலும் பழைய மரபுவழிப்பட்ட ஒரு சில வடிவங்களையே அவர்கள் திரும்பத் திரும்பப் பயன்

படுத்தி, அவற்றைச் செம்மையுறவைத்து நிலைபெறச் செய்தார்கள்.

(9) காலவழிப்பட்ட சில மரபுக் கட்டுப்பாடுகளையே அவை பெரிதும் பின்பற்றினாலும், அவற்றால் அவ் விலக்கியம் வறட்சியுடையதாகிவிடவில்லை.

(10) அவர்களிடம் இலக்கிய மரபு, அதன் அடிக்கருத்து, வடிவம் போன்றவற்றில் பழமை விருப்பம் பெரிதும் காணப்படுகிறது.

இவ்வாறு அவர் குறிப்பிடும் பல்வேறு கருத்துக்கள் சங்க இலக்கியத்திற்கும் பெரிதும் பொருத்தமுடையதாதலைச் சங்கப் பாடல்களைக் கற்றவர் உடன்படுவர். தமிழ் அன்றுதொட்டு இன்றுவரை வாய்மொழி மரபும் வரிவடிவ மரபுமாக இரண்டினைப் பெற்றிருந்தது. நாம் வாய்மொழி மரபு என்பதை முற்றிலுமாகப் புறக்கணித்து விட்டோம். அதனால் நம் இலக்கிய, கலை வரலாற்றில் பல இடைவெளிகள் விழுந்துவிட்டன. அவை ஏன் விழுந்தன என்பதை அறியவும் அங்ஙனம் விடுபட்ட மரபுகளை அறியவும் இயன்றவரை அவ்விடைவெளிகளை நிறைவு செய்யவும் இவ்வொப்பீடு பயன்படும்.

தமிழில் நாடகம், தனிநிலை, காப்பியப் பாக்கள் என்பன பாட்டுத் திறமாக - பண்பாகவுள்ளன. நம் அகப்பாடல் நாடக வடிவினது; தனி நிலைப் பாப்போன்றே கருத்தோட்டம் உடையது. நீண்ட பாடல்கள் காப்பியக் கூறுடையன. மூன்று வகைமைகளாக அங்கே கிளைத்த இலக்கியம் இங்கு முப்பண்பும்-ஒன்றில் ஒரு பண்பு கூடியும் மற்றது குறைந்தும்-அமைந்த நிலையில் வளர்ந்தமை தனியாய்வுக்குரியது.

நமக்கு உரை இலக்கியம் கிடைக்கப் பெறவில்லை. தொல்காப்பியம் பேசும் உரை வகைகளைச் சிந்தித்தால், வாய்மொழி மரபில் உரைவளம் இருந்தமை உணரப்படும். இறையனார் அகப்பொருள் உரை பத்துத் தலை முறைகளாக உரைக்கப்பட்டு வந்த மரபு ஒன்றே இதனை வற்புறுத்தும் சான்றாகும். சங்க இலக்கியம் சில கோணங்களில், சில கூறுகளில் அழுத்தம் காட்ட, கிரேக்கம், வேறு சில கோணத்தில் அல்லது கூறுகளில் தன் கவனத்தைப் பெரிதும் செலுத்தியது. இவை ஒப்பிடப்படின் இடைவெளிவிழும் பல இடங்கள் பற்றிப் பல கருத்துக் கூறுகள் கிடைக்கக்கூடும்.

தொல்காப்பியர் அங்கதம் பற்றி விரிவாக விளக்குவன இலக்கியத்தின் அல்லது கிரேக்கத்தில் காணப்படும் விளக்கங்களுடன் வியத்தகுமாறு ஒத்துப் போகின்றன. பிறகு நாம் விரிவான தனி அங்கதப் பாக்களைப் பெற்றிருக்கவில்லையே, ஏன்? அங்கதக் கூறுகள் உள்ள பாக்கள் சங்க மருதப் பாடல்களிலும் புறப் பாடல்கள் சிலவற்றிலும் மிக நுட்பமாக அமைந்துள்ளன. அரங்கேற்றம் பற்றிய கதைகள் சில அங்கத மரபு வளர்த்திருக்குமெனக் காட்டுகின்றன. ஆனால் வாய்மொழி மரபில் செழித்திருந்த அங்கத மரபே, இவற்றிற்கெல்லாம் அடிப்படையாக இருந்திருக்க வேண்டும் என நாம் எண்ணவேண்டியுளது.

சமுதாய நோக்கில் ஆராய்ந்தால், கிரேக்கர்கள் போர் புரிவதில் மட்டுமன்றி, பல்வேறு பந்தயங்களிலும் ஈடுபாடு காட்டினர். தேர் ஓட்டும் போட்டி முதல், ஒலிம்பிக்குப் பந்தயங்கள் வரை கிரேக்க காலத்திலேயே செல்வாக்குப் பெற்றவைதாம். அவை பற்றிய பாடல்கள் பல அங்குக் காணப்படவும், போர் கருதியே புனைந்த தமிழ் மரபில் பந்தயங்களைச் சிறப்பித்துப் பாடிய பாடல்கள் இல்லை. ஆனால் புறநானூற்று நக்கண்ணையார் பாடல் மற்போர் பற்றியும் பட்டினப்பாலை பல்வேறு பந்தயங்கள் பற்றியும் குறிப்பிடுவதால், தமிழ்ச் சமுதாயமும் அதனை ஒத்ததே என எண்ண முடிகிறது.

எனவே இத்தகைய ஒப்பீடுகள் இலக்கியமும் அதன் வளர்ச்சியும் அது வேரூன்றி வளர்ந்த சமுதாயமும் ஆகியவற்றைப் பற்றி ஒரு முழுமையான கருத்தை உருவாக்கப் பயன்படும் எனலாம்.

---

## கலந்துரையாடல்

**முருகரத்தனம் :**

வீட்டு நெறி பற்றி ஏன் தனியாகக் கூறவில்லை?

**தமிழண்ணல் :**

கி. பி. 8 ஆம் நூற்றாண்டு வரை வடமொழியில் அறம், பொருள், இன்பம் என்னும் திரிவர்க்கமே பேசப்பட்டன. பின்தான் வீடு பேற்றையும் சேர்த்துச் சதுர்வர்க்கம் எனப் பிரித்துப்

பேசினர். தமிழில் அறம், பொருள், இன்பம் என மூன்றே சிறப்பாகக் கூறப்படும். அறத்திலேயே வீடு அமைந்து விடுகிறது. அதனால்தான், திருவள்ளுவர் அறத்துப் பாலில் மெய்யுணர்தல், அவாவறுத்தல், துறவு போன்ற செய்திகளைக் குறிப்பிடுகிறார்.

**க. வெள்ளைவாரணனார் :**

அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பாகுபாட்டிலேயே வீடும் அமைந்து விடும். திருவள்ளுவர் இன்பத்தைச் சிற்றின்பம் பேரின்பம் என இரண்டாகப் பகுப்பர்.

> ''சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
> மற்றின்பம் வேண்டு பவர்.''

தீமை செய்பவர்களுக்கு நிரயம் இருத்தல் போல, நல்வினை செய்பவர்க்கு அதற்கு மாறான உயர்நிலை உலகம் உண்டு. இம்மை, மறுமை, அதற்கு மேல் அம்மை. அம்மை இன்பம் தான் வீடு பேறு என்பது. இதனைக் கருவிநூலால் கூற முடியாது. நாமே உய்த்துணர வேண்டுவதல்லது இன்ன தன்மையது என எடுத்துக் காட்ட இயலாது என பரிமேலழகரும் கூறுவார்.

**ச. வே. சுப்பிரமணியன் :**

கதைப்பாடல் ( ballads ) போன்றது முன்பு இருந்தது. பாரத இராமாயணக் கதைகள் பெரும்பாலான இந்திய மொழிகளில் காப்பியக் கதைக் கூறுகளாக இருந்தன. இவை பற்றிய கதைப் பாடல்கள் முன்பு இருந்திருக்கலாம். பத்தினிப் பெண்டிர் எழுவர் கதை, ஆதிமந்தி கதை முதலியவை கதைப் பாடல்களாக இருந்திருக்கும். இந்தியக் காப்பியங்களுக்கு அடிப்படையான வித்து சங்க இலக்கியத்தில் உண்டா என்றும் நோக்கலாம்.

**க. வெள்ளைவாரணனார் :**

வாய்மொழி இலக்கியத்திலிருந்து சங்க இலக்கியம் தோன்றியதா? பிற்காலத்திலிருந்து காட்டும் வாய்மொழிப் பாடற் சான்றுகள் சங்க இலக்கியச் சாயல் உடையனவே. தொடக்கத்தில் உள்ள வாய்மொழிப் பாடல் நமக்குக் கிடைக்கவில்லை. உரையும் பாட்டும் கிரேக்க மொழியில் மட்டுமல்லாமல் நம் தமிழ் மொழியிலும் இருந்தன என்பதற்குச் சான்றுகள் உள்ளன, 'உரையும் பாட்டும் உடையோர் சிலரே' எனப் புறநானூறு கூறுகிறது. ஆகவே உரைவகை, பாட்டு வகை பண்டு இருந்தமை புலனாம்.

**வேங்கட ராமையா :**

எண்ணுவண்ணம் பற்றிய விரிவைப் பிற்காலத்திலும் காண லாம். பரிபாடல் ஒன்றென, இரண்டென, எனத் தொடங்கித் தொண்டென என ஒன்பது வரைக்கும் தொடர்ந்து பாடிச் செல் வதைக் காணலாம். ஒன்றிலிருந்து பத்து வரை ஏறுமுகமாகவும், இறங்குமுகமாகவும் எண்ணலங்காரத்தில் பயன்படுத்திப் பாடிய பாடல்கள் உண்டு. திருவெழு கூற்றிருக்கை என்னும் சிற்றிலக்கிய வகையின் எண்ணலங்காரம் தொல்காப்பியர் கூறும் எண்ணுவண் ணத்தின் வளர்ச்சியாகும்.

**மூர்த்தி :**

ஒப்பிலக்கியம் என்பது இரண்டுக்கு மேற்பட்ட இலக்கியத் தோடு ஒப்பிட்டுப் பொதுத் தன்மையைக் காண்பது தான். மானிடவியலோடும், சமூகவியலோடும் இலக்கியத்தை ஒப்பிடுவது ஒப்பிலக்கியமாகாது. இரண்டு மொழிகளை ஒப்பிடுவதும் ஒப்பியல் ஆகாது. ஒப்பியல் நோக்குத் தோன்றியதற்குக் காரணம் உலகப் பொதுமையையும் ஒருமைப்பாட்டையும் காண்பதற்குத்தான். உரையும் பாட்டும் என்பதில் உரை என்பது கிரேக்கத்தில் உரை யாடலையும் சொற்பொழிவையும் உணர்த்தும். தீவு, தீவகற்ப அமைப்புடைய நாட்டில் செய்யுள்தான் மிகுதியாக வழங்கும். தரைவழி இணைப்புள்ள நாட்டில் உரைநடை மிகுதியாக வழங் கும்.

**முருகரத்தனம் :**

ஒப்பிலக்கிய நோக்கில் தமிழை ஏனைய மேலைநாட்டுமொழி களுடன் ஒப்பிடுவதைவிட வடமொழி ஏனைத் திராவிட மொழி களுடன் ஒப்பிடுதலே தக்கது. தொல்காப்பியத்திலுள்ள அங்கத நூல் வகை, சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. கந்தழி, வள்ளி, தொன்மை, தோல் முதலியவற்றின் குறிப்பும் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை. பண்ணத்தி தொல்காப்பியர் காலத்தில் விரிவாக இருந்தும் நமக்குப் பிற்காலத்தில் கிடைக்க வில்லை. கால இடையீடு மிகுதியாக உள்ளது. தொல்காப்பியர் கூறும் அறுவகைப் பிரிவுகளுள் ஓதற் பிரிவு பற்றிச் சங்க இலக்கியத் தில் காண முடிவதில்லை. இவையெல்லாம் காணப்படாமைக் குரிய காரணம் என்ன? காணப்பெறாத இடைவெளியை எப்படி நிறைவு செய்வது? மேனாட்டறிஞர்கள் ஒப்பு நோக்கிச் சங்க இலக்கியம் பற்றிச் சிறப்பாக ஆராய்ந்து எழுதுகின்றனர். இங் குள்ள தமிழாய்வாளர்கள் அங்ஙனம் எழுதுவதில்லை. தமிழ்

மொழியோடு உடனுள்ள மொழிகளை ஒப்பிட்டு இடைவெளி களைக் காண வேண்டும்.

**தா. ஏ. ஞானமூர்த்தி :**

திராவிட மொழிகளோடு தமிழை ஒப்பீடு செய்யும் பணியில் ஈடுபடத் துணைவேந்தரே முயற்சி செய்கிறார். ஆகவே, தொல் காப்பியர் காலத்திற்கும் பிற்காலத்திற்கும் நடுவில் ஏற்பட்டுள்ள இடையீட்டைத் தமிழ்ப் பல்கலைக் கழகமே முயன்று நிறைவு செய்யும். ஒப்பிலக்கிய ஆய்வு என்பதற்கு மேனாட்டார் கூறும் வரையறையான இலக்கணத்தை மட்டும் வைத்து நோக்காமல் நாமே வரையறுத்து முடிவு செய்தல் நல்லது.

**கோதண்டபாணி :**

மேனாட்டார் தொடர்பால் பல இலக்கியக் கலைகள் இங்கு வளர்ந்துள்ளன. ஆகவே, மேனாட்டார் இலக்கியத்தோடு ஒப்பீடு செய்தலைத் தவிர்க்காமல், முதற்கண் மேனாட்டு இலக்கியங் களோடு ஒப்பீடு செய்வது நல்லது. அடுத்தநிலையில் திராவிட மொழிகளோடும் இந்திய மொழிகளோடும் ஒப்பீடு செய்யலாம்.

**சீனிச்சாமி :**

இலக்கியத்தை நாம் இன்னும் இலக்கியமாகக் கருத முற்பட வில்லை. ஒப்பிலக்கியம் வேறு, ஒப்பியல் திறனாய்வு என்பது வேறு. இவ்வேறுபாடு தெரியாமல் ஒன்றெனக் கருதிச் சிலர் மயங்குகின்ற னர். காப்பியத்திற்கு நிலைபேறு எதனால் வருகிறது? எங்கிருக் கிறது? எனக் காண வேண்டும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கால் மட்டும் காப்பியத்திற்கு நிலைபேறு வந்து விடுமா? காப்பியத்திற்கு உள்ள அணுகு முறையை மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டும். வெறும் சிறப்பினையும் நயத்தினையும் மட்டும் கூறிக் கொண்டிருப்பதில் பயனில்லை.

**ஞானசுந்தரம் :**

மொழி ஒப்பீட்டு ஆராய்ச்சி நல்லதுதான். ஆனால், அவ் வாய்வு தொடர்புடைய இலக்கியத்தில் அமைதல் வேண்டும். ஒருகாலத்தில் சமயக் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு ஆராய்ந்ததால் தான் தமிழ் வளரவில்லை என்றார்கள். ஆனால், இப்பொழுது மார்க்சு தத்துவக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு தமிழிலக்கியத்தை ஆராய்கிறார்கள். அது பொருத்த மில்லை. மார்க்சு தத்துவத்தைச் சமூக முன்னேற்றத்திற்குப் பின்

பற்றுவது தவறென்று குறிப்பிடவில்லை. அதனை அளவுகோலாக வைத்துக்கொண்டு தமிழிலக்கியங்களை ஆராய்தலாகாது. தமிழிலக்கியத்தை அடிப்படையாகக்கொண்டு ஆராய வேண்டும். பௌரா, சார்டுவிக்கு போன்றோர் கூறும் கருத்தைத் தமிழிலக்கியத்தோடு ஒட்பிடுதல் பொருந்தாது. ஒவ்வொரு நாட்டின் சமூக மதிப்பீடு கொண்டே, அந்நாட்டு இலக்கியத்தை அளப்பது நன்று. கற்பைப் பெரிதும் மதிக்காத மேனாட்டு இலக்கியக் குறிக்கோளைக் கொண்டு சிலப்பதிகாரக் கண்ணகியின் சிறப்பை அளவிடுதல் எவ்வகையில் பொருந்தும்?

**தமிழண்ணல் :**

சங்க காலத்தில் தனிப்பாடல்களே பெரிதும் தோன்றின. அப்பொழுதே பத்துப் பாடல்களாகப் பாடும் வளர்ச்சியும் காணப்பட்டது. பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு இதன் படி வளர்ச்சியே ஆகும். உரை என்பது உரையாடலிலிருந்து வந்தது தான். இலக்கண உரையாசிரியர்களின் உரைப்போக்கை நோக்கின் இந்நூற்பா என்நுதலிற்றோ எனின், எனத் தொடங்கி இன்னது நுதலிற்று என முடித்தலைக் காணலாம். இது வினா எழுப்பி விடைசெப்பும் பாங்கினை உணர்த்துவதாகும். உரைநூல் வகைகளுள் ஒன்றுதான் கதை சொல்வதும். வாய்மொழிப்பாடல்களில் பல்வகைக் கலைகளின் சிறப்புக்கள் பொதிந்துள்ளன. அப்பாடல்களை மறந்ததால் பல்கலைச் சிறப்பை நாம் உணர வாய்ப்பில்லாது போயிற்று. கொத்தனார் பேசுகின்ற நடைமுறைச் சொற்களை ஆராய்ந்தால், கட்டடக்கலை பற்றிய பல செய்திகளை அறியலாம். இதுபோலவே, ஒவ்வொரு துறையிலும் வாய்மொழிச் செய்திகளை ஆராய வேண்டும்.

அங்கதம் தனி நூலாக இல்லையே தவிர அங்கதக்குறிப்புக்கள் சங்கப் பாடலகளில் மிகுதியாக உள்ளன. மருதத் திணை பற்றிய பாடல்களில் அங்கதக் குறிப்பு மிகுதியாக உண்டு.

> ''எம்மிற் பெருமொழி கூறித் தம்மில்
> கையும் காலும் தூக்கத் தூக்கும்
> ஆடிப் பாவை போல
> மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே''

என்ற குறுந்தொகைப் பாடல் சிறந்த அங்கதமாகும். மேனாட்டார் பல ஆய்வு நெறிமுறைகளைத் தம் திறனாய்வு நூல்களில் வெளியிட்டுள்ளனர். அவற்றை அறிந்து, சங்கப் பாடல்களிலும் அவற்றைப் பொருத்திப் பார்க்கலாம்.

## முடிவுரை

புதை மணலில் அணைகட்டுவது கடினம். அஃதனைக் கரிகாற் சோழன் கல்லணை மூலம் செய்து காட்டினான். இத்தகு தொன்மையான செய்திகளைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. இதனைத் தொன்மையான கிரேக்க மொழியுடன் தான் ஒப்பிட முடியும். பௌரா கூறும் காப்பியத்திற்குரிய இலக்கணத்தைச் சிலப்பதிகாரத்தில் பொருந்தி உள்ளதா என்று நோக்குவதில் தவறில்லை. மேல்நாட்டுத் திறனாய்வுகளை அறிந்து நம் சங்க இலக்கியத்தைப் படிப்பதனால் சிறந்த பல செய்திகளை அறிய முடிகிறது.

---

# மூன்றாம் அமர்வு

## தலைவர் தா. ஏ. ஞானமூர்த்தி

### முன்னுரை

சங்க இலக்கியங்கள் தனிப்பாடல்களால் இயன்றவை. அவை உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் பெற்றியன. பாடுபொருள் ஒன்றாயினும் பாடும் புலவர்களின் தனித் தன்மைக்கேற்ப அப்பொருளைப் பற்றிய செய்திகள் வேறுபடுகின்றன. அறிவியலில் ஒரு பொருளைப் பற்றி ஆராயின், அத்தகைய வேறுபாடுகள் தோன்றா. ஔவையார் தலைவியின் பிரிவுத் துன்பத்தை உணர்த்தும்போது,

''உள்ளின் உள்ளம் வேமே
உள்ளாது இருப்பின் எம்அளவைத் தன்றே''

என்று கூறுகின்றார். பின்னர்,

''வான்தோய் வற்றே காமம்''

என்று அவளது காமத்தன்மையை உணர்த்துகின்றார். அதே பிரிவுத் துன்பத்தைப் பதுமனார் வேறு வகையில் புலப்படுத்துகின்றார்.

நள்ளென் றன்றே யாமம், சொல்அவிந்து
இனிது அடங்கினரே மாக்கள்; முனிவுஇன்று
நனந்தலை உலகமும் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே. (குறுந். 6)

பாடு பொருள் ஒன்றானாலும் புலப்படுத்தும் நெறியில் இப் புலவர்கள் வேறுபடுவதைக் காணலாம். அறிவியலில் நேர்கோடாவது யாது என வினவின் எல்லோரும் ஒருவழித்தாய் இரு புள்ளிகளுக்கு இடையே உள்ள ஒரு குறைந்த அளவு தூரம் என்றே செப்புவர். சங்கப் பாக்கள் புலமை, உணர்ச்சி, சூழல் முதலியவற்றிற்கேற்ப வேறுபடும். இந்நோக்கத்தினை உணர்ந்து சங்க இலக்கியத்தினை ஆராய வேண்டும்.

# 5. சங்க இலக்கியத்தில் அறவியல் நோக்கு

இரா. சாரங்கபாணி

பண்டைக் காலத்தில் அறநூல்கள் தனித்து இருந்தனவா என நோக்குங்கால் தொல்காப்பியச் சில நூற்பாக்களால் அவை இருந்தமை புலனாகின்றது. அறச்செய்திகள் கூறும் பாவகை பற்றித் தொல்காப்பியம் விதந்து கூறுகின்றது. மேலும் முது மொழி, வாயுறை வாழ்த்து, அங்கதம் என்னும் யாப்பு வகைகள் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் அறம் உணர்த்துவன என அறிகிறோம். அடிவரையில்லாதன எனத் தொல்காப்பியர் குறிப் பனவற்றுள்ளும் மந்திரம், முதுமொழி, குறிப்பு என்பன அறம் உணர்த்தும் பெற்றியனவாம். எண்வகை வனப்பினுள் அம்மை யும் தோலும் அறம் சுட்டுவனவே. வாழ்த்து நிலையில் வரும் புறநிலை, வாயுறை, செவியறிவுறூஉ, அவையடக்கியல் என்னும் நால்வகைச் செய்யுளும் அறம் நுவலும். வாயுறை என்பதற்குச் சொல் மருந்து எனப் பேராசிரியர் பொருள் காண்பர். இதனால் தான் அறச்செய்திகளைக் கூறும் திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி என்னும் நூல்கள் மருந்துப் பெயர்களைப் பெற்றன போலும். மேற்கூறிய செய்திகள் பண்டு அறவிலக்கியங்கள் இருந் தமையை வலியுறுத்தும்.

சங்ககாலத்தில் தனியே அறநூல் இருந்ததாகப் புலப்பட வில்லை. ஆனால் தனித்தனியே பாடப்பட்ட சங்கப்பாடல்களில் அறச்செய்திகள் ஆங்காங்கே விரவிக் கிடக்கின்றன. வாழ்க்கைக்கு உறுதிபயக்கும் பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என நான்கென்பர். வீடு நீங்கிய ஏனைய மூன்றையும் தொல்காப்பிய மும் சங்கஇலக்கியமும் குறிப்பிடுகின்றன.

> ''அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
> மும்முதற் பொருட்கும் உரிய என்ப''
>
> (தொல். செய்யுளியல் 102)

''இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை'' (தொல். களவியல் 1)

''சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல'' (புறம். 31)

''அறம்பொருள் இன்பமென் றம்மூன்றின்'' (கலி. 141:3)

அம்மூன்றனுள், இன்பத்தை அகப்பாடல்களும் ஏனைய இரண்டனைப் புறப்பாடல்களும் விரித்துக் கூறும்.

சங்ககாலத்தில் வீரமும் கொடையுமே இருகண்ணெனப் பெரிதும் சிறப்பிக்கப்பட்டன. புகழுக்குரிய வாயில்களாக அவையே அமைந்தன. 'வண்புகழ்', 'மறப்புகழ்' எனக் கொடையும் வீரமும் பலவிடத்துப் புகழொடு இயைத்து ஏத்தப்பெறும். அகம், புறம் எனப் பகுக்கப்பட்டுள்ள சங்கப்பாடல்களின் தொகை 2381. அவற்றுள் 1862 அகம் தழுவியன. 519 புறம் பற்றியன. 140 அகப்பாடல்களிலும் 75 புறப்பாடல்களிலும் அறச் செய்திகள் வருகின்றன. தோழி, தலைவி, தலைவன், பாணன், பரத்தை, பாங்கன் முதலியோர் கூற்றில் அறச்செய்திகள் காணப்படும். களவுக் காலத்தே தலைவனிடத்தில் திருமணத்தை வலியுறுத்தி முடித்தல் தோழியின் பெரும் பொறுப்பாக இருத்தலினாலும், கற்புக் காலத்தில் பிரிவிடை வருந்தும் தலைவியைத் தேற்றுதல் அவள் கடனாதலினாலும் அவள் கூற்றில் தான் பெரும்பாலும் அறங்கள் பேசப்படுகின்றன. தோழி, செவிலிக்கு அறத்தொடு நிற்கும்பொழுது அரிய நீதியைப் புலப்படுத்துகின்றாள். முத்தினாலும், மணியினாலும், பொன்னினாலும் செய்யப்படும் அணிகலன்கள் சிதைந்தால் அவற்றைச் செம்மையுடையவாகத் திருத்தி அமைத்துக் கொள்ளலாம். ஆனால் பண்பு நலன்களில் ஏதேனும் சிறிது குறைவு ஏற்பட்டாலும் அதனை எக்காரணங் கொண்டும் நிறைவு செய்ய முடியாது. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படல் வேண்டும் என்ற செய்தியை வலியுறுத்திக் களவு ஒழுக்கத்தினைத் திருமணம் முடித்துக் கற்பொழுக்கமாக மாற்றுகின்றாள்.
(குறிஞ்சிப். 13-19)

தலைவன், திருமணத்தைத் தள்ளிப் போட்டுக் களவிலேயே தொடர்ந்து இன்பம் காண விழைகின்றான். விரைந்து திருமணம் முடிக்கக் கருதிய தோழி, அலர், வேற்றுவரைவு முதலியவற்றால் வரும் தலைவியின் துன்பத்தை எடுத்துக் கூறுகிறாள். அப்

பொழுது 'பழகியவர்கள் மனம் நோகாமல் நடந்து கொள்வது தானே நாகரிகம்' என்னும் சீரிய அறக்கருத்தைத் தோழி தலைவனுக்கு எடுத்துக் கூறுகிறாள். நெடுநாள் பழகியவர்கள் நஞ்சினைக் கொடுத்து உண்ணெனக் கூறினும், உண்ணாவிடின் கொடுத்த நண்பரின் உள்ளம் வருந்துமே எனக் கருதி, முகமலர்ச்சியுடன் அதனை உண்பது பண்புடையாரின் செயல்.

''முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்'' (நற். 355)

அப்படி இருக்க அன்பொடு பழகிய தலைவியின் உளம் நோகச் செய்யலாமா? எனத் தோழி தலைவனை வினவுகிறாள்.

தலைவன் தன்பாற் கொண்டுள்ள அன்பு நாளடைவில் குறைந்து வருவது கண்டு தலைவி கவல்கின்றாள். அப்பொழுது தோழி, ஒருவரிடம் தொடர்பு கொள்வதற்கு முன்பே அவர்களின் குணம், குற்றங்களை நாடி இருக்கவேண்டும். தொடர்பு கொண்டபின் குறை காண்டல் தக்கதன்று என்னும் நீதியை எடுத்துக்கூறி அமைதிப்படுத்துகின்றாள்.

''...............பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே'' (நற். 32)

தலைவன் விரைவில் மணவாது களவை நீட்டிக்கின்றான். அதனால் ஊரில் பலரும் அலர்கூறி எள்ளி நகையாடுகின்றனர். அதனைக் கேட்டுத் தலைவி இம்மையில் நன்மை செய்தார்க்குத் தீமை வராது; நன்மையே வரும் என்று கூறுவார்களே! அந்தப் பழமொழி என்னைப் பொறுத்தவரையில் பொய்யாகி விட்டதே என்று தோழியிடம் கூறி வருந்துகின்றாள்.

''...........இம்மை
நன்றுசெய் மருங்கில் தீதில் என்னும்
தொன்றுபடு பழமொழி இன்றுபொய்த் தன்றுகொல்''
(அகம். 101)

இதனால் நன்மை செய்வார்க்குத் தீமை வராது என்ற கருத்து பண்டைக் காலத்தில் பழமொழிபோல் வழங்கி வந்தது என அறிகின்றோம்.

தலைவன் தலைவியை அழைத்துக்கொண்டு உடன்போக்குச் செல்கின்றான். பாலைவன வழிகளைக் கடந்து செல்லும்பொழுது பல தொல்லைகளைக் கடக்க நேரிடுகின்றது. பின் ஓரிடத்தில் தங்கி இனித் துன்பம் இல்லை; இன்பமே என்று கூறுகின்றான். அப்போது தன் மகிழ்ச்சிக்கு, இடையறாது முயலும் ஆள்வினை உடையார் வழிபடு தெய்வத்தைக் கண் எதிரே கண்டு மகிழ்வதை உவமை காட்டுகின்றான். (நற். 9)

''குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்'' (குறள் 1023)

என்னும் குறட் செய்தி, தலைவன் கூற்றில் அறமாக மிளிர்கின்றது. இரவுக் குறியில் தலைவியைக் காண முடியாமல் சோர்ந்த உள்ளத்தோடு மீள்கின்றான். அப்பொழுது நெஞ்சைப் பார்த்து, நீ இனி அவளை அடையமுடியாது. வறியவன் இன்பத்தை விரும்புவது போல நீ அவளை விரும்புகின்றாய்.

''இல்லோன் இன்பங் காமுற் றாங்கு'' (குறுந். 120)

எனக் கூறுகின்றான். பொருளில்லான் எவ்வகை இன்பத்தையும் எய்த முடியாது என்ற கருத்தினைத் தலைவன் உவமையால் புலப்படுத்துகின்றான். இவ்வாறு களவுப்பாடல்களில் அறச் செய்திகள் பல்வேறு நிலைகளில் வெளிப்படுத்தப்படுகின்றன.

கற்பொழுக்கப் பாடல்களில் வரும் அறங்களை இனிக் காண்போம். தலைவன் பரத்தையிற் பிரிந்தமையால் தலைவி ஊடல் கொள்கின்றாள். தலைவியின் ஊடலைத் தணிக்கத் தலைவன் தோழியை வாயில் வேண்டுகின்றான். தலைவியின் ஊடலைத் தணிப்பதற்காகத் தோழி, தலைவனிடம் சிறிது கடுமையாகப் பேசுகின்றாள். ஒருவன் பட்டங்களையும் பாராட்டுக்களையும் பெறுவதும், யானை, குதிரை முதலிய ஊர்திகளில் செல்வதும் செல்வம் எனப்படா. இவை முன்செய்த நல்வினைப் பயனால் வருவன. சான்றோர்கள் செல்வம் என இவற்றை மதியார். அவர்கள், தம்மை அடைந்தாரை எக்காரணங்கொண்டும் துன்புறுத்தாது, அவருக்கு ஏற்படும் துன்பம் கண்டு அஞ்சி, அருள் செய்வதையே செல்வமாக மதிப்பர். உன்னிடம் அந்த அருட் செல்வம் இல்லையே எனக் குறிப்பிடுகின்றாள்.

''நெடிய மொழிதலும் கூடிய ஊர்தலும்
செல்வ மன்று;தன் செய்வினைப் பயனே

சான்றோர் செல்வ மென்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வமென் பதுவே'' (நற். 210)

அருட்செல்வம் தான் செல்வத்துட் செல்வம் என்னும் கருத்து தோழியால் வலியுறுத்தப் பெறுகின்றது.

ஒரு தலைவன் தலைவியை வலிதின் முயல்கிறான். அவள் வெகுண்டுரைத்தாள். எனக்குப் புல்லுதல் இன்பமாக இருக்கிறது; அதனால் புல்லினேன் என்றான். அதற்கு மறுமொழி கூறிய தலைவியின் சொல் அறமாக மிளிர்கின்றது. தனக்கு இன்பம் என்று பிறர்க்குத் துன்பம் தரலாமா?

''தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று'' (கலி. 62)

இவ்வாறு பலவகையான அறக்கருத்துக்களும் அகத்திணைப் பாடல்களில் இடம் பெறுகின்றன.

தலைவன் பிரியப் போகின்றான் என்பதனைக் குறிப்பிலுணர்ந்து தோழி தலைவிக்குணர்த்துகின்றாள். அதற்கு 'அவர் பிரியமாட்டார். அவர் சொன்ன சொல் தவறாதவர். அவர் நட்பு மிக இனியது. தாமரைப் பூவின் தேனையெடுத்துச் சென்று மலைமேலுள்ள சந்தன மரத்தில் கூடுகட்டியுள்ள தேனின் இனிமைபோலச் சிறந்தோர் நட்பு இன்பம் தரும்' என்கிறாள் நற்றிணைத் தலைவி. ஆனால் குறுந்தொகைத் தலைவியோ தலைவன் நட்பு நிலத்தினும் பெரிது, கடலினும் ஆழமானது, வானத்தினும் உயர்ந்தது என நட்பின் ஆழம் உயரம் பற்றிப் பேசுகிறாள். இவ்வாறு தலைவியர் வாயிலாக நட்பிலக்கணம் சுட்டப் பெறுகிறது.

பிரிவில் மெலிந்த தலைவியைத் தோழி அறிவுரை கூறி ஆற்றுகின்றாள். அதற்குத் தலைவி கூறும் மறுமொழியில் பலவகையான அறக்கருத்துக்கள் காணப்படுகின்றன. பிரிவாற்றாது தலைவி இறந்து போனால் பிரிந்து சென்று ஈட்டிய பொருளினால் யாது பயன்? இக்கருத்தை வற்புறுத்த மூன்று செய்திகளை அடுக்கிக் கூறுகிறாள் தலைவி.

மருத்துவர்கள் மரம் அழியும்படியாக மருந்திற்கெனப் பட்டையையோ, வேரையோ, இலையையோ கொள்ளமாட்டார்கள்.

உடல்வலிமை கெடும்படி துறவிகள் தவம் செய்ய மாட்டார்கள். குடிமக்கள் வறுமையுறுமாறு மன்னர்கள் வரி வாங்கமாட்டார்கள். இத்தலைவியின் உரையால் மருத்துவர், தவமுனிவர், அரசர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் எனக் கூறப்பெறுதல் காணலாம்.

பொதுவாகச் சங்கப் பாடல்களில் அகத்திணையாயினும், புறத்திணையாயினும் தலைவன், தலைவி, தோழி, பரத்தை முதலிய எவர் கூற்றாயினும் கொடையறம் அழுத்தமாகக் கூறப்பெறுகின்றது. தொல்காப்பியர் 'மாணலந்தா' எனத் தலைவனைக் கேட்டலைக் கற்பியலில் (9) தோழி கூற்றில் ஒருதுறையாக வகுத்துள்ளார். இதனை அழகுறச் சித்திரித்துக் காட்டுகிறார், சாத்தனார். பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம் சென்று நம்மிடம் துய்த்த இன்பத்தைத் திருப்பித் தா எனக் கேட்போம் வா எனத் தோழி தலைவியை அழைக்கிறாள். அதற்கு அவள் தரும் விடை, துன்பக் காலத்து ஒருவர் வேண்டி இரந்து பெற்ற ஒன்றைப் பின் திருப்பித் தா என்று அவரைக் கேட்டலை விட நாம் உயிர்துறந்து சாதல் துன்பந்தருவதாகுமா? என்பது தான்.

''இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய
கொடுத்தவை தாவென் சொல்லினும்
இன்னா தோநம் இன்னுயிர் இழப்பே'' (குறுந். 349)

'இடும்பையால் இன்மை உரைத்தார்க்கு அது நிறைக்கலாற்றாக்கால் தன்மெய் துறப்பான் மலை' எனும் கலித்தொகை (43) யும், 'சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம் ஈத லியையாக் கடை' எனும் குறளும் (230) ஒப்பு நோக்கத் தகும்.

தலைவன் பிரிந்து பொருளீட்டச் செல்வது, 'ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லை' என்பதனைக் கருதியேதான். 'ஈத்துவக்கும் இன்பம்' மிகச் சிறந்தது என்பது சங்ககாலத்துக் கருத்து. வள்ளுவரும் மகளிர் இன்பத்துக்குத் 'தம்மில் இருந்து தமது பாத்துண்டலை' (1107) ஒப்புமை காட்டுவர். மருதனிள நாகனார் வள்ளுவரை விட ஒருபடி மேலேறி, தலைவியின் இன்பத்தைவிட ஈதல் இன்பம் சிறந்தது என்று தலைவன் கூற்றில் வைத்துத் தம் கருத்தைப் புலப்படுத்துகின்றார்.

''சுரும்புண விரிந்த பெருந்தண் கோதை
இவளினும் சிறந்தன்று ஈதல்'' (அகம். 131)

ஈதல் அறம் சிறப்பிக்க வந்த அடிகளில் தலைவி சூடிய பூமாலையும் வண்டுகளுக்கு விருந்து படைக்கிறது என்னும் கருத்தில் 'சுரும்புண விரிந்த பெருந்தண்கோதை' எனக் கூறியிருப்பது நமக்கெல்லாம் இலக்கிய விருந்தளிக்கின்றது.

அகநானூற்றில் பரத்தை ஒருத்தி வஞ்சினம் கூறுகிறாள். அதில் 'தலைவியிடம் சென்றுள்ள தலைவனை மீண்டும் நான் இங்குக் கொண்டுவந்து சேர்க்காவிட்டால் என் அழகெல்லாம் கெடுவதாக' என அவள் சூளுரைக்கின்றாள். அழகு கெடுவதற்கு ஓர் அழகிய உவமை கூறுகிறாள். இரப்போர்க்குக் கொடுக்காமல் வைத்திருக்கும் கஞ்சனின் கைப்பொருள் பிறர்க்குதவாமல் வருந்திக் கெடுவதுபோலத் தன் எழினலம் கெடுக என்கிறாள்.

''இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே'' (அகம். 276)

பிறர்க்குப் பயன்படாத கஞ்சனின் பொருளுக்குப் பிறர்க்குப் பயன் படாது கழியும் பரத்தை எழினலம் இங்கு ஒப்புமையாகின்றது. திருவள்ளுவர் எழில் வாய்ந்த குமரி மணமாகாது கிழவியாதலை வறியார்க்குதவாதவனது செல்வத்துக்கு உவமை கூறுதல் (1007) நினையத்தகும். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாராட்டும் போது, அவன் கொடைச் சிறப்பை,

''ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்
இரவலர் புன்கண் அஞ்சும் (பதிற்றுப். 57)

என்று காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாராட்டுவார். தலைவியால் கொள்ளும் ஊடல் அச்சத்தைவிட இரவலரிடம் கொள்ளும் அவல அச்சம் பெரிது எனக் கூறி ஈதலறம் காட்டுதல் மிகச்சிறப்பாக உள்ளது.

நக்கீரரும் தலைவியின் பசலைநோய் தலைவனைக் கண்டதும் விரைந்து நீங்கியதற்கு ஈதலையே கடமையாகக் கொண்டவனது கைப்பொருள் ஒருவழி நில்லாது விரைந்து செல்லுதலை உவமை காட்டுவர்.

''நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சின்
கடப்பாட் டாளன் உடைப்பொருள் போல

தங்குதற் குரிய தன்றுநின்
அங்கலுழ் மேனி பாய பசப்பே'' (குறுந். 143)

புறநானூற்றிலும் அதே நக்கீரர்,

''செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே'' (புறம். 189)

எனக் கொடையறத்தை வலியுறுத்திக் கூறுகின்றார். வீரத்தினால் ஈட்டிய பொருளை வறியவர்க்கு வழங்குதலையே சங்க இலக்கியம் சிறப்பித்துக் கூறுகின்றது. மழபுலவஞ்சி, உழபுலவஞ்சி, பாதீடு, கொடை முதலிய புறத்துறைகளும் இதனை உணர்த்தும். மதுரைக்குமரனார் ஈர்ந்தூர் கிழான் தோயன்மாறனைப் புகழும் துறையும் இக்கருத்தை வலியுறுத்துகிறது. இரவலர்கள் பொருள் வேண்டித் தோயன்மாறனை இரக்கின்றனர். அவன் இரவலர்தம் ஒட்டிய வயிற்றைச் சுட்டிக் காட்டிக் கொல்லனை நோக்கி விரைவில் இவ் வேலை வடித்துத் தருக என இரக்கின்றான். காரணம் வேல் கொண்டு வெற்றி எய்தி, வெற்றியால் வந்த பொருளைக் கொண்டு இரவலர் பசி போக்குதலேயாகும்.

தோழி கூற்றில் வரும் இயற்கைப் புனைவிலும் ஈதலறம் வலியுறுத்தப் பெறுகின்றது. மலைப்பகுதியில் பலாமரக்கிளைகளில் எல்லாம் இனிய பழங்கள் தொங்குகின்றன. அப்பழத்தின் இனிமையைக் குறிப்பிடும்போது தம்முடைய முயற்சியால் பொருளீட்டி அதனைப் பகுத்துப் பிறரோடு உண்ணும் இன்பத்தினை அதற்கு உவமையாகக் கூறுகிறார்.

''தம்மில் தமதுண் டன்ன சினைதொறும்
தீம்பழம் தூங்கும் பலவின்
ஓங்கு மலைநாடன்'' (குறுந். 83)

இவ்வாறு பல்வகையிலும் சங்க இலக்கியத்தில் ஈதல் அறம் சிறப்பிக்கப்பெறும். தொல்காப்பியர் காலத்தும் இந்நிலைதான். அதனால்தான் புகழுக்குக் காரணமான வண்மையை விதந்து 'வண்புகழ்' (1336) என்றும் 'இடையில் வண்புகழ்க்கொடைமை' (1022) என்றும் தொல்காப்பியர் சுட்டுவர். சங்க காலத்தை ஒட்டிய திருக்குறளில் ''ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியமில்லை உயிர்க்கு'' (231) என வள்ளுவரும் தம் பண்டை

மரபை ஒட்டி அறங்கூறுதல் நோக்கத்தகும். இக்கருத்துக்களை எல்லாம் ஒருசேரத் தொகுத்து நோக்கும்போது சங்க காலம் வீர யுகம் மட்டுமன்று, கொடையுகமுமாம் எனத் துணிந்து கூறலாம்.

புறத்திணைப் பாடல்களில் பொருண்மொழிக் காஞ்சி, செவி யறிவுறூஉ, முதுமொழிக் காஞ்சி என்னும் துறைகளில் வரும் பாடல்கள் அறக் கூறுகளைப் புலப்படுத்துகின்றன. புலவர்கள் குறுநிலமன்னர்கள் முதலியோர்களைப் பாராட்டும்பாடல்களிலும், அவர்கள் இறந்த நிலையில் பாடும் கையறுநிலைப் பாடல்களிலும், வேந்தர்கள் கூறும் வஞ்சினப் பாடல்களிலும், புலவர்கள் தம் வாழ்க்கை வரலாறு உணர்த்தும் பகுதிகளிலும், சில சமயங்களில் இயற்கைப் புனைவுகளிலும் அறச் செய்திகள் காணப்படுகின்றன. நெடுஞ்செழியனின் மறச்சிறப்பை வியந்து பாராட்டும் இடைக் குன்றூர் கிழார் அவன் வீர இயல்புகளைக் குறிப்பிடுகின்றார்.

''உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும் இழிந்தன்றும் இலனே; அவரை
அழுந்தப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்
கவிழ்ந்து நிலஞ்சேர அட்டதை
மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும் அதனினும் இலனே''
(புறம். 77)

இவ்வடிகள் நெடுஞ்செழியனின் பெருமிதச் சான்றாண்மை யைக் காட்டும். ''பெரியோரை வியத்தலும் இலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'' என்ற கணியன் பூங்குன்றனாரின் கருத்தினை நெடுஞ்செழியன் வீரர்களிடம் நடந்து கொண்ட நிலையில் காண்கின்றோம். புறநானூற்றில் ஈதற் சிறப்புக் காணப்படுவதோடு ஈகின்ற முறையும் விரிவாகச் சுட்டப்படுகிறது. இரவலரின் அவலக் குறிப்பை முகத்தான் உணர்ந்து வறுமையைப் போக்க வேண்டும் (புறம். 3); கொடை செய்யும்போது பிறர்பால் சென்று மீண்டும் இரக்காதவாறு மிகுதியாகக் கொடுக்க வேண் டும் (புறம். 68); விருந்தினர்கள் ஒருநாள் இருநாள் அன்றிப் பலநாள் பலரோடு வந்தாலும் தலைநாள் போன்று அகமமர்ந்து முகமலர்ச்சியுடன் விருந்தோம்ப வேண்டும் (புறம். 101); எல்லோ ரையும் சமனாகப் பொதுநோக்குக் கொள்ளாமல் வரிசையறிந்து சிறப்பு நோக்கி நல்க வேண்டும் (புறம். 121); ஏற்போருடைய தகுதிபாராது கொடுப்போர் தம் தகுதி உயர்வை அறிந்து

வழங்க வேண்டும். இம்மையில் நல்வினை செய்தால் மறுமைப் பயன் கிடைக்கும் என்ற வணிகநோக்கில் கொடை செய்தல் ஆகாது (புறம்.134) எனக் கொடை பற்றிய செய்திகள் பல வாறாகப் பேசப்படுகின்றன.

இம்மையில் நல்வினை செய்தால் அதனை மறுமையில் துய்க்கலாம் என்ற கொள்கை காணப்படினும் அது பிற்காலத்து நீதி நூல்கள் போலப் பலவாறு விரித்துப் பேசப்படவில்லை. மறுமை இன்பம் கருதிக் கொடை செய்தல் அறவிலை வணிகம் என முடமோசியாரால் இழித்துக் கூறப்படுகின்றது. ஆய் அண்டிரனைப் புகழும் பொழுது,

''இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆயலன்'' (புறம். 134)

என அவர் குறிப்பிடுவார்.

மூவேந்தர்கள் கூறிய வஞ்சினப் பாடல்கள் அறம் நிறைந் தவை. ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன், தன் வஞ்சினத்தில்

''அறனிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக'' (புறம். 71)

என்றும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்,

''என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது,
'கொடியன் எம்இறை' எனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக;
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக,
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை;
புரப்போர் புன்கண் கூர,
இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே'' (புறம். 72)

என்றும், சோழன் நலங்கிள்ளி,

''பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்

பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே'' (புறம். 73)

என்றும் வஞ்சினம் கூறுகின்றனர். இவ்வஞ்சினங்களில் செங் கோற்சிறப்பு, குடியோம்பல், பெரியோரைப் போற்றல், ஈகை, கற்பு முதலிய அறக் கூறுகள் வலியுறுத்தப் பெறுகின்றன.

புலவர்கள் தம் வாழ்க்கைக் கூறுகளைப் புலப்படுத்தும் பகுதி களும் சில நற்பண்புகளைக் காட்டுகின்றன. மருதனிள நாகனார் தம் வாழ்வின் குறிக்கோள் புலப்பட,

''வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய் கூறுவல்" (புறம். 139)

எனப் புகன்றுள்ளார். கண்டீரக்கோ பெருநற்கிள்ளியைப் பாடிய பரணர் மான உணர்ச்சியுடன்

''பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றுஎம் சிறுசெந் நாவே" (புறம். 148)
என நவில்வர். பெருந்தலைச் சாத்தனார் தம் பெருமிதம் தோன்ற

''முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே" (புறம். 205)

என மொழிந்துள்ளார். பெருஞ்சாத்தன் வீட்டிற்கு வெளியே புறப்படுங்காலை மதுரை நக்கீரர் செல்கின்றார். இன்றியமை யாது ஏகும் நிலையிலிருந்த பெருஞ்சாத்தன், தன் வாழ்க்கைத் துணையை அழைத்து, 'இப்புலவரை என்னைப் போல் ஓம்புக' என்று சொல்லிச் சென்றான். இந்த அன்பு மொழியைக் கேட்ட புலவர், அன்று முதல் அவனை மறக்கவில்லை, பிறரை நினைக்க வில்லை என்கிறார்.

''பொன்போல் மடந்தையைக் காட்டி யிவனை
என்போற் போற்றென் றோனே; அதற்கொண்டு
அவன்மறவ லேனே; பிறருள்ள லேனே." (புறம். 395)

இவ்வடிகள் செய்ந்நன்றியறிதலுக்குக் காட்டாகத் திகழ்கின்றன.

கையறு நிலைப்பாடல்களிலும் அறச்செய்திகள் இடம் பெறு கின்றன. மாவண் பாரி மாய்ந்த பின் கலங்கிக் கையற்ற கபிலர்,

"மைம்மீன் புகையினும் தூமகேது தோன்றினும், தென் திசை நோக்கி வெள்ளி ஓடினும் பறம்புமலை புன்புலத்ததாக இருந்தும் மழைவளங் குன்றாது; வயலகம் செழித்து விளையும் ; புதற்கண் பூக்கள் மலரும்; ஈன்ற பசுக்கள் வயிறாரப் புல்மேயும்; ஊரில் சான்றோர் பலராக இருப்பர். இவற்றுக்கெல்லாம் காரணம் பாரியின் ஆட்சிச் செம்மையே! அத்தகு மேலோன் பொன்றினனே எனக் கூறி இரங்குவர் (புறம். 117). அரிசில்கிழாரும் அதிக மானின் கோல் செம்மையால் தான் 'ஆனிரைகள் எவ்வகை இடர்ப் பாடுமின்றி இனிது மேய்கின்றன; வழிப் போக்கர்களும் ஆறலை கள்வர்களால் ஏதமின்றித் தாம் வேண்டிய இடத்தில் தங்குகின்ற னர். களத்தில் நெற்பொலிகளும் காவலின்றிக் கிடக்கின்றன. எவ்வுயிர்க்கும் கொடிய விலங்குகளினாலும் அல்லல் இல்லை' என்று தம் கையறு நிலைப்பாடலில் (புறம். 230) இயம்புவர். இச்செய்தி களால் 'அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல்' (543) 'காவலன் காவான் எனின் ஆபயன் குன்றும்' (560) என்னும் குறட் கருத்துக்கள் தெளிவாகின்றன.

புலவர்களின் இயற்கைப் புனைவுகளிலும் அறக் கருத்துக்கள் இயைந்து வருகின்றன. நிலையாமையைக் காட்டி ஈகையை வற்புறுத்தக் கருதிய உறையூர் முதுகண்ணன் சாத்தனார் திங் களைத் துணைக் கொள்கிறார். திங்கள் மறைகிறது; பின்தோன்று கிறது; வளர்கிறது; பின் தேய்கிறது. இதுபோல் தான் உலக மக்கள் இறப்பும் பிறப்பும், வளமும் வறுமையும் என்று திங்களின் இயற்கைப்புனைவுகொண்டு உணர்த்துகிறார்.

> ''தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
> மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
> அறியா தோரையும் அறியக் காட்டி
> திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து.'' (புறம். 27)

பாலை நில மரத்தின் பகுதிகளைப் புனைந்தே பல செய்திகளைப் பாலைபாடிய பெருங்கடுங்கோ அறிவுறுத்துகிறார்.

> ''வறியவன் இளமைபோல் வாடிய சினையவாய்ச்
> சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழலின்றி
> யார்கண்ணும் இகந்துசெய்து இசைகெட்டான் இறுதிபோல்
> வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்

அலவுற்றுக் குடிகூவ ஆறின்றிப் பொருள் வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழல்
உலகுபோல் உலறிய உயர்மர வெஞ்சுரம்." (கலி. 10)

கதிரவன் மறையும் காட்சியைக் கொண்டே நல்லந்துவனார் ஓர் அரிய கருத்தைப் புலப்படுத்துவர். புகழ்பெற்ற மன்னவன் நல்லொழுக்கத்தின் நின்று நாட்டினை வறிஞன் ஓம்புமோர் செய் யெனக் காத்துப் பின் தான் செய்த நல்வினைப் பயனைத் துய்க்கத் துறக்கமாகிய வானுலகத்திற்குச் செல்வதுபோலக் கதிரவன் பகற் பொழுதெல்லாம் தன் கதிர்களால் ஒளியைப் பரப்பி மாலையில் மலையைச் சென்று சேர்கிறான்.

"வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்துய்ப்பத் துறக்கம்வேட்டு எழுந்தாற்போல்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர" (கலி. 118)

இவ்வாறு சில சங்கப் பாடல்கள் நமக்கு இயற்கைப் புனைவு வழியாக அறமுணர்த்துகின்றன.

புறநானூற்றில் 182—195 வரையுள்ள பாக்கள் முழுமை யும் அறச்செய்திகள் கொண்டவை. இவற்றை ஒருசேரக் கண்ட வர்களுக்குப் பிற்காலத்தே அறச் செய்திகளைத் தொகுத்துத் தனி நூல் இயற்றலாம் என்னும் எண்ணம் எழுந்திருக்கலாம். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனத் தொடங்கும் கணியன் பூங்குன்ற னாரின் பாடலும் (192), 'உண்டாலம்ம இவ்வுலகம்' (182) எனத் தொடங்கும் கடலுண் மாய்ந்த இளம்பெரு வழுதியின் பாடலும் உலகம் உள்ள அளவும் நின்று அறம் கூறும் பெற்றியன.

"பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும்மனந் திரியும்" (புறம். 183)

"மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறம். 186)

"எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறம். 187)

"மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே" (புறம். 188)

''ஈயென இரத்தல் இழிந்தன்று'' (புறம். 204)

''இன்னாதம்ம இவ்வுலகம் இனிய காண்கிதன் இயல்புணர்ந்
தோரே'' (புறம். 194)

''வினையே ஆடவர்க்கு உயிரே'' (குறுந். 135)

''பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்'' (கலி. 133)

''வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும்
தெய்வமும் யாவதும் தவமுடை யோர்க்கு'' (பதிற். 74)

இவ்வாறு அரிய அறச் செய்திகளைத் தன்னுட் கொண்டு சங்க இலக்கியம் அறக் கருவூலமாகத் திகழ்கின்றது. சங்க இலக்கியத்திற் காணப்பெறும் பல்வேறு அறக்கருத்துக்களைத் தொகுத்து ஒரு நூலாகத் தரின், அது விழுமிய அறநூலாக மிளிரும் என்பது ஒருதலை.

# 6. சங்க இலக்கியத்தில் வேந்தர்கள்

அ. மா. பரிமணம்

**சங்கத் தொகை நூல் :**

கிரேக்கமொழியில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் மிலீகர் என்பவரால் Anthology என்று கூறப்படும் தொகை நூல் தொகுக்கப்பட்டதென்றும் அதற்குப் பின்னர்ப் பலதொகை நூல்கள் ஆண்டுத் தோன்றினவென்றும், அவை இலக்கிய உலகில் சிறப்பு மிக்கனவென்றும் கூறப்படுகின்றன. Anthology என்னும் நூல் பூந்துணர் என்று பொருள்பட்டுப் பின்னர்ப் பாக்களின் தொகுப்பாக விளங்கும் இலக்கியப் பூந்துணரைக் குறித்தது. இவ் விலக்கியப் பூந்தணர்களின் சிறப்புணர்ந்து ஆங்கிலத்தில் பால் கிரேவ் (Pal Grave) போன்றாரால் 'பொற்கருவூலம்' (Golden Treasury) போன்ற இலக்கியப் பூந்துணர்கள் தோன்றலாயின. மிகப் பழங்காலத்திலேயே யாப்பு, பொருள் போன்ற வகைகளால் தொகுக்கப் பெற்ற தனிப்பாடல் தொகுதி களாய் - இலக்கியப்பூந்துணர்களாய் நூல்கள் அமைந்துள்ளமை தமிழ் இலக்கியத்தின் தனிச்சிறப்பாகும்.

பழந்தமிழ் மக்களின் பண்பாடு, வாழ்வியல், அரசியல் போன்றவற்றை உணர்த்தும் கருவியாக அமையும் சங்க இலக்கியம், இலக்கியச் சான்றுகளை நம்புவதில் தயக்கம் கொள்ளும் வரலாற் றறிஞர்களும் ஒப்புமாறு வரலாற்றுச் செய்திகளை உணர்த்தி நிற் கின்றது. அண்மைக் காலத் தொல்லியலாய்வு முடிவுகள் சங்க இலக்கியம் காட்டும் வரலாற்றுச் செய்திகளை உறுதி செய்வன வாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**பழந்தமிழக அரசு :**

இக்காலத்தில் உயர்ந்து விளங்கும் குடியாட்சியின் (Demo-cracy) சிறப்புக் கூறுகள் பலகொண்டதாகப் பழந்தமிழகத்தில்

விளங்கிய அரசின் நிலை காணப்படுகின்றது. பெண் கொலை புரிந்த நன்னன் என்பது போன்ற சில கரும்புள்ளிகள் காணப்பட்டாலும் 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'[1] என மதித்து மன்னனைப் போற்றிய மக்களையும்,

''அறனிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக''[2] என்றும்

என்னிழல் வாழ்நர் சென்னிழல் காணாது
கொடியன் எம்இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழிதூற்றும் கோலேன் ஆகுக''[3] என்றும்

வஞ்சினம் மொழியும் நெஞ்சுரம் சான்ற மன்னர்களையும்கொண்ட முடியாட்சியாக அன்றைய ஆட்சி விளங்கியது. முடி சூடிய பெரு வேந்தர்களையும், குறுநில மன்னர்களையும் புறநானூறு பதிற்றுப் பத்து போன்ற நூல்கள் நேர் நிலையானும் நற்றிணை குறுந் தொகை அகநானூறு போன்ற நூல்கள் சார்பு நிலையானும் உணர்த்துகின்றன.

**உணர்த்துமதுாறு :**

அகநானூறு குறுந்தொகை போன்ற அகத்தொகைப்பாடல் களினிடையே வீரர், வேந்தர், குறுநிலமன்னர் போன்றவர் பற்றிய குறிப்புக்கள் பெரும்பாலும் உவமையாக இடம் பெற்றுள்ளன. அகப்பாடல்களின் அடிக்குறிப்புக்கள் ( Colophon ) அகப்பொருள் விளக்கம் தருவனவாகவே அமைந்துள்ளன. புறநானூற்றுப் பாடல்களின் கீழே அமைந்துள்ள அடிக்குறிப்புக்கள் அப்பாடலுக் குரிய வேந்தர், குறுநில மன்னர், வீரர், வள்ளல் போன்றாரின் பெயரையும் பாடலொடு தொடர்பு சுட்டும் நிகழ்ச்சிகளையும் உணர்த்துவனவாக உள்ளன. அகப்பாடலின் கருத்துணர அதன் அடிக்குறிப்பு இன்றியமையாததாக விளங்குவதுபோலப் புறப் பாடலில் அரசர் நிகழ்ச்சிகள் போன்றவற்றை உணர அடிக்குறிப்பு இன்றியமையாததாக அமைந்துள்ளது. இவ்வடிக்குறிப்புக்கள் இல் லாது போயின் பல பாடல்களின் மன்னர் பெயர்களும் நிகழ்ச்சி களும் அறிந்து கொள்ள முடியாமலே போயிருத்தல் கூடும். அடிக் குறிப்பு பாடலியற்றிய புலவருடையதாகவன்றி, நூல் தொகுத்

தோர் போன்ற மற்றவர்களால் எழுதப்பட்டதாகவிருப்பினும் அதனைப் புறக்கணிக்க இயலாது. சில பாடல்கள் பாட்டுடைத் தலைவனுடைய இயற்பெயரை 'இயல்தேர்ச் சென்னி' என்றும் 'எங்கோ வாழிய குடுமி' என்றும் சுருக்கமாகச் சுட்டுகின்றன. 'கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி' என்றும் 'கேட்பல் எந்தை சேட் சென்னி நலங்கிள்ளி' என்றும் வேந்தனுடைய பெயர் முழுதுமாகச் சுட்டுமிடங்கள் அரிதாகவே உள்ளன.[4] குறுநில மன்னர், வீரர் போன்றார் பெயர்கள் பெரும்பாலும் அடையின்றிக் காணப்படுவதால், அவை அகப்பாடல்களின் இடையே இடம்பெறுங்கால் முழுப்பெயராகவே அமைந்துவிடக் காணலாம்.

ஒவ்வொரு சேரவேந்தர் மீதும் பத்துப்பாடல்களாகப் பத்து வேந்தர்களைப் பத்துப் புலவர்கள் போற்றும் வகையில் அமைந்த பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும், பாட்டும் உரையுமாக அமைந்த பதிகம் என்னும் சிறப்பான பகுதி அமைந்துள்ளது. அஃது அரசன் பெயர், அரசன் பெற்றோர் பெயர், பெற்ற வெற்றிகள், பாடிய புலவன், பாடிப் பெற்ற பரிசில், வேந்தன் ஆட்சிக்காலம், பத்துப்பாடல்களின் பெயர்கள் ஆகிய விவரங்களைக் கொண்டுள்ளது. பாடல்கள் பாடப்பெற்ற காலத்திற்குப் பிற்பட்ட காலமே பதிகத்தின் காலம் என்பது ஆய்வாளர் முடிவு. எனினும் அப்பதிகங்கள் இல்லாது போயின், அந்நூல் சேரர் வரலாறுணர்த்தும் தனிச் சிறப்புடைய சேர இலக்கியம் என்னும் சிறப்பிழந்து, சில அரசர்களைப் பாடாண்டிணையிலமைத்துப் பத்துப் பத்துப் பாடல்களால் போற்றும் பாடற்றொகுதியாகவே கருதப்படும். பதிகத்தின் சிறப்பால், தொடர்ச்சியாக ஆண்ட சில சேர வேந்தர்களின் வரலாறுணர்த்தும் சிறந்த வரலாற்றிலக்கியமாகப் பதிற்றுப்பத்து திகழ்கின்றது. அப்பதிகங்கள் இடைக்காலச் சோழப் பேரரசில் மாமன்னராகத் திகழ்ந்த முதலாம் இராசராசசோழன் தன் கல்வெட்டுக்களில் தோற்றுவித்த மெய்க்கீர்த்தி என்னும் பகுதிக்கு அடிப்படையாகத் திகழ்கின்றன.

வரலாற்றுணர்வு சான்ற பரணர், மாமூலனார் போன்ற புலவர்கள் தம் அகப்பாடல்களில் அரிய வரலாற்றுக் குறிப்புக்களைச் சுவைமிக்க இலக்கியமாக அமைத்துக் காட்டியுள்ளனர். அவ்வகப்பாடல்கள் எந்த அரசர் மேலும் பாடப்பட்டன அன்மை

யால், அவற்றில் இடம் பெறும் வரலாற்றுச் செய்திகளை ஆராய்ச்சி அறிஞர்கள் முதன்மைச் சான்றுகளாகப் போற்றிக் கொள்கின்றனர். அரசர்கள் மீது பாடப்பெறும் புறச் செய்யுட்களில் அம்மன்னன் பற்றிய விருப்பு வெறுப்புக்கட்கு இடம் அமைந்து விடுவதற்கும் வாய்ப்புண்டு. 'வாழ்தல் வேண்டிப் பொய் கூறாமை' பழந்தமிழ்ப் புலவர் இயல்பாயினும், விருப்பு வெறுப்பிற்கு வாய்ப்புச் சிறிதும் இடமில்லாத அகப்பாடல்களில் இடம் பெறும் புறச் செய்திகளை முதன்மைச் சான்றுகளாகக் கொள்வது ஏற்புடைத்தாகும். நன்னன் என்னும் மன்னன் பெண் கொலை புரிந்த செய்தி,

> ''மண்ணிய சென்ற ஒண்ணுத லரிவை
> புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
> ஒன்பதிற் றொன்பது களிற்றோ டவள்நிறை
> பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
> பெண்கொலை புரிந்த நன்னன் போல
> வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை
> ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப்
> பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே''[5]

எனப் பரணர் கவின்மிக்க சொல்லோவியமாகப் படைத்துள்ளார். பாடாண்டிணையில் நன்னனைப் பாடுவதாக இருந்தால் இச் செய்தியை எவ்வாறமைத்தல் கூடும்? இளவிச்சிக் கோவைப் புல்லாது விடுத்தமைக்குப் பெருந்தலைச்சாத்தனால் புறப்பாட்டில் 'பொலந்தேர் நன்னன் மருகன் அன்றியும் நீயும் முயங்கற்கு ஒத்தனை மன்னே'[6] எனக் கூறும் பகுதிக்குப் பரணரின் நன்னன் பற்றிய இவ்வரலாற்றுக் குறிப்பு ஓராற்றான் விளக்கம் தருவதாக அமைகின்றது.

**மூவேந்தர் :**

பல குறுநில மன்னர்கள் ஆங்காங்கே ஆண்டிருந்த நிலை காணப்பட்டாலும் சங்க காலத்தில் தமிழகம் சேர, சோழ பாண்டியர் என்னும் தமிழ் அரசமரபினரால் ஆளப்பட்டமை தெளிவாகத் தெரிகின்றது. குறுநில மன்னருட் பெரும்பாலோர் இம்மூவேந்தர் ஆட்சிக்கு உட்பட்டவர்களாகவே இருந்தனர். மூவேந்தரும் தம்முள் மாறுபட்டுப் பொருது நின்றமை பற்றிய குறிப்புக்கள்

மிகுதியாக இருந்தாலும் ஒரோவழி அவர்கள் நட்புற்றும், மண வுறவு கொண்டும் விளங்கிய தன்மையைக் காண முடிகின்றது. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண் டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெரு வழுதியும் ஒருங் கிருந்த போது, அவர்களை நோக்கி 'இன்றே போல்க நும் புணர்ச்சி'[7] என்று காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனா ரும் சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகியோர் ஒருங்கிருந்தபோது ஔவையாரும்[8] பாடியன கொண்டு நட்புறவையும், 'குடவர் கோமான் நெடுஞ்சேரலா தற்குச் சோழன் மணக்கிள்ளி ஈன்ற மகன்' எனப்பதிற்றுப் பத்தின் ஐந்தாம் பதிகம் கூறுவது கொண்டு மணவுறவையும் அறிதல் கூடும். பேரரசர்களாக விளங்கியமையால் இவர்கள் முடியுடை வேந்தரெனப்பட்டனர். மூவர் என்ற தொகைப் பெயரால் இம் மூன்று தமிழ் வேந்தர்களையும் தொல்காப்பியர் சுட்டி அவர்தம் நாட்டினை 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு'[9] எனக் குறிப்பிட்டுள்ளார். மேலுமவர் அம்மூவேந்தர்தம் அடையாளப் பூக்களைச் சுட்டி அவற்றாலும் 'போந்தை வேம்பே ஆரெனவரு உம் மாபெருந்தானையர் மலைந்த பூவும்'[10] என்று அவர்களை உணரச் செய்துள்ளார்.

> ''பீடுகெழு திருவின் பெரும்பெயர் நோன்றாள்
> முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
> அரசவை இருந்த தோற்றம் போல''[11]

எனப் பொருநராற்றுப் படையும்,

> ''மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்
> முரசு முழங்கு தானை மூவருள்ளும்''[12]

எனப் பெரும்பாணாற்றுப்படையும் இவ்வேந்தர்களை மூவர் என் னும் தொகைப் பெயரால் சுட்டுகின்றன.

சேர சோழ பாண்டிய மன்னர்களைப் பற்றிய குறிப்பு அசோக மன்னனுடைய கல்வெட்டிற் காணப்படுகின்றது. கொல்லி மலை அறப்பளீசுரர் கோயிற் கல்வெட்டு இவர்களை ''இது சேர சோழ பாண்டியர்கள் இம்முக்கோக்கள்'' ரனஷ, என்று

குறிப்பிட்டுச் சாசனக் காப்புச் செய்கின்றது.[13] இவ்வாறு பொதுப் பெயரானன்றிச் சில சங்க கால வேந்தர் பெயர் சுட்டி அமைந்துள்ள கல்வெட்டுக்களும் கிடைத்துள்ளன. அரிட்டா பட்டியில் கிடைத்த மாங்குளம் கல்வெட்டு வழுதி என்ற குடிப் பெயரையும் நெடுஞ்செழியன் என்ற இயற்பெயரையும் சுட்டி அவன் அமைத்த சமணப் பாழியினைக் குறிப்பிடுகின்றது.[14] புகளூர்க் கல்வெட்டு கோ ஆதன் செல் இரும்பொறை மகன் பெருங் கடுங்கோன் மகன் இளங்கடுங்கோ இளங்கோ ஆவதற்கு அமைத்த கற்படுக்கை பற்றிக் கூறுகின்றது.[15] இது பதிற்றுப் பத்தின் 7, 8, 9-ஆம் பத்துக்களின் தலைவர்களான செல்வக் கடுங்கோ வாழியாதன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ் சேரல் இரும்பொறை ஆகியோரைக் குறிப்பதாக அறிஞர் கருது கின்றனர். திருவெள்ளறைக் கல்வெட்டு பட்டினப்பாலை பாடிய உருத்திரங் கண்ணனார் நினைவாகத் திருமாவளவன் உறை யூரில் அமைத்த கல் மண்டபத்தைப் பாண்டிய மன்னன் அழிக் காது விடுத்துப் போற்றிய செய்தியைக் குறிப்பிடுகின்றது. நெடுஞ் செழியன் சமணப்பாழி அமைத்தமை, பெருஞ்சேரல் இரும் பொறை தன் மகன் இளங்கோவாதற்குச் சமணமுனிவர்க்காம் கற்படுக்கை அமைத்தமை போன்ற செய்திகளை நோக்குங்கால் மேலும் பல சங்ககாலக் கல்வெட்டுக்கள் கிடைக்குமாயின் சங்க இலக்கியத் தாலறியலாகும் இவ்வேந்தர் பற்றிய கருத்தோ வியத்திற்கு வேறுபட்ட ஓவியத்தை உணர்தலும் கூடும் என்று எண்ணத் தோன்றுகின்றது.

**சங்க வேந்தர்கள் :**

கிடைத்துள்ள சங்கப் பாடல்களையும் அவற்றின் குறிப்புக் களையும் கொண்டு பார்க்குமிடத்து ஏறத்தாழ 61 வேந்தர்கள் காணப்படுகின்றனர். குறுநில மன்னர் நீங்கலாக மூவேந்தர் எண்ணிக்கையைத் துல்லியமாக அறிவிக்கும் முயற்சி இதுகாறும் மேற்கொள்ளப்படவில்லை. மாந்தரஞ் சேரலிரும்பொறை, யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை என்னும் பெயர் களில் அமைந்துள்ள வேறுபாடு கொண்டு இப்பெயர்கள் இரு வரைச் சுட்டுகின்றனவா ஒருவரைச் சுட்டுகின்றனவா என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. இவ்வாறே நெடுஞ்செழியன், ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் என்னும் பெயர்களிலும் இவை

போன்ற பிற பெயர்களிலும் கருத்து வேறுபாடுள்ளது. இதனால் இது வரை அறிஞர்கள் அமைத்துள்ள சங்க வேந்தர் பெயர்ப் பட்டியல்களில் எண்ணிக்கை வேறுபாடு அமைந்துள்ளது. இது பற்றித் தெளிவான ஆய்வு முடிவு கிடைக்கும் வரை அரசர்களை 'ஏறத்தாழ' என்று குறிப்பிடும் எண்ணிக்கையில்தான் சுட்ட வேண்டியுள்ளது.

**மூவேந்தர்கள் :**

சேர அரசர்களில் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன் உள்ளிட்ட 28 பேர்களும், பாண்டிய வேந்தர்களில் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் உள்ளிட்ட 16 பேர்களும் சோழ மன்னர்களில் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளி வளவன் உள்ளிட்ட 17 பேர்களும் ஆக 61 வேந்தர்கள் காணப்படுகின்றனர்.

**சேரர் :**

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை
,, சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன்
,, குடக்கோச் சேரல் இரும்பொறை
,, கணைக்காலிரும்பொறை
,, மாந்தரஞ்சேரலிரும்பொறை
,, யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை
,, தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை
,, பெருஞ் சேரலாதன்
,, குடக்கோ நெடுஞ்சேரலாதன்
,, பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்
,, கடுங்கோ வாழியாதன்
,, செல்வக் கடுங்கோவாழியாதன்
,, கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரலிரும்பொறை
சேரமான் பாலைபாடிய பெருங் கடுங்கோ
,, கோக்கோதை மார்பன்

,, குட்டுவன் கோதை
,, மாரி வெண்கோ
,, கடலோட்டிய வெல்கெழுகுட்டுவன்
,, சேரமான் வஞ்சன்
,, உதியஞ்சேரலாதன்
,, இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்
,, பல் யானைச் செல்கெழு குட்டுவன்
,, களங்காய்க் கண்ணி நார் முடிச் சேரல்
,, கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்
,, அந்துவஞ்சேரல்
,, ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்
,, பெருஞ்சேரலிரும்பொறை
,, இளஞ்சேரலிரும்பொறை

**பாண்டியர் :**

பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதி
,, இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன்
,, சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன்
,, வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி
,, கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி
,, பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி
,, கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி
,, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்
,, நெடுஞ்செழியன்
,, நம்பி நெடுஞ்செழியன்
,, அறிவுடை நம்பி
,, ஒல்லையூர்தந்த பூதப் பாண்டியன்
,, பூதப் பாண்டியன்
,, கீரன் சாத்தன்
,, கடலுண் மாய்ந்த இளம் பெருவழுதி
,, தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்

**சோழர் :**

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்
,, குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன்
,, குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்
,, காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி
,, இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி
,, உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி
,, நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி
,, செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி
,, முடித்தலைப் பெருநற்கிள்ளி
,, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி
,, வேல் பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி
,, போர்வைக் கோப்பெருநற்கிள்ளி
,, நலங்கிள்ளி
,, நெடுங்கிள்ளி
,, மாவளத்தான்
,, கோப்பெருஞ் சோழன்
,, கரிகாற் பெருவளத்தான்

**அடைமொழியால் அறிவன :**

தந்தை பெயரை மகற்கிடும் மரபு நாகரிக மிக்க சமுதாயத்தில் பண்டு தொட்டே காணப்படுகின்றது. 'அகன் பெருஞ்சிறப்பிற்றந்தை பெயரன்' என்பது கொண்டு இம்மரபு பழந்தமிழகத்தில் நிலவியதை அறியலாம். காலவரையறை தெளிவாக அமைந்த நிலையிலும், ஒரே பெயருடைய அரசர்களைக் குறிக்கப் பதினான்காம் லூயி, எட்டாம் என்றி என்று இயற்பெயரோடு எண் சேர்த்து வழங்கும் மரபினை உலக வரலாற்றில் காணக்கூடும். கால வரையறை தெரியாத நிலையில் ஒரு பெயருடைய வெவ்வேறு மன்னர்களை வேறுபடுத்திக் காட்டுவதில், பெயர் முன்னடைகள் பேருதவி புரிகின்றன. அம்மன்னர்களின் வீரம் முதலிய தனிச் சிறப்பினை உணர்த்தவும் இவ்வடைமொழிகள் பயன்படுகின்றன. சங்க வேந்தர் பெயரில் அமைந்துள்ள அடைமொழிகள் பலவற்றால் அறியலாகும் செய்திகளை, அவர்க்குரிய பாடல்களுள்ளும் காண முடிவதில்லை. அதனால் இவ்வடைமொழிகள் இன்றியமையாச் சிறப்பினவாகின்றன.

**துஞ்சிய :**

இறந்த எனப் பொருள்படும் துஞ்சிய என்ற சொல்லை அடைமொழியிற் கொண்ட வேந்தர்கள் மூன்று மரபினருள்ளும் காணப்படுகின்றனர். இச்சொற்கு முன்னர் அவ்வேந்தர் இறந்த இடத்தைச் சுட்டும் பெயர் சேர்ந்து அடை நிறைவுறுகின்றது. அவ் விடங்கள் சிக்கற்பள்ளி, இலவந்திகைப்பள்ளி, குராப்பள்ளி எனப் பள்ளியாகவும் கோட்டம்பலம் வெள்ளியம்பலம் என அம்பல மாகவும் அமைகின்றன. கூடகாரம், சித்திரமாடம் முதலியன அரசன் உறையும் அரண்மனைச் சிறப்பிடங்களாகத் தெரி கின்றன. து ஞ் சி ய என்பதனைக் காணுங்கால் ஆண்டுத் துஞ்சிய வேந்தர்தம் இறப்பு முதுமை அல்லது நோய் காரணமாக அமைந்த ஒன்றாகும் எனத் தெரிகின்றது. இறந்த என்ற பொருளைத் தரும் மற்றொரு சொல்லான மாய்ந்த என்பதனை அடைமொழியிற் பெற்றுக் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி என ஒரு வேந்தன் காணப்படுகின்றான். மாய்தல் என்ற சொல்லாட்சி கொண்டு அவனுடைய கடற் சாவு, கடற் போரின்போதோ அல்லது அது குறித்த செலவின்போதோ நேர்ந்த விபத்துச் (Accident) சாவாகத் தெரிகின்றது. இல வந்திகைப் பள்ளித் துஞ்சிய என்னும் தொடர் ஒரு சோழனுக்கும் பாண்டியனுக்கும் அடையாக வந்துள்ளது. இலவந்திகை என்பது நீராவி சூழ்ந்த வசந்த சோலையாகும். தங்கள் தங்கள் நாட்ட கத்திலடங்கிய இலவந்திகை இடத்தில் அவ்வேந்தர்கள் மரித் தோராவர் என்பது தெரிகிறது.

**எறிந்த :**

அழித்த என்ற பொருள்படும் எறிந்த எனும் சொல்லை அடை மொழியிற்பெற்ற வேந்தர் உள்ளனர். தகடூர், பாமுளூர், செருப்பாழி எனும் பெயர்கள் இச்சொற்குமுன்னே அமைந்திருப் பது கொண்டு இம்மன்னர்கள் போரிற் பகைவரை வென்று அவர்தம் ஊர்களை அழித்த சிறப்புடையவர்கள் என்று கருத முடிகின்றது.

**கடந்த :**

கடந்த என்ற சொல்லிற்கு 'வஞ்சியாது எதிர் நின்று அழித்து' எனப் பொருள் கூறுவர் புறநானூற்றுரையாளர்.[18] ஆரியப் படை கடந்த, கானப் பேரெயில் கடந்த எனவரும் அடைச் சொற்கள் முறையே ஆரியப்படையினரையும், கானப்பேர்க்

கோட்டையோரையும் வஞ்சியாது எதிர்த்துப் போரிட்டு வென்ற மன்னர்களைச் சுட்டுகின்றன.

**ஓட்டிய :**

பின்ஓடச் செய்த என்னும் பொருள்படும் இச் சொல்லைக் கொண்ட அரசர்கள் கடற் போரில் கடல் பிற்படுமாறு படைகொண்டு முன்னேறி வென்ற வெற்றியினை இஃதுணர்த்துகின்றது. இவ்வாறே, 'கைப்பற்றிய' என்னும் பொருளில் 'தந்த' என்ற சொல்லும், வென்ற ஊரில் முடிசூட்டிக் கொண்டான் என்ற கருத்தில் 'ஏறிய' என்ற சொல்லும் அடையில் இடம் பெற்று முறையே ஒல்லையூர் தந்த, கருவூர் ஏறிய எனும் பெயர்கள் அமைகின்றன. இவற்றுள் துஞ்சிய தவிர எஞ்சிய அனைத்தும் அரசனுடைய வீரவென்றி சுட்டுவனவாக உள்ளன. வேந்தர்களின் இத்தகு பெயரடைகளின் பொருளுணர்ச்சிக்கு உதவியாகப் பரிமேலழகர் உரையிற்காணும் ஒரு குறிப்பு நோக்கத்தக்கது. அக்குறிப்பு ''.....கோச்சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்ற வழி அரசனென்பதோர் சாதியும், சேரமான் என்பதொரு குடியும், வேழநோக்குடையான் என்பதோர் வடிவும் சேயென்பதோரியற் பெயரும் மாந்தரஞ்சேரலிரும்பொறை என்பதோர் சிறப்புப் பெயரும்......'' என்பதாகும்.[17] இதனால் மூவேந்தர்தம் நெடிய பெயர்களில் கோதை, ஆதன், உதயன் இரும்பொறை போல்வன சேரர்க்கும், மாறன், செழியன், வழுதி, நம்பி போல்வன பாண்டியர்க்கும், வளவன், சேட் சென்னி, கிள்ளி போல்வன சோழர்க்கும் பொதுவாக அமையும் இயற் பெயர்களாகும் எனக் கொள்ளலாம். இப்பெயர்களிற் பல சிலம்பு, முத்தொள்ளாயிரம் போன்ற பின்னர்த் தோன்றிய நூல்களில் குடிப்பெயராக அமைந்துள்ளன.

**சென்னி :**

சென்னி என்னும் சொல் சோழர்க்குரிய பெயராக அமைய அப்பெயரில் உருவப் பஃறேரிளஞ்சேட்சென்னி, நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி, செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி என மூன்று சோழர் உள்ளனர். மேலும் சேரமான் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி என்ற ஓரரசன் பெயரும் காணப்படுகின்றது.[18] இதனைப் பிற பெயர்போலப் பொருள்

கொண்டால், இப்பெயர் ஒரு சேர வேந்தனைக் குறிப்பதாகிச் சென்னி என்னும் சோழப் பெயரோடு குழப்பமுறும். அதனால் சேரவேந்தனுடைய பாமுளூரை அழித்து வென்ற சேட் சென்னி என்னும் அரசன் எனக் கொள்ள வேண்டும். சேரமான் பாமுளூர் என்றமையால், பிறர் நாட்டிலும், பாமுளூர்ப் பெயரில் ஊர் உள்ளமை அறியலாம்.

**அரசப்புலவர் :**

காவற்சாகாடுகைக்கும் பணிகொண்ட முடியுடை வேந்தர்களுள் சிலர் அரிய பாடல்கள் பாடவல்ல பாவலர்களாய்ச் சங்கப் புலவர்களோடு ஒருங்கெண்ணப்படும் தகுதி பெற்று விளங்கியுள்ளனர். சேரரில் கணைக்காலிரும்பொறை, கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை ஆகியோரும், பாண்டியருள் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி, பாண்டியன் அறிவுடைநம்பி, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆகியோரும் சோழரில் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், நல்லுருத்திரன், நலங்கிள்ளி ஆகியோரும் பாடிய பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. புலவர் பாடும் புகழுடைய மன்னர்கள் புலவர்ப்பாடும் புகழ்மிக்கோராகவும் திகழ்ந்துள்ளனர்.

**ஆட்சி உரிமை :**

சோழ பாண்டிய மரபினரில் தந்தைக்குப் பின் மகனும் (Primo geniture) சில சமயம் அண்ணனுக்குப் பின் தம்பியும் ஆட்சி மேற்கொண்ட செய்திகள் சங்க நூல்களில் உள்ளன. கோப்பெருஞ்சோழன் தன் மக்கள்மேல் படையெடுத்துச் சென்ற போது புல்லாற்றூர் எயிற்றியனார் கூறிய அறிவுரையில்

> ''பரந்துபடு நல்லிசை எய்தி மற்றுநீ
> உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்
> ஒழித்த தாயம் அவர்க்குரித்தன்றே''[19]

என வருவது கொண்டு அரசுரிமை தந்தைக்குப் பின் மகனுக்கு இறங்குமாறு உணரப்படுகின்றது. வெளியமான் துஞ்சியபின் அவன் தம்பி இளவெளிமான் ஆட்சி மேற்கொண்டமையால் அண்ணனுக்குப் பின் தம்பி ஆட்சி ஏற்கும் நிலையும் தெரிகின்றது.

பதிற்றுப்பத்தின் பதிகங்கள் சேரமரபினரில், தொடர்ந்து சில அரசர்கள் ஆண்டமையினைக் குறிப்பிடுவதனால் அரசுரிமை இறங்கும் முறையினை உணர்வதற்கு அவை நல்வாய்ப்பாக உள்ளன. ஆனால் அப்பதிகங்களில் அமைந்துள்ள வாசகங்கள் சேரநாடு பிற்காலத்தில் கேரளமாக மாறிய நிலையில் ஆண்டு நிலவிய மருமக்கள் தாய முறை அமைப்பினைக் கண்டு, சங்க காலத்தும் ஆண்டு அம்முறையே இருந்தது என்று எண்ணிச் சில அறிஞர்கள் விளக்கம் கூறும் வகையில் அமைந்துள்ளன. சேரருடைய தாயமுறை மருமக்கள் தாயமே என்று வலியுறுத்தி எழுதியுள்ள டாக்டர் நாவலர் சோமசுந்தரபாரதியாரின் நுண்ணிய வாதங்கள் அவர்தம் புலமை ஆழத்தையும் நுணுக்கத்தையும் எடுத்துக்காட்டுவனவாகவே அமைந்துள்ளன. சேரர் தாய முறை பற்றிய கருத்துப்போர் நிகழ்ந்தகாலைப் புகளூர்க் கல்வெட்டின் பொருள் விளக்கம் தெளிவுறாதிருந்தமையின் தாயக் கருத்திற்குத் தொல்லியற்சான்று காட்ட இயலாது போயிற்று. 'கோ ஆதன் செல்இரும்பொறை மகன் பெருங்கடுங்கோன் மகன் இளங்கடுங்கோ இளங்கோ ஆகஅறுத்த கால் என்னும் கல்வெட்டுப் பதிற்றுப்பத்தின் 7, 8, 9-ஆம் பத்துக்களின் தலைவர்களைக் குறிப்பதாக உள்ளது எனும் விளக்கம் வலிவுற்ற நிலையில் சங்க காலத்தில் சேரமரபிலும் மக்கள் தாயமே நிலைபெற்றது என்னும் கருத்து உறுதிப்படுகின்றது.

**வேந்தர் பண்புகள் :**

மூவேந்தர் பாடல்களிற் பல அவர்தம் வீர ஈரப் பண்புகளின் அடிப்படையிலான செயல்களை விளக்குவனவாக உள்ளன. பாணர், பரிசிலர் போன்றார்க்கு வரையாது வழங்கும் அரசர்களின் ஈகைப் பண்பு பொதுவாகக் கூறப்பட்டிருப்பினும், பதிற்றுப் பத்தின் பதிகங்கள் கேட்போர் வியக்குமளவு அவ்வேந்தர் தம் கொடையினை விளக்குகின்றன. சில கொடைச் செய்திகள் நம்புதற்கரியன போலக் காணப்படினும் அரசர்களின் வரையா ஈகைப் பண்பினை உணர்த்துவதில் தளராது சிறந்து விளங்குகின்றன.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வடவாரிய மன்னரை அடிப்படுத்தினான் எனவும், யவனர்களைப் போரிற் கைக்கொண்டு அவர்களின் தலையில் நெய்பெய்து கைகளைப் பின்

னால் பிணித்துச் சிறைப்படுத்தினான் எனவும் கருத்துரைக்கின்றது பதிற்றுப்பத்தின் இரண்டாம் பதிகம். அப்பகுதி வருமாறு:

''பேரிசை மரபின் ஆரியர் வணக்கி
நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு''[20]

படைவலிமிக்கோர், வடவாரியரைப் போலத் தமிழகத்திற்கு வெளியிலிருந்தும், யவனரைப்போல வணிகராய் உள்ளிருந்தும் தமிழக நலத்திற்கு ஊறுவிளைக்க முயல்வராயின் அவர்களைச் சினந்து பொருது அகப்படுத்தும் பண்பினன் நெடுஞ்சேரலாதன் என்பது புலனாகின்றது. அவன் கடம்பெறிந்து பெற்ற கடல் வென்றி அவனுடைய பெருவீரத்திற்குச் சான்றாகின்றது.

செங்குட்டுவனுடைய முன்னோருள் ஒருவன் யவனர் நாட்டைக் கைப்பற்றி ஆண்டான் என்ற கருத்தில் 'வன்சொல் யவனர் வளநாடு ஆண்டு' என்றும், 'வன்சொல் யவனர் வளநாடு வண் பெருங்கல் தென்குமரி ஆண்ட' என்றும் இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.[21] சேரமன்னன் உரோமர்-கிரேக்கர் ஆகிய யவனர்கள் நாட்டிற்கே சென்று அவர்களைப் போரில் வென்று, அந்த நாட்டை ஆண்டான், என்னும் இக்கருத்து பிற சான்றுகளால்தான் உறுதிப்பட வேண்டும். பதிற்றுப்பத்தின் பதிக வாசகப் போக்கினைக் காணுங்கால், வணிகத்தின் பொருட்டுத் தமிழகம் போந்து தற்காப்பிற்காகப் படை வீரர்களோடு குடியிருப்புக் (Colony) கொண்ட யவனர் வாய்காவாது நயனில் வன்சொல்லர்களான நிலையில் அவர்களைப் போரில் பற்றிக் கைகளைப் பின்னால் கட்டித் தலையில் எண்ணெய் ஊற்றிச் சிறைப்படுத்தி விடுதலைக்காகப் பெரும் பொருள் கொண்டு அந்த யவனக் குடியிருப்பின் ஆட்சியைத் தன் கீழ்க்கொண்டான் என்று கொள்ளலாமெனத் தெரிகின்றது.

''வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியன்களம் பல கொல்''[22] எனப் புலவர் வியக்குமாறு, சிலவேந்தர்கள் வைதிக நெறியிலும் சடங்கிலும் நாட்டம் மிக்கவர்களாக விளங்கிய தன்மையைப் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்னும் பெயர்களில் உள்ள அடைமொழி கொண்டு உணரலாம்.

**வேந்தர் காலம் :**

தமிழக வரலாற்றிலும் தமிழிலக்கிய வரலாற்றிலும் காலக் கணிப்பு இன்னும் முற்றுப் பெறாத ஒன்றாகவே உள்ளது. சங்க இலக்கிய வேந்தர் அனைவரும் கடைச்சங்க காலத்தைச் சேர்ந்தவ ராவர். அவர்களுடைய காலத்தை கே. என். சிவராச பிள்ளை, கே. நீலகண்ட சாத்திரி, மு. இராகவையங்கார், எஸ். வையாபுரிப் பிள்ளை போன்றோர் ஆய்ந்து ஆங்கிலத்திலும் தமிழிலும் நூல்கள் வெளியிட்டுள்ளனர். திரு. சிவராச பிள்ளையவர்கள் சங்க மன்னர்களின் காலத்தைக் கணிக்க முற்பட்டு கி.மு. 50-ஆம் ஆண்டிலிருந்து கி. பி. 200-ஆம் ஆண்டு வரை உள்ள காலத் தைப் பத்துத் தலைமுறையாகப் பகுத்து அவற்றில் மூவேந்தர் களையும் பொருத்திக் காட்டியுள்ளதோடு அக்காலப் பிற இந்திய இலங்கை மன்னர்களோடு இணைத்தும் காட்டியுள்ளார்.

**The chronology of the early Tamils** என்னும் அவ ருடைய நூல் முயற்சி போற்றுதற்குரிய சிறந்த நன்முயற்சி எனினும், முடிவுகள் பற்றி ஐயம் தோன்றவே செய்கின்றது. அதனால் சங்க இலக்கிய அரசர்கள் கிறித்துவுக்கு முன்னும் பின் னும் இரு நூற்றாண்டுகட்கு இடையிலான காலத்தவராவர் என்பதே பெரும்பாலோர் ஏற்கும் கருத்தாக உள்ளது. சங்க இலக்கியச் செய்திகளில் இலக்கியக் கூறான கற்பனை போன்ற வற்றைக் கழித்துச் செவ்விய வரலாற்றுச் செய்திகளைத் தொல் லியலாய்வு, பிறநாட்டார் குறிப்புப் போன்றவற்றின் துணையால் விளக்கப்படுத்தல் வேண்டும். சங்க வேந்தர் ஒவ்வொருவர் காலத்தையும் அறுதியிட்டுக் கூறுவது இயலாது போயினும் பொது வாக அவர்களின் கால எல்லையினை, இதுகாறும் வெளிவந்துள்ள ஆராய்ச்சி ஒளியால் முடிவு செய்து அறிவிப்பது தமிழ்ப் பல்கலைக் கழகம் விரைவாக மேற்கொள்ளத்தக்க பணிகளில் ஒன்றாகும்.

**அடிக்குறிப்புக்கள்**

1. புறநானூறு - 186 - 2
2. புறநானூறு - 71 - 7. 9
3. புறநானூறு - 72 - 9-12
4. புறநானூறு - 61 - 13; 9-8; 3 - 13; 27 - 10

5. குறுந்தொகை – 292
6. புறநானூறு - 151 - 8, 9
7. புறநானூறு – 58 – 28
8. புறநானூறு – 367
9. தொல்காப்பியம் – செய்யுளியல் 75
10. தொல்காப்பியம் – புறத்திணை 5
11. பொருநராற்றுப்படை – 53 – 55
12. பெரும்பாணாற்றுப்படை – 32, 33
13. ARE 493 of 1930
14. M. E. R 1906
15 M. E. R. 1927 – 28
16. புறநானூறு 8 – 5, 40 - 2 உரை
17. திருக்குறள் 355 - பரிமேலழகர் உரை
18. புறநானூறு – 203
19. புறநானூறு – 213
20. பதிற்றுப்பத்து இரண்டாம்பதிகம்
21. சிலப்பதிகாரம் – 28 – 141; 28 - ஊசல் வரி
22. புறநானூறு - 15 – 20, 21

## கலந்துரையாடல்

**ச. வே. சுப்பிரமணியன்:**

மனிதனின் தனிப்பட்ட நிலைக்குத்தக அறம் வேறுபடலாமா? எதனைச் சிறந்த அறமாகக் கருதலாம் ?

தமர்தற் றப்பின் அதுநோன் றல்லும்
பிறர்கையறவு தான்நா ணுதலும்
வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்
நும்மோர்க்குத் தகுவன அல்ல''

என்று கூறும் குறமகள் இளவெயினி பாடலடிகளில் வரும் செய்திகளில் எல்லா அறக்கூறுகளையும் அடக்கலாம்.

**இரா. சாரங்கபாணி :**

அடிப்படையான அறங்கள் என்றும் மாறுவதில்லை. அறத்தைப் பின்பற்றுவதில் வருகின்ற சமூகப் பழக்கவழக்கங்களில், சில மாறுதல்கள் ஏற்படலாம். காட்டாக, விருந்தோம்புதல் என்பது எல்லோரும் ஏற்றுக்கொள்ளத்தக்க நிலைத்த அறம். இது

மாறாது. ஆனால் விருந்தோம்புகின்ற முறையில் நாட்டுக்கு நாடு, சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபாடு காணப்படும். மணிமேகலையில் சாதுவனுக்கு நாகர் தலைவன் வெங்கள்ளும் ஊனும் வேண்டுவன கொடுத்தும் நம்பிக்கிளையளோர் நங்கையைக் கொடுத்தும் விருந்தோம்பியமையைக் காண்கின்றோம். இப்போக்கினை எல்லா நாட்டினர்களும் எல்லாச் சமூகத்தினர்களும் ஒத்துக்கொள்ள மாட்டார்கள். ஆனால் பசி நீக்க உணவளித்து மகிழ்விக்க வேண்டும் என்பதை அனைவரும் ஒத்துக்கொள்வர். என்றும் வேறுபடாது உள்ள நிலைத்த அறத்தை (**Eternal virtue**) என்றும் காலந்தோறும் சமூகந்தோறும் வேறுபடும் வழக்கியல் அறத்தை (**Customary virtue**) என்றும் கூறுவர். பசுக்கள் பல நிறத்தனவாயினும் பால் வெண்ணிறத்தினின்றும் மாறாததுபோல, சடங்கு முறைகள் சமூகப்பழக்கங்கள் வெவ்வேறாக இருந்தாலும், அடிப்படையான அறம் தன் தன்மையிலிருந்து மாறாது.

''ஆவே றுருவின ஆயினும் ஆபயந்த
பால்வே றுருவின அல்லவாம்— பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு''

என்ற நாலடியார் கூறும் கருத்து ஒப்பு நோக்கத் தகும்.

அறங்களுள் சிறந்தது அன்புடைமையே.

''தமர்தற் றப்பின் அதுநோன் றல்லும்'' என்னும் புறநானூற்றுப் பாடல் கூறும் அறத்தில் பிற அறங்களை அடக்குவதை விட, அன்புடைமையில் அனைத்தறங்களையும் அடக்குவதே இயைவதாகும். கடுவன் இளவெயினனார் திருமாலைப் பற்றிப் பாடும்பொழுது,

தீயினுள் தெறல் நீ; பூவினுள் நாற்றம் நீ;
கல்லினுள் மணி நீ; சொல்லினுள் வாய்மை நீ;
அறத்தினுள் அன்பு நீ (பரிபாடல் 3)

என்று கூறுகின்றார். அன்பின் சிறப்புக் கருதியே அறத்தினுள் அன்பாகத் திருமால் திகழ்கிறார் என்பர். திருக்குறள் அறத்துப் பாலில் கூறும் இனியவை கூறல், ஈகை, விருந்தோம்பல் முதலிய

அறங்களும் அன்பிருந்தால்தான் செய்ய முடியும். எனவே அறத்திற்கெல்லாம் அடிப்படை அன்பெனக் கோடலே சாலும்.

**தா. ஏ. ஞானமூர்த்தி :**

சங்க காலத்தில் கொடையறம் மிகுதியாக வற்புறுத்தப் பெறுதலின், வறியவர் பலராகவும் செல்வர் சிலராகவும் இருந்திருப்பார்களோ?

**இரா. சாரங்கபாணி :**

''இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்''

என்னும் குறளை நோக்கும்பொழுது, பண்டும் ஏழைகள் மிகுதியாகவும் செல்வர்கள் குறைவாகவும் இருந்தனர் எனத் தெரிகிறது. ஆனால், பதிற்றுப்பத்தில் இரவலர்கள் தம் நாட்டில் இல்லை என்று வெளிநாட்டிலிருந்து இரவலர்களைத் தேரில் ஏற்றிக் கொண்டுவந்து ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் உண்வளித்தான் என்னும் செய்தி காணப்படுகிறது.

''வாரார் ஆயினும் இரவலர் வேண்டி
தேரின்தந்து அவர்க்கு ஆர்பதன் நல்கும்''

இவ்வடிகளில் இரவலர்கள் வெளிநாட்டிலிருந்து வந்தனர் என்ற குறிப்புப் பெறப்படுகின்றது. வெளிநாட்டினர் என்ற பொருளில் வழங்கும் 'பரதேசி' என்ற சொல்லும் இக்கருத்துக்கு அரண் செய்யும்.

**தமிழண்ணல் :**

சங்கப் புலவர்கள் பாத்திரப் படைப்பில் அறவியலை உணர்த்துகின்றார்கள். இயற்கையாகவே அறத்தை உணர்த்துகின்றார்கள். புனைவு முறையிலும் அறத்தைப் புலப்படுத்துகின்றார்கள்.

''மன்ற மராஅத்த பேஎம் முதிர்கடவுள்
கொடியோர்த் தெறூஉம் என்ப; யாவதும்
கொடியர் அல்லர் எம் குன்றுகெழு நாடர்'' (குறுந். 87)

இப்பாடலில் தலைவி தலைவன் குற்றத்தை உணர்ந்து இருந்தும் அதனை வெளிப்படுத்தாமல் விட்டுக் கொடுத்து அவனைத் திருத்

தும் போக்கினை உணரலாம். வினை முடித்து மீளும் தலைவன் வரும்பொழுது இனிய விலங்குக் காட்சிகளையே காண்பதாகப் புனைவர். கொடிய காட்சிகள் விலக்கப் பெறும். மருதக்கலி, தலைவன் கொடுமையை உணர்த்திப் பின் தலைவி அவனுடன் கூடியதாகக் காட்டும். இம்முறையெல்லாம் அறன் வலியுறுத்து தற்காகவேதான்.

**முருகரத்தினம் :**

பண்டு அற நூல்கள் இருந்தனவா? சங்க காலத்து அற நூல்கள் தனியாக இயற்றப்படவில்லை. தொகை நூலாக உள்ள சங்க இலக்கிய காலத்தில் தனியாக அறநூல் அமைய வாய்ப்பில்லை. அறக்கருத்துக்கள் சில துறைகளில்தான் அமையும். பிற்காலத்தில் தான் அறநூல்கள் மிகுந்தன. சங்க காலத்தில் நீதி நூல் தோன்றாமைக்குக் காரணம் யாது ? தொல்காப்பியர் வீட்டை நீக்கி மற்றைய மூன்றை மட்டும் கூறுவானேன் ? 3,000 ஆண்டுகட்கு முன் தோன்றிய உபநிடதம் வீடு பற்றியே பேசுகிறது. சதுர்வர்க்கம் ஏன் தொல்காப்பியத்தில் இல்லை. முதலில் திரிவர்க்கம் கூறப்பட்டு (முப்பால்), பின்னரே சதுர் வர்க்கம் தோன்றியது. இந்தியாவில் எழுந்த நீதி நூல்களில் திருக்குறள் ஒன்றுதான் அறம் பொருள் இன்பம் மூன்றையும் முழு நோக்காகக் கருதித் திருவள்ளுவரால் இயற்றப்பட்டுள்ளது. அது போல் மூன்றையும் உள்ளடக்கிய ஒரு தனி நூல் பிற்காலத்தில் ஏன் எழவில்லை?

**இரா. சாரங்கபாணி :**

தொல்காப்பியத்தில் முதுமொழி, வாயுறை வாழ்த்து முதலிய குறிப்பு இருத்தலின், தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே நீதிநூல்கள் இருந்தன எனக் கருதலாம். சங்க காலத்து அறநூல் தனியாகத் தோன்றவில்லை. எனினும்

''ஆன்முலையறுத்த அறிவிலோர்க்கும்''

எனத் தொடங்கும் பாடலில்,

''நிலம்புடை பெயர்வது ஆயினும், ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்—என
அறம் பாடின்றே ஆயிழை கணவ.'' (புறம். 34)

என வருகின்றது. அறம் பாடின்றே என்பதில் அறம் என்பது அறநூலைக் குறிப்பதாகவும் சிலர் திருக்குறளைக் குறிப்பதாகவும் கருதுகின்றனர். எங்ஙனமாயினும், சங்ககாலத்து அறநூல் தனித்து இருந்தது எனக் கருத 'அறம் பாடின்றே' எனும் தொடர் வாய்ப் பளிக்கிறது. அறத்தின் வழி ஒழுகி, அறத்தான் பொருள் ஈட்டி, அறநெறியாலேயே இன்பம் துய்த்தால் வீடு பேற்றைத் தானே எய்தலாம் என்ற கருத்தில்தான், அறம் பொருள் இன்பம் என்ற மூன்றையும் கூறி, வீடு பேற்றினைத் தனித்துக் கூறவில்லை. அறம், பொருள், இன்பம் மூன்றையும் முழு நோக்கில் கண்டு திருக்குறள்போல் பிற்காலத்தில் நூல் தோன்றாமை தவக்குறை யேயாம். சங்ககால மக்களின் வாழ்க்கை அறநெறியோடு பொருந்தி இருந்தமையின் அறநூல் மிகுதியாக எழ வாய்ப்பில் லாமல் போயிற்று.

**குளோரியா சுந்தரமதி :**

சங்ககாலத்தில் எவ்வெவ்வறங்கள் பேசப்பட்டுள்ளன எனத் தொகுத்துக் காட்டும் பட்டியல் தேவை. ஓர் அறத்தையே வகைமைப்படுத்தியும் காட்டலாம். நட்பு என்றால் நட்பாராய்தல், பழைமை, தீ நட்பு என்று பல அதிகாரங்களை வள்ளுவர் வகுத் துக் காட்டுவதுபோலச் சங்க இலக்கிய நீதிகளையும் வகுத்துக் காட்டலாம். அறக்கருத்தினை முருகுணர்ச்சியுடன் வெளிப்படுத் தும் பாங்கினைச் சுட்டலாம். பாடலில் அறம் எவ்வெவ்வகையில் புலப்படுத்தப்படுகிறது என ஆராயலாம். குறிப்பிட்ட நீதிக்கும் குறிப்பிட்ட துறைக்கும் தொடர்பு இருக்கிறதா எனக் கண்டு வரையறுக்க முடியுமா? சில குறிப்பிட்ட நீதிகளை மட்டும் உணர்த்துவதில் வேட்கையுடைய புலவர்கள் காணப்படு கிறார்களா?

**இரா. சாரங்கபாணி :**

குறிப்பிட்ட கால எல்லையில் குறிப்பிட்ட பக்க அளவில் ஆய்வு அமையும்போது, பல்வேறு கூறுகளை ஆய்ந்து எழுதுதல் இயலாத ஒன்று. தனித்த நூல் அளவில் வெளிவருமாயின், பல கூறுகளையும் ஆய்ந்து எழுதலாம். தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல், பாங்கன் கழறல், தலைவன் நெஞ்சிற்குச் சொல்லியது போன்ற அகத்திணைத் துறைகளிலும், செவியறிவு

வுறூஉ, வஞ்சினக் காஞ்சி, வாயுறை வாழ்த்து, இயன்மொழி வாழ்த்து போன்ற புறத்திணைத் துறைகளிலும் அறக் கருத்துக்கள் இடம் பெறுகின்றன. சில புலவர்களால் சில அறக்கருத்துக்கள் அழுத்தமாகப் புலப்படுத்தப்படுகின்றன. காட்டாக, நக்கீரர் தலைவியின் மேனியினின்று பசலை நீங்குதற்கு, 'நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சின் கடப்பாட்டாளன் உடைப் பொருள் விரைந்து நீங்குதலைக் குறுந்தொகையில் உவமை கூறுகிறார். அவரே புறநானூற்றில் 'செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பேம் எனினே தப்புந பலவே' என ஈகைக் கருத்தையே கூறுகின்றார். ஆகவே, ஈதல் அறத்தை வலியுறுத்திக் கூறுவதில் நக்கீரர்க்குள்ள ஈடுபாடு தெரிகிறது. கபிலர் பாரியுடனும், பின்னர்ச் செல்வக் கடுங்கோ வாழியாதனுடனும் சிறந்த நட்புக் கொண்டவர். ஆதலால், நட்பின் சிறப்புக்களை, அதன் பல்வேறு இயல்புகளைப் பல்வேறிடங்களில் கபிலர் வலியுறுத்திக் கூறியுள்ளார்.

''தாமரைத் தண்தாது ஊதி மீமிசைச்
சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை'' (நற். 1)

என்று நட்பின் இனிமையைப் புலப்படுத்துகின்றார்.

''கூற்றம் வரினும் தொலையான் தன் நட்டார்க்குத்
தோற்றலை நாணா தோன்குன்று''

(கலித். 43)

''நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே''

(பதிற்று. 63)

என நட்புப் பற்றிய பல செய்திகளைக் கபிலர் பல இடங்களில் வற்புறுத்தக் காணலாம்.

**௧. வெள்ளைவாரணனார் :**

தொல்காப்பியர் காலத்தில் மூன்று உறுதிப்பொருள் தான் இருந்தனவே அன்றி நான்கு இல்லை.

''அந்நிலை மருங்கின் அற முதலாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப''

''இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு''

எனத் தொல்காப்பியர் மூன்று பொருள்களையே எண்ணுகின்றார். வீட்டினைச் சேர்த்து நான்காக எண்ணும் முறை தொல்காப்பியர் காலத்தில் இல்லை.

''மூன்றன் பகுதியும் மண்டிலத் தருமையும்''

என்றவிடத்து மூன்றன் பகுதியை விளக்க வந்த நச்சினார்க்கினியர், அறத்தான் பொருளாக்கி, அப்பொருளான் இன்பம் நுகர்தல் என்ற கருத்துப்பட உரை கூறுதல் நோக்கத்தகும். தொல்காப்பியர் காலத்திலும் சங்க காலத்திலும் மூன்று பொருள்களே குறிப்பிடப்பட்டிருத்தலின் அவற்றை அடிப்படையாக வைத்தே நாம் ஆராய வேண்டும்.

**ஒருவர் :**

''எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே''

என்ற இடத்துப் பெண்டிரை விடுத்து ஆடவரை மட்டும் கூறுதல் பொருந்துமா?

**இரா. சாரங்கபாணி :**

தலைவன் தலைவி இருவருக்கும் உள்ள ஒப்புமைப் பண்புகளைக் குறிக்குமிடத்துத் தொல்காப்பியர்,

''பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு''

எனப் பல ஒப்புமைகளைக் கூறுகின்றார். அவ்வொப்புமைகளில் ஒன்றாக ஆண்மையும் இடம் பெறுகிறது. ஆகவே பெண்டிருக்கும் ஆண்மை உண்டு என்பது பெறப்படும். எனவே ஆடவர் என்ற சொல் ஆண்மைக்குரிய பெண்டிரையும் குறிக்கலாம்.

**கி. கோதண்டபாணி :**

அறம் என்பதனை வரையறை செய்திருக்கலாம். அறத்திற்கும் தருமத்திற்கும் உள்ள வேறுபாட்டினை நாவலர் ச. சோ. பாரதியார் விளக்கியிருக்கிறார். அதனையும் சுட்டி இருக்கலாம்.

**அ கிருட்டிணசாமி :**

சங்ககால வேந்தர்கள் இத்துணையர் என வரையறை செய்து தமிழ்ப் பல்கலைக் கழகம் அறிவிக்க வேண்டும் என நண்

பர் பரிமணம் கூறினார்கள். தமிழக அரசு வரலாற்று வெளி யீட்டுத் துறை சங்க கால வேந்தர்கள் பற்றி நூல் வெளியிட இருக்கிறது. அந்நூல் கல்வெட்டு முதலிய ஆதாரங்களுடன் தக்க வரலாற்று அறிஞர்களைக் கொண்டு ஆராய்ந்து எழுதப் பட்டுள்ளது. விரைவில் வெளிவரும். சங்ககாலத்தில் தனிப் பேரரசு ஏற்படவில்லை என்னும் கருத்தைச் சிலர் புலப்படுத்தி னார்கள். அது பேரரசு வளர்ச்சிக்கு அறிகுறி யன்று; அது கட் டற்ற வன்மையைக் குறிக்கும். சங்ககாலத்தில் மூவேந்தர்கள் ஒருவரை ஒருவர் அடிமைப்படுத்தாமல் தனித்தனியே அரசு கோலியதுதான் வளர்ச்சியைக் காட்டுவதாகும். ஒரு பேரரசு தோன்றி ஏனைய அரசுகளை அடக்கி ஆண்டால் அது வீழ்ச்சிக்கு வழி கோலும் என வரலாற்று அறிஞர் தாயம்பி கூறுவர். சங்க காலத்தில் ஒரே தெய்வம் என்ற நிலை இல்லை. மாயோன், சேயோன் எனப் பல தெய்வங்கள் இருந்தன. அது வளர்ச்சி நிலை சுட்டுவதேயாம். தோற்ற யவனர்களைக் கையைப் பின் னால் கட்டித் தலையில் எண்ணெய் ஊற்றிச் சேர வேந்தர் ஒறுத்த னர் எனப் பதிற்றுப்பத்துப் பதிகம் கூறுகிறது. இதற்குக் கார ணம் யவன நாட்டில் தோற்றோர்களைக் கையைக் கட்டி எண் ணெயைத் தலையில் ஊற்றித் தண்டிப்பது வழக்கம். அத் தண்டனையையே இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் யவனர் களுக்குத் திருப்பிக் கொடுத்துள்ளான் என்பது அறியத்தக்கது.

## முடிவுரை

சங்க இலக்கியத்தில் அறவியல் என்னும் ஆய்வுக் கட்டுரையில் நட்பு, செய்ந்நன்றி அறிதல், ஈகை முதலிய அறங்கள் கூறப்பட்டன. அவற்றில் ஈகையைப் பல நிலையில் இக்கட்டுரை வலியுறுத்திக் கூறியது. அங்ஙனம் சங்க காலத்தில் ஈகை வற்புறுத்தப் பெறக் காரணம் அக்காலத்துச் செல்வர் சிலராகவும் வறியர் பலராகவும் வாழ்ந்தமையாக இருக்கலாமோ எனக் கருத வேண்டியுள்ளது. செய்ந்நன்றி அறிதல் என்பது சிறந்த அறமாகும். வள்ளுவரும்

> ''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு''

என அவ்வறத்தை மிகச் சிறப்பாக வலியுறுத்துவர். வின்செசுடர் என்ற திறனாய்வாளர் செய்ந்நன்றி அறிதல் இலக்கிய மெய்ப்பாட்டிற்குரியதன்று என்பர் (gratitude is

not a literary emotion). கம்பன் படைப்பில் வரும் கும்ப கருணன், பாரதத்தில் வரும் கன்னன் ஆகிய பாத்திரங்கள் செய்ந்நன்றியின் திருவுருவமாகவே திகழ்கின்றன. அவற்றைப் படிப்பவர்க்கும் செய்ந்நன்றி உணர்வு தோன்றும். அங்ஙனம் இருப்பச் செய்ந்நன்றி அறிதல் இலக்கிய மெய்ப்பாட்டிற்குரிய தன்று என்னும் வின்செஸ்டர் கூற்று எனக்கு அதிர்ச்சியைத் தந்தது. மேனாட்டுத் திறனாய்வாளர்கள் கூறும் அனைத்துக் கருத்தையும் ஏற்க வேண்டும் என்பதில்லை. வின்செஸ்டர் கருத்தை நான் மறுத்தும் எழுதி உள்ளேன். அதனால் திறனாய் வாளர்கள் கூறும் கருத்தில் ஏற்பதைத் தழுவி, ஏலாததைத் தவிர்த்தல் வேண்டும்.

# நான்காம் அமர்வு

## தலைவர் : இரா. சாரங்கபாணி

### முன்னுரை

சங்க காலத்தில் பொருளாதாரம், அரசியல் முதலிய துறைகள் எல்லாம் இப்பொழுது உள்ளன போல் வளர்ச்சியுற்ற நிலையில் இல்லை என்றாலும், அத்துறைகள் பற்றிய குறிப்புக்கள் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே காணப்பெறுகின்றன.

நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவைஎடுத்து
அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்
திறம்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது

(கலி. 99)

என்னும் சங்கப் பாடலால் தேவர்க்கும் அசுரர்க்கும் வியாழனும் வெள்ளியுமாகிய குரு இருவரும் செய்த அரசியல் நூல்கள் பற்றிய செய்தியினை அறிகின்றோம்.

முல்லை நிலத்து வாழ்ந்த ஆயர்கள் தயிர், மோர் முதலிய வற்றைக் குறிஞ்சி முதலிய நிலங்களில் கொண்டு சென்று பண்ட மாற்றாக நெல்லைப் பெற்று வந்து சுற்றம் ஓம்பினர். நெய்யை விற்று அதனால் வந்த பொருளைக் கொண்டு அணிகலன்களுக் கெனப் பொன் வாங்காமல் பசு, எருமை முதலியன வாங்கித் தம் பொருள் நிலையை மிகுத்தனர்.

ஆய்மகள்
அளைவிலை உணவிற் கிளையுடன் அருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉம்
மடிவாய்க் கோவலர் குடி (பெரும்பாண். 162-166)

என்று பெரும்பாணாற்றுப்படை பொருளாதாரத்தின் அடிப் படை பற்றிக் குறிப்பிடுகின்றது. பொருள் வருவாய் கருதிப் பண்டை மக்கள் சிறு கைத்தொழில்களையும் மேற்கொண்டனர். கட்டில் பின்னுவோனைப் பற்றிய குறிப்பு புறநானூற்றுப் பாட லில் காணப்படுகிறது. ஊரில் திருவிழா தொடங்குகிறது. தன் மனைவி பொறையுயிர்க்கும் நிலையில் இருக்கிறாள். நல்ல மழைக் காலம்; பொழுது சாயும் வேளை; அந்நிலையில் கட்டில் பின்னுபவன் எவ்வளவு விரைந்து ஊசியைச் செலுத்திக் கட்டி லைப் பின்னி முடிக்கக் கருதுகிறானோ, அவ்வளவு விரைவாக இருவருக்கிடையே மற்போர் நிகழ்ந்தது எனச் சாத்தந்தையார் குறிப்பிடுகின்றார்.

அரசன் குடிமக்களிடம் வரி வாங்கும்போது அவர்கள் தொல்லையுறாமல் வரி வாங்கினான். மலரில் வண்டு தேனைக் கொள்வது போலக் குடிமக்களிடம் அரசன் வரி கொள்ள வேண் டும் என்றும், மரத்தை வெட்டி எரித்துக் கரியாக்குவது போலக் குடிமக்களை வருத்தி வரி வாங்கலாகாது என்றும் சில நீதி நூல்கள் கூறுகின்றன. நற்றிணை 'வளங்கெடப் பொன்னும் கொள்ளார் மன்னர்' எனக் கூறுகிறது. அரசன் தன் அலுவலர் களைக் கொண்டு வருத்திக் குடிமக்களிடம் பொருள் பெறின், யானைபுக்க புலம் போல நாடும் கெடும்; அரசனும் கெடுவான் எனப் பிசிராந்தையார் அறிவுறுத்துவார். ஆதலால் வரி வாங்கும் அரசன் குடிமக்கள் நலத்தில் கண்ணும் கருத்துமாய் இருக்க வேண்டும். 'வறிஞன் ஓம்புமோர் செய் என' மக்களின் நலத்தை ஓம்புதல் வேண்டும். அங்ஙனம் காத்தோம்புதலினால்தான்,

> முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்

எனத் திருவள்ளுவரும்,

'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்' என நம்மாழ்வாரும் அரசனைக் கடவுளாகவே கருதி யுள்ளனர்.

நாட்டுப் பொருளாதாரத்திற்கு மக்களிடம் வரி பெறுதல் இன்றியமையாததெனினும் அவர்கள் நலம் கெடுமாறு கொடுமைப் படுத்தி வாங்குதலாகாது. நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறும்

போது, 'குடிபழி தூற்றும் கோலே னாகுக' எனக் கூறுதல் நோக்கத் தகும்.

'போந்தை வேம்பே ஆரென வரூஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும்' என்ற நூற்பாவில் கூறும் முறைப்படியே சேரன், பாண்டியன், சோழன் என வழங்குவது பண்டைய முறையாகும். அவ்வாறே புறநானூற்றுப் பாடல்கள் முதலில் சேரன், அடுத்துப் பாண்டியன், அடுத்துச் சோழன் என்னும் முறையில் இடம் பெற்றுள. பின்னர்க் குறுநில மன்னர்களைப் பற்றியனவும் நீதிப் பாடல்களும் கையறுநிலைப்பாடல்களும் அமைக்கப்பட்டுள்ளன. புறநானூற்றுத் திணை துறை அமைப்பு, தொல்காப்பியப் புறத்திணையியலின்படி அமையாமல் புறப்பொருள் வெண்பா மாலை அடிப்படையில் அமைந்துள்ளது என்பர். அவ்வமைப்பு பொருத்தமாக இல்லை என்பது பலர்தம் கருத்து. அகப்பாடல்களுக்குத் திணை துறை வகுக்கும்போது சில வேறுபாடுகள் காணப்பெறுகின்றன.

'முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே'

பாடலுட் பயின்றவை நாடுங் காலை' என்ற விதிப்படி சிலர் உரிப்பொருள் அடிப்படையிலும், சிலர் கருப்பொருள் அடிப்படையிலும், சிலர் முதற் பொருள் அடிப்படையிலும் திணை வகுத்துள்ளனர். இதனாலும் திணை துறையமைப்பில் வேறுபாடு காணப்பெறுகின்றது.

---

# 7. சங்க இலக்கியத்தில் பொருளியல் நோக்கு

நா. பாலுசாமி

**முன்னுரை :**

சங்க நூல்கள் தமிழ் மொழியின் சிறப்பை உணர்த்துவதோடு தமிழர் தம் அரசியல், பொருளியல், கலையியல், பண்பாட்டியல் முதலிய பல்வேறு வாழ்வியல் கூறுகளையும் புலப்படுத்துவன வாகும். இக்காலத்தில் முடியாட்சி நிலவியது என்பது வெள் ளிடைமலை. எண்ணற்ற அரசியற் கருத்துக்களை இலைமறை காய்போலச் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணலாம். அவ்வாறே தமிழர்தம் பொருளியல் கருத்துக்களும் பலவாகக் காணப்படுகின்றன.

பொருளாதாரம் என்பது இன்று ஒரு பெருங் கலையாக வளர்ந்துள்ளது. சங்க காலத்தில் தமிழர்தம் பொருளியற் கருத்துக்கள் கலையினது கட்டுக்கோப்பைப் பெறவில்லை எனி னும், அவர்தம் கருத்துக்கள் இக்காலப் பொருள் நூல்கள் கூறும் கருத்து நுட்பங்களுக்குப் பேரளவு ஈடுகொடுக்கத் தக்கவை என்பது ஒருதலை. இவ்வுண்மையை எடுத்துக் காட்டுவதே இவ் வாராய்ச்சிக் கட்டுரையின் நோக்கம்.

**அரசுப் பொருளாதாரம் :**

அரசுப் பொருளாதாரம் என்பது ஓர் அரசாங்கத்தினது பொருளாதார நிலையைக் கூறுவதாகும். இதனை நாட்டுப் பொருளாதாரம் என்றும், பொதுப் பொருளாதாரம் என்றும் கூறலாம். இப்பொருளாதாரக் கூறு இன்று ஒரு பெருங்கலை யாகக் கருதப்படுகின்றது. ஒரு நாட்டின் அரசாங்கம் இயங்கு வதற்குரிய மூலாதாரம், அதன் வரவு செலவு, வருவாய்க்குரிய வழிகள், செலவாகும் விதம், எவ்வாறு செலவு செய்தல் வேண்

டும் என்ற முறை இன்ன பிறவற்றை விரிவாகக் கூறுவது இப் பொருளாதாரக் கலையின் பணியாகும்.

பொருளாதாரம் தனிப் பொருளாதாரம், பொதுப் பொருளாதாரம் என இரு வகைப்படும். தனிப்பொருளாதாரம் என்பது குடும்பப் பொருளாதாரம். பொதுப் பொருளாதாரம் என்பது நாட்டுப் பொருளாதாரம். இவ்விரண்டினுக்குமிடையே உள்ள ஒற்றுமைகள் சில; வேற்றுமைகள் பல. இவற்றை விரிப்பது இங்கு மற்றொன்று விரித்தலாக முடியும். ஆகவே, பொதுப் பொருளாதாரமாகிய நாட்டுப் பொருளாதாரத்தின் பல்வேறு கூறுகளையும் ஈண்டு ஆராய்வோம்.

நாட்டுப் பொருளாதாரம் அல்லது அரசுப் பொருளாதாரம் என்பது இருபெரும் பிரிவுகளுள் அடங்கும். ஒன்று வருவாய் பற்றியது; மற்றொன்று செலவு பற்றியது. ஒரு நாட்டிற்குரிய பொருள் வருவாய் என்பது அந்நாட்டு மக்கள் தரும் வரி அல்லது கடமை முதலியனவாகும். பொருளின்றித் தனி மனித வாழ்க்கை இல்லையாதல் போல, ஓர் அரசும் பொருளின்றேல் இயங்காது.

''பொருளல் லவரைப் பொருள்ாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள்'' (குறள். 751)

என்பார் வள்ளுவர். இப்பொருளை அரசு எவ்வாறு ஈட்டுவது? உலகில் நாகரிகம் தொடங்கிய நாள் முதல், ஓர் அரசு தனக்குரிய பொருளை மக்களிடமிருந்து பல்வகை வரிகள் வாயிலாகப் பெறுகிறது. அரசு இதற்கென வரிவிதிப்புக் கொள்கைகளையும் வரையறை செய்து கொள்கிறது. இவ்வரிவிதிப்புக் கொள்கை, ஆராயுமிடத்து மக்களிடையே நிலவும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைச் சமன் செய்யவும் பயன்படுகிறது.

**வருவாய்க்குரிய வழிகள் :**

ஒரு நாட்டினது அல்லது அரசினது வருவாய்க்குரிய வழிகள் மிகப் பலவாகும். அவற்றுள் ஒன்று மக்களிடமிருந்து பெறும் வரிகள் என்பதனை முன்னர்க் கண்டோம். அவ்வரிகள் யாவை? தமிழ் நூல்களில் வரி பற்றிய பல்வேறு கலைச் சொற்கள் காணப்படுகின்றன. இறை, திறை, இரவு, கடமை, குடிமை, ஆயம், கொண்டி, உறுபொருள், உல்குபொருள் முதலிய சொற்கள் மக்கள் அரசுக்கு வழங்கும் பல்வேறுபட்ட வரிகளைக் குறிப்பனவாகும். இக்கலைச் சொற்கள் நுட்பமான பொருள் வேறுபாடுகள்

கொண்டு வழங்கப்பட்டன. எனவே இவற்றை ஆழமாகச் சிந்தித்தல் வேண்டும். இவை தமிழ்மொழியின் சொல் வளத்தை எடுத்துக் காட்டுவதோடு அம்மொழியின் நுட்ப திட்பங்களையும் புலப்படுத்துவனவாகும். தமிழர்தம் பொருளாதாரச் சிந்தனைகள் எத்துணை விரிவும் விளக்கமும் உடையன என்பதும் நன்கு புலப்படும்.

**வரிகள் :**

(அ) **இறை** : இஃது இறைவன் அல்லது அரசனுக்கு மக்களால் வழங்கப்படுவது எனப் பொருள்படும். அக்காலத்தில் அரசன் இறைவன் என்று கருதப்பட்டான். ''உலகபாலர் உருவாய் நின்று உலகங் காத்தலின் 'இறை' என்றார்'' என்பது பரிமேலழகரது உரைவிளக்கம். 'இறு' என்பதன் அடியாகப் பிறந்த 'இறை' என்பது மக்களால் இறுக்கப்படுவது அல்லது வழங்கப்படுவது என்னும் பொருளதாகும். இது பெரும்பாலும் நிலத்தின் மீது விதிக்கப்படும் வரியாகும். நிலமுடையார் யாவரும் அரசுக்கு நிலவரி இறுத்தல் வேண்டும் என்பது அன்று முதல் இன்று வரையுள்ள நடைமுறையாகும். 'இறையிலி நிலம்' என்னும் தொடர்ப் பொருளும் ஈண்டு நோக்கத்தகும்.

(ஆ) **திறை** : திறை என்பது தோற்ற மன்னர்கள்வென்ற மன்னர்களுக்கு ஆண்டுதோறும் வழங்கும் பொருளாகும்.

> ''பணிந்தோர் தேஎந் தம்வழி நடப்பப்
> பணியார் தேஎம் பணித்துத்திறை கொண்மார்''
> (மதுரைக். 229-230)

என்னும் அடிகள் இதனை வலியுறுத்தும்.

(இ) **இரவு** : இஃதும் ஒரு வகை வரியாகும். இது மக்கள் முறையாகக் கட்ட வேண்டியதன்று. சில சூழ்நிலைகளில் மக்களிடமிருந்து கட்டாயமாகப் பெறவேண்டிய பொருள் இதனுள் அடங்கும். மக்களது விருப்பம், விருப்பமின்மைக்கு அப்பாற்பட்ட நிலையில் ஓரளவு அச்சுறுத்தலின் வாயிலாகக் கொள்ளப்படுவது இரவு எனப்படும். ஆறலை கள்வர் வழிப் போக்கரிடமிருந்து வலிதிற் பறிக்கும் கொள்ளைப் பொருள் போன்றதாகும் இது.

''வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு'' (குறள். 552)

என்னும் குறட்பா இதற்கு எடுத்துக்காட்டு. இதற்குப் பரிமே லழகர், 'வேலொடு நின்றான் என்றதனால் பிறரொடு நில்லாமை யும் இரவு என்றதனால் இறைப் பொருள் அன்மையும் பெற்றாம். தாராக்கால் ஒறுப்பல் என்னும் குறிப்பினன்' எனக்கூறும் விளக்க வுரை இதனை மேலும் வலியுறுத்தும். ஆயின், ஒருசார் ஆராய்ச்சி யாளர் நாட்டில் ஏற்படும் எதிர்பாராச் சூழ்நிலைகள் காரணமாக அரசு, செல்வர்கள்பால் வேண்டிப் பெறும் அல்லது இரந்து பெறும் சிறப்புப் பொருளாகும் என்பர். இஃது இக்கால வழக்கில் நன்கொடை எனப்படும். எது எவ்வாறாயினும், இரவு என்பது அரசுக்கு வழங்கப்படும் சிறப்பு வரிப்பொருள் எனவே கொள்ளப் படும்.

(ஈ) **புரவு** : புரவு என்பது புரத்தல் அல்லது காத்தல் எனப் பொருள்படும். எனவே, இது ஒரு காப்பு வரியாகும். நாட் டில் யாதானும் ஒரு பகுதியினர் சிறப்பாகப் புரக்கப்பட வேண்டு மெனில் அப்போது அரசு ஒருவகைச் சிறப்பு வரி விதிப்பதுண்டு. குறிப்பாக, ஒரு நெருக்கடிநிலை தோன்றுகிறபோது அதனைப் பொருளாதார முறையில் சந்திப்பதற்கு இத்தகைய புரவு விதிக்கப் படுவதுண்டு. 'குடிபுரவு இரக்கும்' என்னும் புறநானூற்றுத் தொடர்(75-4) இதனை நன்கு விளக்கும்.

(உ) **கடமை** : இதன் சொற்பொருள் உரிமை என்பதன் மறுதலைப் பொருளாகும். ஒவ்வொரு குடிமகனும் அரசுக்குச் சில கடமைகள் ஆற்ற வேண்டும். அக்கடமை உழைப்பாகவும் இருக்கலாம்; பொருளாகவும் இருக்கலாம். இதனையே, இக் காலத்தார் நிலவரி என்பர். இஃது ஒருவனது நிலவுடைமை யால் ஏற்படும் கடமையாகும். 'இறை' என்பதும் 'கடமை' என்பதும் ஒரே வகையான வரியைக் குறிப்பதற்குப் பல்வேறு காலக் கட்டங்களில் வழங்கப்பட்ட ஒருபொருள் கிளவிகளாகும்.

(ஊ) **குடிமை** : இது குடி அல்லது குடும்பம் என்பத ேனாடு தொடர்புடைய சொல். சமுதாயத்தில் தனி மனிதன் சிறப்புக்குரிய அங்கமாகக் கருதப்படுவதில்லை. அவன் இல்லறம் ஏற்றுக் குடும்ப வாழ்வு நடத்தும் நிலையில்தான் அரசு அவனைச் சமுதாயத்தின் அங்கமாக மதிக்கிறது. அவன் நாடோடியாகத் திரியாமல் மனையறம் மேற்கொள்ளும்போது தனக்கென

வீடமைத்துத் தங்குகிறான். அவனது குடும்ப உடைமையாகிய வீடு, வீட்டுமனை ஆகியவற்றின் மீதும் அரசு வரி விதிக்கிறது. குடி மீது விதிக்கப்பட்ட வரி குடிமை எனப்பட்டது. ஆயின், வரலாற்றுப் பேரறிஞராகிய நீலகண்ட சாத்திரியார் இதனை மக்கள் அரசுக்குப் பொதுவாக வழங்கும் வரியைக் குறிப்பதாகவே கொண்டார்.

(எ) **ஆயம் :** திருவள்ளுவர் காலத்தில் சூதாட்டத்தில் பங்கு பெறும் இருவர் வரையறுத்துக் கொள்ளும் பந்தயப் பொருளே ஆயம் எனப்பட்டது. சூதாட்டத்தில் வென்றவன் தோற்றவன்பால் பெற்ற தொகை ஆயமாயிற்று. காலப்போக்கில் ஆயம் என்பது பொருள் மாற்றம் பெற்றது. மக்களுள் ஒரு சாரார் தத்தம் தொழில் நிமித்தம் அரசுக்கு வழங்கும் தொழில் வரி 'ஆயம்' என்று அழைக்கப்பட்டது. ஆடை வெளுத்துத் தரும் தொழிலாளி தான் துவைப்பதற்குப் பயன்படுத்தும் கல்லின் மீது வரி செலுத்தியமை காணப்படுகிறது. இது கல்லாயம் எனப் பட்டது. வரலாற்றுப் பேரறிஞர் மகாலிங்க சாத்திரியார் தமது தென்னிந்திய ஆட்சி முறை என்னும் ஆங்கில நூலில் இதனை விரித்துள்ளார்.

(ஏ) **கொண்டி :** சங்க காலத்தில் அரசர்களுக்கு இடையே நடந்த கடற்போரில் வென்ற அரசன் தோற்றவனிட மிருந்து கொண்ட பெரும்பொருள் கொண்டி எனப்பட்டது. இது போர் குறித்த ஒன்றேயாகும். அமைதிக் காலத்தில் இது பற்றிய பேச்சில்லை. 'கொண்டி வேண்டுவனாயின்' (51) என்னும் புற நானூற்றுத் தொடர் இதனை மெய்ப்பிக்கும்.

(ஐ) **உறுபொருள் :** இது வரி அன்று. ஆயினும் இது வும் அரசுக்குரிய பொருளே. செல்வர், வழித் தோன்றல்களின்றி இறப்பரேல் அவர்கள் ஈட்டிவைத்த பொருளும், பிற உடைமை களும் அரசின் உடைமைகள் ஆயின. அன்றியும், கண்டெடுக்கப் படும் அல்லது தோண்டி எடுக்கப்படும் பொருட்குவைகள்அரசுக்கே உரியவாயின. இவ்வாறு வரும்பொருள் உறுபொருளாம்.

> ''உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
> தெறுபொருளும் வேந்தன் பொருள்.'' (756)

என்னும் குறளும், அதற்குப் பரிமேலழகர், 'வைத்தார் இறந்து போக நெடுங்காலம் நிலத்தின்கண் கிடந்து, பின் கண்டெடுத்தது

உம், தாயத்தார் பெறாததூஉமாம்' எனவுரைக்கும் விளக்கமும் இங்கு நோக்கத்தகும்.

(ஓ) **உல்குபொருள்:** இது இக்காலத்து வழங்கி வரும் வணிக வரி, சுங்க வரி போன்றதாகும். ஒரு நாட்டிலிருந்து பிற நாட்டுக்கு ஏற்றுமதியாகும் பொருள் மீதும் இறக்குமதி யாகும் பொருள்மீதும், விதிக்கப்படும் வரி சுங்க வரியாகும். இத் தொடருக்குப் பரிமேலழகர், 'சுங்கமாகிய பொருளும்' என்று கூறிப் பின்னும், 'சுங்கம் கலத்தினும் காலினும் வரும் பண்டங் கட்கு இறையாயது' எனக் கூறும் விளக்கம் இங்கு மனங்கொள் ளத்தகும்.

(ஔ) **தெறுபொருள் :** தெறுதல் என்பது பகைவெல்லு தல் எனப்பொருள்படும். இதுவும் போர்க்காலத்தில் தோற்றவ னிடமிருந்து வென்றவன் போர்க்களத்தே வாரிக்கொண்டு வரும் பொருளாகும். இப்பொருள் அரசனால் அரசுடைமையாகக் கருதப் பெறாமல் தனக்கு வெற்றி விளைவித்த வீரர்களுக்குப் பகிர்ந்து தரப்பட்ட பொருளாகும். இது கொண்டியினும் வேறு பட்டது. கொண்டியும் தோற்ற அரசன்பால் பெறுவதாயினும் அஃது அரசுக்கே உரியதாம்.

இதுகாறும் அரசுக்குரிய பொருள் வரும் பல்வேறு வழி துறைகளும், வரிவகைகளும் ஆராயப்பட்டன. இனி, அரசு விலக்கத்தகும் சில வரவினங்கள் பற்றிச் சிந்திப்போம்.

**விலக்கப்பட்டவை :**

திருவள்ளுவர் ஓர் அரசு எவ்வெவ்வகையில் பொருளீட்ட முற்படுதல் தகாது என்பதனை வலியுறுத்திக் கூறியுள்ளார். வரை வின் மகளிர், கள்ளுண்ணாமை, சூது ஆகிய மூன்று அதிகாரங் களும் அரசுக்கு விலக்கப்பட்ட பொருள் பற்றி விரித்துரைக்கின் றன. கள்ளின் மீதும், வரைவின் மகளிர் மீதும், சூதாட்டத்தின் மீதும் வரி விதிப்பதன் வாயிலாக அரசுக்குப் பெரும்பொருள் கிடைக்கலாம். கௌடில்யர் தமது அர்த்த சாத்திரத்தில் இவற்றை வரவேற்றிருப்பவும், திருவள்ளுவப் பெருந்தகை இவற்றை விலக்கியுள்ளமை நினைந்து மகிழத்தகும். ஓர் அரசின் கடமை அங்கு வாழும் மக்களுக்கு நல்வாழ்வு அளிப்பதேயாம். வாழ்க்கை நலமாவது ஒருவனது உடலையும், உள்ளத்தையும் பொறுத்தது. மேற்கண்ட மூன்றனுள் கள்ளும், வரைவின் மகளி

ரும் உடல்நலக் கேட்டுக்குக் காரணம். சூது ஒருவனது உள நலத்தைக் கெடுக்கும். அன்றியும் மக்களை எளிய முறையில் வேகமாகக் கவர்ந்து ஈர்த்து அவர்களைக் கெடுப்பவையாகும் இவை. எனவே, வாழ்வாங்கு வாழ வைக்க விரும்பிய வள்ளுவப் பெருந்தகை இம்முத்தீமைகளையும் கடிந்தொழித்தார். 'குடி குடிகெடுக்கும், குடிப்பழக்கம் உடல் நலத்தைக் கெடுக்கும்' எனும் விளம்பரத்தையும் தொங்க விட்டு, கள்ளுக்கடைகளைத் திறப்பதும் அதன் வாயிலாகப் பொருள் ஈட்டுவதும் வள்ளுவர் கண்ட அரசியல் நெறிக்கு மாறுபட்டவை.

> 'ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்' (923)
> 'சூதின், வறுமை தருவதொன் றில்' (934)
> 'இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
> திருநீக்கப் பட்டார் தொடர்பு' (920)

என்று வள்ளுவர் கூறியிருப்பதும், இவை அங்கவியலுள் கூறப் பட்டிருப்பதும் சிந்திக்கத் தகும்.

> 'மயக்கும் கள்ளும் மன்னுயிர் கோறலும்
> கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்' (16: 84, 85)

என்ற மணிமேகலை அடிகளும் கவனத்தில் கொள்ளத்தக்கன. எனவே, தமிழ்ப் பண்பாடு, மக்களுக்கு நல்வாழ்வு தரும் நல் லொழுக்க நெறிப்பட்ட பொருளியல் கொள்கையையே சங்க காலம் தொடங்கி வலியுறுத்தி வருகின்றது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி ஆகும்.

**செலவினங்கள் :**

திருவள்ளுவர், ஓர் அரசு தனக்குரிய பொருள் வரும் வழி களைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்பதையும், அவ்வாறு வந்து ஈண்டிய பொருளை எவ்வாறு செலவிடுதல் வேண்டும் என்பதையும் ஒரு குறட்பாவில் வெளிப்படுத்தியுள்ளார்.

> ''இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
> வகுத்தலும் வல்ல தரசு'' (385)

என்பது அக்குறட்பா. இதில் வகுத்தல் என்னும் தொடர் சிந் தனைக்கு உரியது. ஓர் அரசு எவ்வெவ்வினங்களுக்குச் செலவு செய்தால் அதனால் மக்களுக்கு நிறைந்த நன்மைகள் ஏற்படும்

என்பதனை உணர்ந்து கொள்ளுதல் இன்றியமையாதது. டால்டன் என்ற மேனாட்டுப் பொருளாதார மேதை இதுபற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார். ''பொருளாதாரம் என்பது ஒரு கலை நூல்; அறிவியல் என்றும் அதனை அழைக்கலாம். சில ஒழுக்க நெறிமுறைகள் இக்கலை நூலில் வற்புறுத்தப்படுவதோடன்றி அடிப்படையான ஒரு பேருண்மையையும் அது புலப்படுத்த வேண்டும். அதாவது சமுதாயத்தில் வாழும் பெரும்பாலான மக்களுக்கு மிகப் பல நன்மைகள் விளையும் அளவுக்குப் பொதுப் பொருளைச் செலவிடுவதே ஒரு நல்ல அரசின் தலையாய பணியாகும்".

ஓர் அரசு நாட்டின் பாதுகாப்பு, அதன் வளர்ச்சி, வாணிப முன்னேற்றம் ஆகிய மூன்று துறைகளில் பெரிதும் கவனம் செலுத்த வேண்டும். இதற்குச் செலவாக்கப்படும் பொருள் நிறைந்த பயனை விளைவிப்பதாகும். படைகளைப் பேணி நாட்டிற்கு உள்ளேயும் வெளியேயும் தோன்றும் பகையை உரிய காலத்தில் களைவது அரசின் முதற்கடமையாகும். திருவள்ளுவர் படைமாட்சி, படைச்செருக்கு என்ற இரண்டு அதிகாரங்களை அமைத்துக் கூறும் நோக்கம் சுட்டுதற்குரியதாகும். ஒரு நாடு உரிமை இழக்காமல் வாழவேண்டுமாயின் அதற்கு ஏற்ற படை வன்மை வேண்டும். ஓர் அரசுக்குரிய அங்கங்கள் ஆறனுள்ளும் படையை முன் வைத்துக் கூறும் திருவள்ளுவரது நோக்கம் இதுவேயாகும். அமைதிக் காலத்தும் போர்க்காலத்தும் படைகளைப் பேணிக் காத்தற்குப் பெரும்பொருள் செலவாகும். இது தவிர்க்க முடியாத செலவினமாகும்.

மக்களின் வாழ்க்கை முன்னேற்றத்திற்கும் வளத்திற்கும் ஏற்ற பல்வேறு சமுதாயத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டியது அரசின் மற்றொரு கடமையாகும். குளம் தொட்டு வளம் பெருக்குவதும், காடு கொன்று நாடாக்குவதும் இன்ன பிறவும் அக்கால அரசுகள் மேற்கொண்ட பல்வேறு சமுதாயத் திட்டங்களாகும். கரிகால் பெருவளத்தான் செயல் இங்குக் கவனிக்கத் தக்கது.

''வித்திவா னோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினும் நண்ணி யாளும்
இறைவன் தாட்குத வாதே யதனால்
அடுபோர்ச் செழிய இகழாது வல்லே

நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம இவண்தட் டோரே
தள்ளா தோரிவண் தள்ளா தோரே''

(18 : 24—30)

என்னும் புறநானூற்று அடிகள் இதனை மேலும் வலியுறுத்தும். மேலும், நாட்டில் நடைபெறும் வாணிபம் முதலிய பல்வேறு தொழில் துறைகளைக் கண்காணித்தற்கும், நெறிப்படுத்தற்கும் கரிகாலன் போன்ற அக்கால அரசர்கள் பல்வேறு அலுவலர்களை யும் மேற்பார்வையாளர்களையும் பணி கொண்டனர் என்ப தற்கு இலக்கியச் சான்றாகப் பட்டினப்பாலையுள் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுவது அமைகின்றது.

''வேலாழி வியன்றெருவின்
நல்லிறைவன் பொருள்காக்கும்
தொல்லிசைத் தொழில்மாக்கள்''

(பட்டினப். 119-121)

இறுதியாக, அக்கால அரசர்கள் பல்வேறு கவிஞர்களுக்கும் கலைஞர்களுக்கும் அரசின் சார்பில் பொருள் வழங்கிச் சிறப்பித் தார்கள். கவிஞர்கள் அக்காலத்தில் சான்றோர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். 'சங்கச் சான்றோர்' என வழங்கப்படு வது காண்க. சங்கப் புலவர்கள் கஞ்சிக்குக் கவி பாடியவர்கள் அல்லர். அரசுக்கும் மக்களுக்கும் இடையே நல்ல உறவினை வளர்த்த பண்பாளர்கள் அவர்கள். அவர்கள் நம்பிக்கைக்கு உரிய உண்மையான மக்கள் தொண்டர்களாக விளங்கினார்கள். அரசு தவறு செய்யுமாயின் இடித்துரைத்தலும், நன்மை செய்யின் பாராட்டி மகிழ்தலும் அவர்களது பண்பாகும். மக்கள் குறை களையும் சமுதாயத்தில் அவ்வப்போது நிலவும் நலிவு மெலிவு களையும் உரிய காலத்தில் அரசின் கவனத்திற்குக் கொண்டு வருதலைத் தமது கடமையாகக் கொண்டார்கள். இவ்வாறாக, அறம், பொருள், இன்பங்களின் பொருட்டு மன்னர் நாட்டின் செல்வத்தைச் செலவிட்டனர் என்பது கண்கூடு.

**பழங்கடன் நீக்குதல் :**

இக்காலத்தைப் போலவே, அக்காலத்திலும் வேளாண்குடி மக்களே பலராக இருந்தனர். உழவுத் தொழிலே உயிர்த் தொழிலாகக் கருதப்பட்டது. மழைபொய்த்தல் முதலிய பல்வேறு

காரணங்களால் சில ஆண்டுகளில் விளைவு பாதிக்கப்பட்டதுண்டு. வேளாண் மக்கள் அதனால் பேரிழப்புக்கு ஆளாயினர். தாம் பட்ட கடன்களை அரசுக்குத் திருப்பிச் செலுத்த முடியாமல் இடர்ப்பட்டனர். இத்தகு கால கட்டங்களில் சங்கப் புலவர் சிலர் துணிவுடனும், சமுதாய உணர்வுடனும் அரசனை நேரில் கண்டு மக்கள் குறைகளை எடுத்துக்கூறி அவர்களின் கடன்களை நீக்கிவிடுமாறு வேண்டிக் கொண்டனர் என்ற செய்தி புறநானூற்றுப் பாடல் ஒன்றில் சித்திரிக்கப்பட்டுள்ளது என்பது யாவரும் அறிந்ததே. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை வெள்ளைக்குடி நாகனார் கண்டு, உழவர்தம் பழங் கடன் நீக்கப் பாடிய அப் புறநானூற்றுப் பாடலின் பின்வரும் அடிகள் நினைவில் கொள்ளத்தக்கவை.

'பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை ஆயின்நின்
அடிபுறந் தருகுவர், அடங்கா தோரே' (35 : 32 - 34)

# 8. சங்க இலக்கியத் திணை-துறை அமைப்பில் எழும் ஒரு சிக்கல்

திருமதி குளோறியா சுந்தரமதி

0.1. திணை துறை அமைப்பு, சங்கப் பாடல்களின் உருவாக்கத்தில் இன்றியமையாததாகப் பொருந்துவது. இதனை, கவிதையில் கூறியுள்ள பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள உதவும் கவிதையில் பெரிதும் கூறப்படாத திட்டம் என விளக்கலாம். எனவே, திணை துறை அமைப்பு சங்கப் பாடல்களின் கல்வியிலும் பகுப்பாய்விலும் வகைமுறையிலும் மதிப்பீட்டிலும் இன்றியமையாததாக இயல்வது.

0.2. 'சங்க இலக்கியத்தில் திணை - துறை அமைப்பு' என்ற ஆய்வுப் பொருளைப் பல நிலைகளில் அணுகலாம். சங்கப் பாடல்களின் பொருட் பகுப்பாய்வு நிலையில் இவற்றிற்குரிய அடிப்படைகளை உருவாக்கலாம்; பாடல்களுக்கு வகுக்கப் பெற்றுள்ள திணை துறை அமைப்பின் வழிநின்று திணை துறைகள் பற்றிச் சிந்திக்கலாம்; இவ்விரண்டு ஆய்வுகளையும் ஒப்பிட்டுத் திணை - துறை அமைப்பின் திட்டத்தை மதிப்பிடலாம் அல்லது சங்கப் பாடல்களுக்கு வகுக்கப் பெற்றுள்ள திணை - துறை அமைப்பை அகப்பொருள் இலக்கணச் சிந்தனைகளோடு ஒப்பிட்டு முடிவுகளைத் தேரலாம்.

1.0. இக்கட்டுரை, இவற்றின் வேறாய் ஒன்றிற்கு மேல் துறைபெறும் பாடல்களைக் குறிப்பாக அகப் பாடல்களைக் கருத்திற்கொண்டு ஒரு பாடல்—பல்துறைச் சிக்கலின் காரணிகளையும் துறைத் தெளிவுக்குரிய அடிப்படைகளையும் கருத்தில் கொள்கின்றது.

ஒரு பாடலுக்கு ஒன்றிற்கு மேல் துறைக்குறிப்பு அமையும் நிலை குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை என்ற தொகைகளில் அமையும் பாடல்களில் பத்து விழுக்காடும், ஐங்குறுநூற்றில் மூன்று விழுக்காடும், புறநானூற்றில் ஏழு விழுக்காடும் பெற்று

அமைகின்றது. புறப்பாட்டைவிட அகப் பாடலில் இந்நிலை சிக்கல் வாய்ந்தது. அகப்பாட்டுத் துறை அலகுகளின் செறிவே இதற்குக் காரணம். எனவே இச்சிக்கலை அகப் பாடல்களைக் களனாகக் கொண்டு விளக்குவது பயனுடையதாக அமையும். பல்துறைச் சிக்கலுக்குரிய காரணிகளை முதற்கண் எடுத்துரைப்பது பொருந்தும்.

## 1.1. திணை மயக்கம்

ஒரு பாடலின் துறையை வரையறுப்பதற்குத் திணை பற்றிய தெளிவு துணை செய்யும். குறிஞ்சிப் பின்புலம் அமையும் ஒரு பாடலில் குறிஞ்சி ஒழுக்கத்தின் ஏதோ ஒரு துறையே பெரிதும் எதிர் பார்க்கப்படுவது. ஆயின் ஒரு திணைக்குரிய பின்புலத்தில் வேறொரு திணைக்குரிய செய்தியை விரவும் பாங்கு துறை வரை யறையிலும் மயக்கத்தை விளைவிப்பது. இரு துறை அமையும் பாடல்கள் இருவேறு திணைகளைச் சார்ந்தனவாக அமைவதற் குரிய அடிப்படை இதுவே. காட்டாக அகம் 126-ஆம் பாடல் (மருதம்) மூன்று துறைக்குறிப்புப் பெறுகின்றது. 1. உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண், தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லி யது. 2. அல்ல குறிப்பட்டு (தலைவன்) அழிந்தது. 3. தோழி யைப் பின்னின்ற தலைமகன், தன்னெஞ்சிற்குச் சொல்லியது. முதல் துறை மருதத்திணையின் உரிப்பொருள் பொருந்த அமைந் தது. பின்னைய, குறிஞ்சி உரிப்பொருளன; ஒரு திணைக்குரிய பின்புலத்தில் பிறிதொரு திணையின் உரிப்பொருளைப் பாடும் இலக்கிய மரபின் அடியாகப் பொருந்தியவை.[1]

## 1.2.0. துறை அலகுகள் அருகி அமையும் தன்மை

ஒரு துறையை உருவாக்கச் சில இன்றியமையாத அலகுகள் பொருந்துகின்றன. அகப்பாடல் அகமாந்தரின் கூற்றாக வெளி யிடப்படுகின்றது. எனவே, அகப்பாட்டை உணர்ந்து கொள்ள, பாட்டு (கூற்று), யார் (கூறுவோன்) யாருக்கு (கேட்போன்) எச்சூழலில் (களன்) என்ன பயன் கருதி (உட்கோள்) எதனை (செய்தி) உரைக்கின்றது என்பதைக் குறித்த தெளிவு தேவை.

1.2.1. இத்தகைய துறை அலகுகளைப் பாடலில் பொருத் தும் பாங்கு சங்கப் பாடல்களில் அமைகின்றது. பாகனை விளித் துரைக்கும் முல்லைப் பாடல்களிலும் தலைவனை விளித்துரைக் கும் பாடல்களிலும் 'கேட்போன்' என்ற அலகு தெளிவாகப்

பொருந்துகிறது. பாலைத் திணையில் அமையும் வற்புறுக்கும் தோழிகூற்றுப் பாடல்களில் சில, தலைவியின் ஆற்றாமைக் கிளவியைப் பாடலின் முதற்கண் தந்துரைத்து, அதற்குத் தோழி வழங்கும் மறுமொழியாக அமைகின்றன.[2] வன்புறை எதிரழியும் தலைவிகூற்றிலும் தோழியின் வன்புறைக் கிளவியைத் தந்துரைத்துத் தொடங்கும் பாங்கு உண்டு.[3] இவை, பாடல் இயையும் சூழல், கூறுவோன் கேட்போன் இவற்றைத் தெளிவாக வரையறுக்கும் துறை அலகுகளைக் கொண்டவை. ஆயின், விளி அமைந்தும் பொதுக்கிளவியாகப் பொருந்தின் இப்பயன் விளைவதில்லை. காட்டாக, அன்னாய் என்ற விளி, தலைவி, தோழி, அன்னை இவர்களைச் சுட்ட அமையலாம்.[4]

1.2.2. சில பாடல்களில் பொருந்தும் குறி, வெறி, அலர், இற்செறிப்பு, காப்பு, புலவி, வரைவு என்றின்ன அகப்பொருள் இலக்கணப் பதங்களும் துறை வரையறுக்கும் அலகுகளாகப் பொருந்தலாம்.[5]

பல்பூங் கானல் பகற்குறி மரீஇச்
செல்வல் கொண்க செறித்தனள் யாயே

என்ற நற்றிணைப் பாடல் (258) பகற்குறிக் களனில் தலைவனுக்குச் செறிப்பு அறிவிக்கும் தோழிகூற்று என்பதற்குரிய அகச்சான்று பாடலில் தெளிவுறப் பொருந்தியுள்ளது.

1.2.3. இத்தகைய துறை அலகுகள் பொருந்தும் பாடல்கள் துறை மயக்கத்திற்கு இடனளிப்பதில்லை. காட்டாக, இற்செறிப்புத் துறையில் பொருந்தும் வெளியீட்டு அமைப்புகளில் ஒன்று இங்குக் குறிக்கத்தக்கது. பதினொரு பாடல்கள் பயிலும் இவ்வெளியீட்டமைப்பு,[6] தலைவனுக்குத் தோழி இற்செறிப்புச் செய்தியை நேரடியாக அறிவிக்கும் பாங்கு கொண்டது. இல்வயிற்செறித்தமை, கடிப்படுத்தல், காத்தல், காப்பு அயர்தல் முதலிய துறையைச் சுட்டும் தொடர்கள் இப்பாடல்களில் பொருந்துகின்றன. இவை பெறும் துறைக்குறிப்பில் ''இற்செறிப்பு அறிவுறீஇ'' என்ற துறைச் செய்தி மாறாது அமைகின்றது. பிற அலகுகள், பகற்குறி என்ற களன், வரைவுகடாதல் என்ற உட்கோள் ஒரோவழிப் பொருந்துகின்றன.

## 1.3. வழிநிலைத் துறைகள்

அகப்பொருளில் சில துறைகள் வழிநிலைத் துறைகளாக அமைவன. தொல்காப்பியர் வரைதல் வேட்கைப் பொருள வாகும் துறைகளைக் குறித்துப் பேசுகிறார்.[7] குறிஞ்சித் திணையின் தொடக்கக் களன்களாகிய இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியற்கூட்டத்தின் முதற் சில களன்கள் இவற்றில் பொருந்தும். தலைவன் கூற்றுக் களையும் வரைதல் வேட்கைப் பொருள்வாக அமையும் பகற்குறி, இரவுக்குறி, ஆற்றது ஏதம், இற்செறிப்பு முதலிய துறைகளில் அமையும் தலைவி, தோழி கூற்றுக்களையும் இங்கு நினைக்கலாம். இவற்றில் முன்னைய, தலைவியை அடையும் பயனையும் பின்னைய, வரைவு கூட்டும் பயனையும் எதிர் நோக்கியவை. முடிவுப் பொருளை நோக்க இவை வழிநிலைத் துறைகள்.

வழிநிலைத் துறைகளில் அமையும் பாடல்கள் தத்தம் துறைக்குரிய சிறப்புக் கூறுகளையும் முடிவுப்பயனை அவாவிய பொதுக் கூறுகளையும் ஒருங்கே பெற்று நிற்பதால் இவை துறை மயக்கத்திற்கு இடனாகின்றன. பாங்கன் (பாங்கற் கூட்டம்) தோழி (பின்னிலை) இவர்களை விளித்துரைக்கும் பாங்கு அவ்வத் துறைக்குரிய சிறப்புக்கூறு. அல்லகுறித் தலைவனின் உரைப் பாங்கு பெரிதும் நெஞ்சினைத் தன்னின் வேறாய் நிறுத்தி உரைப் பது. நெஞ்சிற்கு உரைப்பது என்ற உரைப்பாங்கு இத்துறைகளில் எல்லாம் பொதுவாக அமைகின்றது. பொருட்கூறின் பங்கீட்டி லும் இந்நிலை பொருந்துகிறது. தலைவி 'அடைதற்கரியள்' என்ற பொருட்கூறு, அல்லகுறியில் ஏற்புடையது; பயின்று வருவது. ஆயின் தலைவியின் எழில் நலமும் அது தலைவனை வயப்படுத்தியதும் அவனது காதல்நோயும் இத்துறைகளில் பொது வாக அமையும் பொருட்கூறுகள். பொதுக் கூறுகளின் ஆட்சி யால் இத்துறைப் பாடல்களில் (85) பத்து விழுக்காடு (9) துறை மயங்க நிற்கின்றது. அவை வருமாறு:

| பாடல் எண் | துறைக் குறிப்பு | இயற்கைப் புணர்ச்சி | கண்ணுற்று நீங்கல் | பாங்கற் கூட்டம் | அல்லகுறி | பின்னிலை |
|---|---|---|---|---|---|---|
| அகம் 120 | | | | | 2 | 3 |
| ,, 280 | | | 1 | | 2 | |
| ,, 390 | | | 2 | 1 | | |
| குறுந். 100 | | | | 1 | 2 | |
| ,, 120 | | 2 | | | 1 | |
| ,, 142 | | 1 | | | | 2 |
| ,, 286 | | | | 2 | | 1 |
| நற். 185 | | | | 1 | | 2 |
| ,, 190 | | | | | 2 | 1 |

இதன் முதல்துறை உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் கூற்று. இரண்டு மூன்று என்ற எண்கள், பாடலுக்கு வகுக்கப் பெற்றுள்ள இரண்டாம் மூன்றாம் துறைகளைக் குறிக்கும்.

வரைதல் வேட்கைப் பொருளவாக அமையும் பாடல்களில் இருதுறை இயையும்போது ஒரு துறை வழிநிலைத் துறையாகவும் மற்றொரு துறை முடிப்புத் துறையாகவும் அமையலாம்.

(எடுத்துக் காட்டு)

நற். 267 1. தோழி காப்பு கைம்மிக்குக் காமம் பெருகிய காலத்துச் சிறைப்புறமாகச் சொல்லியது.

2. வரைவு கடாயது.

நற். 172 1. பகற்குறி வந்த தலைமகனைத் தோழிவரைவு கடாயது.

2. குறிபெயர்த்தீடுமாம்.

1.4. தோழி தலைவி இவர்தம் கிழமை

தலைவியின் உணர்வைத் தன் உணர்வுபோல வெளியிடும் உரிமையை அகப்பொருள் இலக்கணம் தோழிக்கு வழங்கியுள்ளது[8]. இக்கிழமையே ஒரு பாடலைத் தோழி கூற்று என்றும் அதே பாடலை அக்களனிலோ பிறிதொரு களனிலோ அமையும் தலைவி கூற்று எனவும் குறிக்கும் நிலையை உருவாக்குகின்றது. தோழியின் மொழியைத் தலைவியதாகவும் தலைவியின் மொழியைத் தோழியதாகவும் கொள்ளும் பாங்கு, குறிஞ்சியில் அமையும் சிறைப்புறக்கூற்றில் பயில்கிறது[9]. பாலைத் திணையில் அமையும் வன்புறை எதிர்அழிதல், பிரிவுக்குறிப்பு உணர்தல், ஆற்றாமை என்ற நிலைகளில் பொருந்தும் தலைவி கூற்றும் மயக்கத்திற்கு இடனாக அமைகின்றது. இவற்றிற்கு மாற்றுத் துறையாக அமையும் தோழிகூற்று, சில பாடல்களில் தலைவி கூற்றிற்கு இணையான உணர்வு நிலையைப் புலப்படுத்தலாம் அல்லது நேர் எதிரான உணர்வினையும் வெளியிடலாம்.

காட்டு அகம் 293

1. பிரிவுக்குறிப்பு உணர்தல்—தலைவி

2. பிரிவுக் குறிப்பு உணர்த்தல்—தோழி

குறு. 130 1. ஆற்றுவித்தது — தோழி

2. ஆற்றாமை — தலைவி

1.5. மொழிப் பாங்கில் எழும் சிக்கல்கள்

ஒரு மொழியில் அமையும் கூற்று (Utterance) மொழிக் கூறுகளில் நின்று உருவாகும் பொருளோடு வரையறை பெற்று விடுவதில்லை. கூறுவோன் குறிப்பு, கூறும் சூழல், கேட்போன்

நிலை இவற்றிற்கு ஏற்ப வெவ்வேறு நிலையில் பொருள்படலாம் அல்லது பல்வேறு பொருள் எஞ்சுமாறு அமையலாம். இம்மொழிப் பாங்கு, கவிதையில் செறிவுற்று அமைகின்றது. எச்சப்பொருள் தொல்காப்பியரால் செய்யுள் உறுப்பாகக் கொள்ளப் பெற்றுள்ளது நினைக்கத்தக்கது[10]. நேர் எதிர் நிலைத் துறைகள் இரண்டினை ஒரு பாடல் பெற்று அமைவதற்குரிய அடிப்படை இதுவே.

எடுத்துக்காட்டு.

குறு. 258 1. வாயில் மறுத்தது
2. வாயில் நேர்ந்தது

அகம். 13 1. செலவு அழுங்குவித்தது 2
நற். 229
2. உடன்பட்டது 2

குறுந்தொகை 138-ஆம் பாடல், மொழிக்குரிய பொருள் எஞ்சும் பண்பு எவ்வாறு துறைச் சிக்கலுக்கு அடிப்படையாகிறது என்பதற்குத் தக்க சான்றாகப் பொருந்துகின்றது. இப்பாடலுக்கு அமையும் இரு துறைகளில் 1. குறி பிழைத்த தலைமகன் பிற்றை ஞான்று இரவுக்குறி வந்துழி, தோழி சிறைப்புறமாகக் கூறியது. 2. இரவுக் குறி நேர்ந்தது. தலைவன் குறி பிழைத்தமைக்குத் தங்கள் தவறு காரணமன்று என்பதைச் சுட்டுவது தோழியின் உட்கோளாக அமையும்போது முதல்துறையும் இரவில் தலைவன் தலைவியைச் சந்திக்கலாம் என்பதைக் குறிப்பதாயின் இரண்டாம் துறையும் பொருந்தும்[11] இவை, ''கொன், ஊர் துஞ்சினும் யாம் துஞ்சலமே....நொச்சி.....கொம்பு உழைத்த...பூவின் பாடு நனி கேட்டே''[12] என்ற தொடர்ப் பொருளில் எஞ்சி நிற்கும்பொருள் நிலைகள். குறுந்தொகை முதற் பாடலைக் கூற்றெச்சமாகக் கொண்டு தோழி கையுறை மறுத்தது என்ற துறையையும், குறிப்பெச்சமாகக் கொண்டு இடத்துய்த்து நீங்கும் தோழியின் கிளவியையும் கொள்ளும் பேராசிரியர் கருத்தும்[13] இவண் நினைக்கத் தக்கது. எஞ்சுபொருட்கிளவி துறைச் சிக்கலில் குறிப்பிடத்தக்க பங்கு வகிக்கின்றது.

1.6.0. பயின்று வரும் தொடரமைப்பு வெளியீட்டு முறை, பொருட்கூறு, உத்திகள், உரைப்பாங்கு.

1.6.1. துறை வரையறைக்குப் பயன்படலாகும் இக்கூறுகள் ஒரு துறையின் எல்லையைக் கடந்து பயிலும்போது

மயக்கத்திற்கு இடனாகலாம். வினை முற்றி மீண்டுவரும் தலைவன் கூற்றில் பயின்று அமையும் வெளியீடுகளில் ஒன்று தலைவியது ஊரின் இடம் சுட்டும் பாங்கினது.[14] இந்த வெளியீட்டில் தலைவியது ஊர் (இன்ன) இடத்தது (புறவினதுவே...அரிவை ஊரே அகம். 284) என்ற தொடரமைப்பு மாறாது பொருந்துவது. இத்தொடரமைப்புப் பெரிதும் மேற்சுட்டிய துறையிலேயே பயில்வது எனினும் வேறு சில துறைகளிலும் அமையாமல் இல்லை.. கொடிச்சியது (குறிஞ்சி) ஊர் சுட்டும் பாங்கு குறிஞ்சித்திணையில் அமையும் சில பாடல்களில் அமைகின்றது[15] இற்செறிப்புத் துறையில் அமைக்கப் பெற்றுள்ள குறு. 335-ஆம் பாடலிலும், தலைவன் பாங்கனுக்கு இயலிடம் உரைத்தது என்ற துறை பெற்றுள்ள நற்.95ஆம் பாடலிலும் இதே தொடரமைப்பு இயல்கின்றது. எனவே இத்தொடரமைப்புப் பெற்ற அகம். 94-ஆம் பாடற்குமுல்லைத் திணையின் வரையறையில் பொருந்திய வினை முற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது என்ற (முதல்) துறையுடன் தலைமகன் பாங்கற்குச் சொற்றதுமாம் என்ற இரண்டாம் துறையையும் அமைக்கும் வாய்ப்புப் பொருந்தி விடுகின்றது.

1.6.2. அகப்பாடலின் இழையில் பொருந்தும் பொருட்கூறுகள் பொது நிலையில் பின்புல வருணனையைச் சார்ந்தவை, அகமாந்தரை சிறப்பாகத் தலைவன் தலைவியரையும் பிற மாந்தரையும் சுட்டி நிறைபவை, அலர், வெறி என்றின்ன அகப்பொருட் செய்திகளைக் குறித்தமைபவை என வகை பெற்றுவிடும். இவை பாடல்களில் கூறும் செய்திக்கேற்ற கோலம் பூண்டு நிற்கும். எனவே ஒவ்வொரு பொருட்கூறுகளும் பல உட்கூறுகள் பெற்றுத் துறைக்கேற்ற சாயல்பெற்றுத் திகழ்கின்றன.[16] ஒரு துறைக்கெனப் பெரிதும் வரையறை பெற்ற பொருட் கூறு ஒன்று, பிறிதொரு துறையில் இடம் பெறும்போது அல்லது ஒரே பொருட் கூறு இருவேறு துறையில் அமையும்போது துறைமயக்கத்திற்கு இடனமைகின்றது. பொருட்கூறுகளை நுட்பமாக வகை செய்து இனங்காணும்போது துறைபற்றிய தெளிவு பெரிதும் அமைந்துவிடும்.

1.6.3. நற். 324-ஆம் பாடலுக்கு (1) தலைமகன் பாங்கற்குச் சொல்லியது (குறிஞ்சி) (2) இடைச் சுரத்துக் கண்டார் கூறியது (பாலை) என இருதிணைப்பாற்படும் துறைகளை வழங்குவதற்கு, இப்பாடலில் அமையும் அன்னை பற்றிய கூறே காரண

மாகின்றது.[17] இதை ஒத்தே நற். 167-ஆம் பாடலில் அமையும் பாணனைப் பற்றிய குறிப்பு[18] (1) பாணற்கு வாயில் நேர்ந்தது (மருதம்) (2) தூதொடு வந்த பாணனுக்குச் சொல்லியது (முல்லை) என்ற இரு முறைஅமைப்பிற்குக் காரணமாகின்றது. தலைவன் செல்லும் தோற்றத்தை வருணிக்கும்கூறு (வருணனைக் கூறு) குறிஞ்சியில் குறைநயப்பக்கூறும் தோழி கூற்றில் பயிலும் ஒரு கூறு.[19] வினை முற்றி மீண்டு வரும் தலைவனின் செலவை உரைக்கும் பாங்கு முல்லையில் அமையும்.[20] இப் பொருட்கூறின் பயிற்சியே முல்லைத் திணையில் அமைந்த நற். 394-ஆம் பாடலுக்குத் திணைக்கேற்ப ''வினைமுற்றி மறுத்தராநின்ற தலைமகனை இடைச்சுரத்துக் கண்டார் சொல்லியது'' என்ற துறையை முதலில் வழங்கி அடுத்த நிலையில் ''வன் சொல்லாற் குறை நயப்பித்த தோழி தந்தளித்ததுமாம்'' என்ற துறையை வழங்கச் செய்துள்ளது.

1.6.4. தலைவன் தன்னெஞ்சை விளித்துரைக்கும் பாங்கில் அதனைத் தன்னின் வேறாய் நிறுத்தி உரைக்கும் பாங்கு சில துறைகளில் பயில்கின்றது. பாலைத்தலைவனின் செலவழுங்கும் கூற்றிலும் இடைச்சுரக் கூற்றிலும் குறிஞ்சித் தலைவனின் அல்லகுறிக் கூற்றிலும் இது பயில்வது. பின்னிலைத் தலைவன் கூற்றில் இது அருகியது.[21] இவ்வுரைப் பாங்கு அமையும் நற். 190-ஆம் பாடல் மூன்று துறை பெறுகின்றது. 1. பின்னின்ற தலைமகன் ஆற்றானாகி நெஞ்சிற்குச் சொல்லியது. 2. அல்லகுறிப்பட்டு மீள்வான் நெஞ்சிற்குச் சொல்லியது. 3. இடைச் சுரத்துச் சென்று தலைமகள் நலம் உள்ளி மீளலுற்ற நெஞ்சினைக் கழறியது.

இப்பாடலுக்கு வகுக்கப் பெற்ற மூன்று துறைகளிலும் இவ்வுரைப்பாங்கு பயிலும் திறமே இந்நிலையை உருவாக்கியுள்ளது.

1.6.5. பழையதொரு நிகழ்வைத் தலைவன் நினைத்து இரங்குதல் பல துறைகளிலும் இயலும் ஓர் உத்தி. குறிஞ்சித் தலைவனின் நினைவில் தலைவியோடு தொடர்புடைய களவுச் செய்தி நிழலிடுதலும் மருதத்தலைவன் மனம் கற்புக்கால நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்தலும் பாடலில் பொருந்தும் பாங்கு[22] பராயனாரின் நற். 155-ஆம் பாடலில் இவ்வுத்தி பொருந்துகிறது. இப்பாடல் இருதுறை பெறுகின்றது. 1. தலைவியை எதிர்ப்பட்ட தலைவன் நெஞ்சிற்கு உரைத்தது. 2.

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் கூறியது. பாட்லில் சுட்டப் பெறும் நிகழ்ச்சி களவுச் செய்தியாகையால் முதல்துறையே இரு துறையிலும் ஏற்புடைத்து எனக் கூறலாம். எனினும் இவ்வுத்தியின் பயிற்சியே இவ்விருதுறையையும் பாடலுக்கு அளிக்கக் காரணமாயிற்று என்பது தெளிவு.

குறைநயப்புத் தோழி கூற்றும் அறத்தொடு நிற்கும் தோழி கூற்றும் மாற்றுத் துறைகளாவதற்குரிய அடிப்படையும் இதுவே.[25]

## 1.7.0. துறைக்குறிப்பின் அமைப்பு

ஒரு பாடலுக்கு இருதுறை வழங்கும் பாங்கில் பொருந்திய பிறிதொரு சிக்கல் துறைக்குறிப்பின் தன்மையில் இயன்றது. சங்கப் பாடல்களுக்கு வழங்கப் பெற்றுள்ள துறைக்குறிப்புக்கள் பாடல் எழுந்த காலத்திற்குப் பின் தோன்றியவை. இவை ''தொகுத்தவராலேயேனும் பிற்காலத்தாராலேனும் அமைக்கப் பட்டிருத்தல் வேண்டும்''[24] என்று கருதப்படுகின்றன.

1.7.1. அகப்பாட்டு செறிவமைப்புப் பெற்றது. இந்தச் செறிவமைப்புக் குறித்த உணர்வு துறை வகுத்தோர் கருத்தில் அமைந்துள்ளது. ஒரு பொருட் கூறின் அடியாக, ஒரு குறிப்பிட்ட செய்தி, வெளியிடப் பெறும் வரையறை பெற்ற பாடல்களுக்குரிய துறைக்குறிப்புக்களை வைத்து இதனை விளக்கலாம்.

'புனமடிவு' என்ற பொருட் கூறைச் சங்கப் பாடல்கள் இற்செறிப்பு அறிவுறுத்தும் செய்தியை வழங்க நேர்முகமாகவோ சிறைப்புறமாகவோ வழங்குகின்றன. இப்பாடல்களுக்கு வழங்கப் பெற்றுள்ள துறைக் குறிப்புக்களில் கூறுவோன் (1) கேட்போர் (2) களன் (3) பொருட் கூறு (4) செய்தி (5) உட்கோள் (6) உரைப் பாங்கு (7) என்ற துறை அலகுகள் பொருந்தியுள்ளன.

1.7.2. இத்துறையின் அமைந்த பதினொரு பாடல்களில் எல்லா அலகுகளையும் பெற்ற துறைக்குறிப்பு ஐங். 260-ஆம் பாடலின் கீழ் அமையும் குறிப்பே. இக்குறிப்பு பகற்குறிக்கண் (களன்) வந்த தலைமகனை (கேட்போன்) தோழி (கூறுவோன்) இனிப் புனங்காவதற்கு வாரோம் (பொருட்கூறு, செய்தி) என்று கூறி (உரைப்பாங்கு) வரைவுகடாயது (பயன் அல்லது உட்கோள்) என அமைகின்றது. நற்றிணை 373-ஆம் பாடலின் துறைக்

குறிப்பு செறிப்பு அறிவுறீஇயது எனச் செய்தியை மட்டுமே வழங்கி நிற்கின்றது.[25] இத்துறைப் பாடலில் துறை அலகுகள் பொருந்தும் நிலை கீழ்வருமாறு:

| பாடல் எண் | ஐங் 260 | ஐங் 284 | நற் 57 | நற் 60 | நற் 194 | நற் 251 | நற் 259 | நற் 306 | நற் 313 | நற் 373 | நற் 376 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| துறை அலகுகள் 1. கூறுவோன் | √ | | | √ | | | | | √ | | √ |
| 2. கேட்போன் | √ | √ | | √ | | | √ | | | | √ |
| 3. களன் | √ | | | | | | | | | | |
| 4. பொருட்கூறு | √ | √ | | | | | | √ | √ | | |
| 5. செய்தி | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ | √ |
| 6. உட்கோள் (பயன்) | √ | | √ | | | | √ | | | | |
| 7. உரைப்பாங்கு | √ | √ | | √ | √ | √ | | √ | √ | | √ |

துறைக் குறிப்பில், துறை அலகுகளைக் குறிப்பதில் அமையும் இவ்வேறுபாடு துறை வரையறையில் சிக்கல் விளைவிக்கும் இடங்கள் அமைகின்றன. அகம் 286, வாயில் மறுத்தது என்ற முதல்துறையையும் தலைமகள் தகுதி சொல்லியது என்ற இரண்டாம் துறையையும் பெற்று அமைகின்றது. இவற்றை ஒரு துறையின் அலகுகளாகவே கொண்டு இரு துறைக் குறிப்புகளையும் இணைத்துத் தலைமகள் தகுதி கூறி (பொருட்கூறு) வாயில் மறுத்தது (பயன்) எனக் கொள்ள இயலும். பல பாடல்களுக்குச் சிறைப்புறம் (உரைப்பாங்கு என்ற அலகு) என்ற குறிப்பு மட்டும் அமைகிறது.[26] சிலவற்றில் இதனோடு கூறுவோன், கேட்போன் குறித்த விவரமும் அமைகின்றது. சிறைப்புறமாக உணர்த்தப்பட்ட செய்தி யாது? என்ன கூறு வாயிலாக என்ன

பயன் கருதிக் கூற்று அமைந்தது என்பது குறித்த விவரம் குறிப்பில் அமைவதில்லை. இந்நிலையில் வரைதல் வேட்கைப் பொருளவாகும் பாடல்களில் அமையும் இருதுறைக் குறிப்புக்கள் ஒரு துறையுள் அடக்கத்தக்கன.

2.0. துறைச் சிக்கலுக்குக் காரணமாக அமையும் இக் காரணிகளைக் குறித்த தெளிவு துறையைத்தெளிவாக உணர்ந்து கொள்ளத் துணை நிற்பது. துறை வகுத்தோரின் குறிப்புக்கள் சிலவற்றை இத்தெளிவின் அடிப்படையில் மறுத்துவிடக் கூடும். வேறு சிலவற்றின் அடிப்படைகளைத் தெளிவாகப் புரிந்து கொள்ள இயலும். எதிலும் சில அடிப்படையான வினாக்கள் கருதத் தக்கன.

2.1 பாடலின் தொடரமைப்பு கூறப் பெற்றுள்ள துறைக்கு இயைபுடையதாக அமைகின்றதா?

2.2. பாடலில் பொருந்தியுள்ள பொருட்கூறுகள் அனைத்தையும் முரண்பாடின்றிப் பொருத்தும் நிலையில் துறை அமைகின்றதா? துறைவகுத்தோர் வழங்கும் துறைகளில் பொருத்தும் போது சில பாடல்களில் இச்சிக்கல் எழுகிறது. இப்பாடலின் கவிதை நயத்தை முழுமையாக வழங்கத் துணைசெய்யும் துறையே அதன் துறை. இரு துறை அல்லது அதற்கதிகமான துறைகளுக்கு ஒரு பாடல் முழுநிலையில் நயம் சிதையாது பொருந்துமாயின் அது அதன் திறன்.

**பிற்குறிப்பு :**

1. சங்க இலக்கியத்தில் ஒரு திணைப் பின்புலத்தில் பிறிதொரு திணையின் உரிப்பொருள் விரவும் பாங்கினை மருத உரிப்பொருள் பிற திணைப் பின்புலத்தில் படைக்கப் பெற்றுள்ள நிலைமையைச் சுட்டி விளக்கலாம்.

   நெய்தல் பின்புலத்தில் மருதம் 40 பாடல்கள்.
   குறிஞ்சிப் பின்புலத்தில் மருதம் 6 பாடல்கள்.
   பாலைப் பின்புலத்தில் மருதம் 3 பாடல்கள்.

2. அகம். 223
3. அகம். 183
4. தலைவி— ஐங். 202, 206

தோழி— ஐங். 201. 203
செவிலி— ஐங். 205

5. புணர்குறி— அகம் 118: 12: வெறி-அகம் 98:19
அலர்— குறு 311: 1; செறித்தல்-நற். 258:2
காப்பு— நற். 253:9 புலவி-குறு. 93:4
6. அகம். 20, 60, 90, 150 ஐங். 115, 186, குறு. 294, நற். 63, 253, 258, 295
7. தொல். பொருள், இளம். 207
8. தொல். பொருள். இளம். 217
9. அகம் 72,98, 122, 282, நற். 261
10. தொல். பொருள். இளம் 507.
11. குறு. 138 வி. உரை (டாக்டர் உ. வே. சாமிநாதையர்)
12. கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே.
எம்மி லயல தேழி லும்பர்
மயிலடி யிலைய மாக்குர னொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே (குறு.138)
13. தொல். பொருள். பேரா. 518
14. அகம் 94, 274, 284, ஐங்.94, குறு.233, நற்.59, 142
15. குறு. 335, நற். 95
16. இருதிணைப்பாற்பட்ட இருவேறு துறைகளில் அமையும் தலைவன் கூற்றில் பொருந்தும் தலைவி பற்றிய பொருட்கூறுகளை எடுத்துரைத்து இக்கருத்தை விளக்கலாம்.

**இடைச்சுரக் கூற்று** (பாலை)
தலைவியின் எழில், அவள் தலைவனுக்கு விடை கொடுத்த நிலை, பிரிவில் அவள் துயர், அவள் பண்பு.
**மீண்டு வரும் தலைவன் கூற்று** (முல்லை)
தலைவியின் அன்பு, கற்பு, விருந்தோம்பல் பண்பு, ஆற்றியிருக்கும் மாண்பு, புதல்வனோடு விளையாடித் துயரை மறக்கும்நிலை, அவளது பிரிவுத்துயர், தலைவன் வரவால் அவள் பெறும் மகிழ்வு.

17. .....அளியள் தாயே
நொந்து அழி அவலமொடு என் ஆகுவள் கொல்
.................தன் மகள் நயந்தோள்........
பஞ்சி மெல்அடி நடை பயிற்றும்மே -நற். 324

18. தண்ணம் துறைவன் தூதொடும் வந்த
பயன்தெரி பனுவற் பைதீர் பாண
நின்வாய்ப் பணிமொழி களையா — நற். 167: 5—7
19. அகம். 330
20. அகம். 324
21. அல்லகுறி—அகம் 212, 258, 322, 372
இடைச்சுரக் கூற்று—அகம் 21,33, 47,79
செலவு அழுங்குதல்—அகம் 3, 131, 191
பின்னிலை—குறு. 165, நற். 190
22. மருதம் அகம் 86, 136 நற். 370
23. நற். 126
24. குறுந்தொகை முன்னுரை—டாக்டர் உ. வே. சாமி நாதையர் (பதி.)
25. பின்னிணைவு 1 பார்க்க
26. நற் 322, 339.

குறிப்பு : இக்கட்டுரையை உருவாக்கும் காலத்தில் பல்லாற்றான் எனக்கு உதவிய டாக்டர் கி. நாச்சிமுத்து, ரீடர், தமிழ்த்துறை கேரளப் பல்கலைக்கழகம் அவர்கட்கும் துறை ஆய்வாளர்களான செல்வி இந்திரா மானுவேல், செல்வி பகவதி காளிமுத்து, செல்வி பிரபாவதி பிரின் சில்லா சிநேகபாய், திருமதி மா. பிரேமா ஆகியோருக்கும் எனது நன்றி.

**பின்னிணைவு 1**

| பாடல் | புனமடிவு உரைத்தது | துறைக் குறிப்பு |
|---|---|---|
| ஐங். 260 | பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி 'இனிப் புனங்காவற்கு வாரோம்' எனக் கூறி வரைவு கடாயது. | |
| ஐங். 284 | தினை அரிந்துழி, கிளியை நோக்கிக் கூறுவாள் போல், சிறைப்புறமாக ஓம்படுத்தது. | |
| நற். 57 | செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது. | |
| 60 | சிறைப்புறமாக உழவர்க்குச் சொல்லுவாளாகத் தோழி செறிப்பு அறிவுறீஇயது. | |
| 194 | சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறீஇயது. | |

| பாடல் | துறைக்குறிப்பு |
| --- | --- |
| 251 | சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறீஇயது. |
| 259 | தோழி தலைமகளைச் செறிப்பு அறிவுறீஇ, வரைவு கடாயது. |
| 306 | தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லு வாளாய், புனம் அழிவு உரைத்தது; செறிப்பு அறிவுறீ இயது. |
| 373 | செறிப்பு அறிவுறீஇயது. |
| 376 | தோழி கிளிமேல் வைத்துச் சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறீஇயது. |

**துணை நூல்கள் :**


1. சாமிநாதையர், டாக்டர் உ. வே. — (பதி.) குறுந்தொகை, சென்னை 1955

2. தொல்காப்பியர், தொல்காப்பியம் — தி. தெ. சை. சி. கழகம், சென்னை 1967

3. வையாபுரிப் பிள்ளை, பேராசிரியர் எஸ், — (பதி) சங்க இலக்கியம் பாட்டும் தொகையும் (இரு பகுதிகள் பாரி நிலையம், சென்னை 1967.


## கலந்துரையாடல்

**வேங்கடராமையா :**

புரவு, குடிப்புரவு என்னும் இரண்டும் குடிமக்கள் கொடுக்கும் சாதாரண வரியேயாகும். அதனைப் பணமாகவும் கொடுத்தனர் என ஆய்வாளர் சிலர் கூறுவர். புரவுவரித் 'திணைக் களத்தார் என்னும் அலுவலர் குடிமக்களிடமிருந்து வரிபெற்று வந்தனர். திணைக்கள நாயகம் என்பவர் வரி வசூலிப்பவர்களுக்கெல்

லாம் தலைவராவர். புரவு என்பதனைப் பொதுவாக வரி என்றும், பணமாகப் பெறுவதென்றும் கொள்ளலாம்.

குடிமை என்பது குடிமக்கள் தரும் நிலவரியாகும். அரசன் நினைத்தபடி வரிவாங்குதல் கூடாது. வாங்கினால் யானைபுக்க நிலம்போலக் கேடுறுவான். 'பழஞ்செய்க் கடன்' என்பது மழை பெய்யாததால் பஞ்சம் ஏற்பட்டபொழுது, கட்ட முடியாத பழைய பாக்கியாகிய நிலவரி என்றுதான் பொருள்படும். அதனைத் தான் வெள்ளைக்குடி நாகனார் விலக்களிக்க வேண்டினார்; நிலவரியில்லாத வேறு கடனையன்று.

**அ. கிருட்டிணசாமி :**

ஏழைகளிடமிருந்தும் செல்வர்களிடமிருந்தும் பெறுகின்ற பணம் (Benevolence) இரவு ஆகலாம். புரவு வரித் திணைக் களம் என்பது வருவாய் வாரித்தைக் (Revenue Board) குறிக்கும். உறுபொருள் உடைமை வரி, சாவு வரி (Wealth tax, Death tax) முதலியன.

**சண்முக சுப்பிரமணியன் :**

இறை என்பது கடமை. அது Tax என்பதற்கு மறுதலையாயது; அரசாங்கம் தேவைக்கு வாங்குவது Fees. புரவு, ஆயம் என்பன fees என்பதற்குச் சமம் என்னலாம்.

**தமிழண்ணல் :**

ஒரு பாடலுக்குத் திணை வகுப்பதிலும் துறை வகுப்பதே கடினம். ஒரு துறைக்கு மேல் பல துறைகள் காணப்படும் பாடலுக்கு உரிய துறையைத் துணியப் பாடலில் தலைமை, துணைமை பின்னணி என்னும் மூன்றனையும் கருத்திற்கொள்ள வேண்டும். அதிலும் சிறப்பாகப் பின்னணியைக் கொண்டே ஒரு பாடலுக்குத் துறை கூறி விடலாம். அதில் குழப்பம் வரின் தலைமை, துணைமைக் கருத்துக்களைக் கொண்டு துறையைக் கணிக்கலாம்.

**க. இரத்தினம் :**

அகத்திணைப் பாடல்களுக்குத் துறை வகுக்கும்போது, உரையாசிரியர்கள் மேற்கோள் காட்டிய பாடலுக்கு அவர்கள் கூறிய துறையையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

'நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோ? நம் காதலோரே''

(குறுந்தொகை, 130)

இக்குறுந்தொகைப் பாட்டைச் செவிலித்தாய் கூற்றாக நச்சி னார்க்கினியர் தம் உரை மேற்கோளில் கூறுவர். இதுபோலத் துறை வேறுபடும் இடங்களையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

**தமிழண்ணல் :**

காதலோரே என்று தலைவனைச் செவிலி குறிப்பிடுவது மரபில்லை. ஆதலால் ஏனையோர் கொண்டது போலத் தலைவி கூற்றாகவோ தோழி கூற்றாகவோ அமைக்கும் துறை தான் பொருந்துமே அன்றி நச்சினார்க்கினியர் கொள்வதுபோலச் செவிலித் தாய் கூற்றாகக் கோடல் பொருந்தாது. உரையாசிரி யர் கூறும் துறைகளை ஏற்குமுன் அகத்திணை மரபுகளையும் நோக்குதல் வேண்டும்.

**சு. வெள்ளைவாரணனார் :**

உரையாசிரியர் போக்கு அறிந்தும், அகத்திணை புறத் திணை மரபுகள் அறிந்தும் துறை அமைக்க வேண்டும். சில நூல்கள் திணை அமைப்புப்படி அமைக்கப்பட்டுள்ளன. முதல் கரு உரிப் பொருள்களைக் கொண்டு திணை அமைப்பதும் உண்டு. சிலர் முதற் பொருள் கொண்டும் சிலர் கருப்பொருள் நோக்கியும், சிலர் உரிப்பொருள் கருதியும் திணை வகுப்பர். உரையாசிரியர்கள் திணை அமைக்கும்போது, இது நிலத்தாற் பாலை என்றும் சுட்டுவர். இது முதற்பொருள் கருதியதாகும். இதுபோலவே, கரு உரிப்பொருள்களைக் கொண்டும் திணை அமைப்பதும் உண்டு.

**மாதையன் :**

> புறநானூறு 92-ஆம் பாடல்
> ''யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
> .... .... .... .... .... .... .... .... ....
> நெடுமா னஞ்சி நீ அருளன் மாறே''

என்பது நெடுமானஞ்சியின் இயல்பு கூறுதலின் இயன்மொழி என்னும் துறை வகுக்கப்பட்டுள்ளது. ஆனால் அதேபோல், நெடுமானஞ்சியின் இயல்பு கூறும் 315-ஆம் பாடல் வல்லாண் முல்லை எனத் துறை வகுக்கப் பெற்றிருப்பது ஏன்?

**குளோரியா சுந்தரமதி :**

வல்லாண் முல்லைத்துறையில் பெரும்பாலும் பெயர் சுட்டப் பெறாது. ஆனால் 315-இல் நெடுமானஞ்சி எனப் பெயர்

சுட்டப்பட்டுள்ளது. இதனைப் புறநடையாகக் கொள்ள வேண்டும். வல்லாண்முல்லை வறுமைக்களத்தைப் பின்னணியாகக் கொண்டு, வீரத்தைப் புலப்படுத்துமாதலின், இயன்மொழி வாழ்த்திலிருந்தும் வேறுபடும்.

**வ. அய். சுப்பிரமணியனார் :**

துறை அலகுகளைக் கட்டமிட்டு ஆய்வு செய்து இருப்பது Communication Model க்குப் பொருந்தவில்லை. ஐங்குறுநூறு 260-ஆம் பாடலில் எல்லாத் துறை அலகுகளும் இருப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது. நற்றிணை 373-இல் துறை அலகுகளுள் செய்தி ஒன்று மட்டும்தான் குறிக்கப்பட்டுள்ளது. துறை அலகுகளாகிய ஏழும் இருந்தால்தான் துறை வகுக்க இயலும். ஆகவே, இதனை வேறுமுறையில் ஆராய வேண்டும்.

**முடிவுரை :**

சங்கப் பாடல்களுக்குத் திணை கூறுவதிலும் துறை கூறுவது அருமைப்பாடு உடையது. இஃது எல்லாப் பாடல்களுக்கும் பொருந்தாது. சில பாடல்களுக்குப் பாடலைப் பார்த்த அளவிலேயே துறை கூறி விடலாம். காரணம் துறைக்கு ஏற்பச் சில குறியீட்டுச் சொற்கள் அதில் அமைந்திருக்கும். சில பாடல்களில் துறைக்கு ஏற்ற செய்திகள் முழுவதும் அமைந்திருக்கும்.

> ''வில்லோன் காலன கழலே; தொடியோள்
> மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்
> யார் கொல்? அளியர் தாமே
> .... .... .... .... .... .... .... .... .... ....
> வேய் பயில் அழுவம் முன்னியோரே''
>
> (குறுந்தொகை, 7)

இப்பாடலைப் பார்த்ததும் உடன்போக்கினைக் கண்டவர் கூற்று எனக் கூறி விடலாம்.

> இனைமதி வாழியர் நெஞ்சே; மனைமரத்து
> எல்லுறும் மௌவல் நாறும்
> பல் இருங்கூந்தல் யாரளோ நமக்கே?
>
> (குறுந்தொகை, 19)

இதனையும் தலைமகன் நெஞ்சிற்குக் கூறியதாகக் கூறிவிடலாம். ஆனால்,

'செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த'

என்னும் குறுந்தொகை முதற்பாடல் பலதுறை அமைப்பதற்கு இடமாக உள்ளது. இதனைத் தோழி கையுறை மறுத்ததாகவும், தோழி குறியிடத்து உய்த்தலாகவும் துறை அமைத்துள்ளனர். ஒரு துறை மட்டும் கூறுவதற்கு ஏற்ற சூழல் இப்பாட்டில் இல்லை. அதனால்தான் சில பாடல்களுக்கு இரண்டு மூன்று துறைகள் அமைந்து விடுகின்றன. நெஞ்சிற்குத் தலைவன் கூறியது என்ற அளவில் துறை கூறுதற்கு இடமிருப்பினும் எந்தச் சூழலில் நெஞ்சிற்குக் கூறினான் என்று பார்க்கும் பொழுது விளக்கத்தில் வேறுபாடுகள் காணப்படும். ஆகவே, துறை அமைப்பதற்கு யார் கூற்று, யாரிடம் கூறியது, அப்பாடலில் அமைந்த பின்னணி யாது, அகத்திணை மரபுகள் யாவை முதலிய முறைகளைப் பின் பற்றித் தான் துறை அமைக்க வேண்டும்.

— — — —

# ஐந்தாம் அமர்வு

## தலைவர் : நா. பாலுசாமி

### முன்னுரை

சங்க இலக்கியம் சமயத்திற்கு அப்பாற்பட்டது என்ற கருத்து ஒரு காலத்தே சிலரிடை நிலவியது. அக்கருத்து இப்பொழுது மாறிச் சங்க இலக்கியமும் சமயம் பற்றிய செய்திகளைத் தரு கின்றது என்பதனை எல்லோரும் ஏற்கத் தொடங்கிவிட்டனர். சமயமும் இலக்கியமும் பிரிக்க முடியாதபடி ஒன்றிப் பிணைந் தவை. தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோவடிகள் முதலியவர்கள் தமக்கென இறைமைக் கொள்கைகள் உடைய ராயினும், அவற்றைத் தம் படைப்புக்களில் காட்டிக் கொள்ள வில்லை. தொல்காப்பியர் காலத்தில் மாயோன், சேயோன், வருணன், இந்திரன் ஆகியவை நிலத் தெய்வங்களாக இருந்து பின்னர் நிலங்கடந்த தெய்வமாய் அனைவரும் ஏத்தியிறைஞ்சும் நிலைபெற்றன. சங்க இலக்கியத்தில் சில தனிப் பாடல்களின் அடிகள், பரிபாடல்களில் சில பாக்கள் சங்க காலத்திய கடவு ளர்கள், இறைமைக் கொள்கைகள், வாழ்க்கை நெறிகள் முதலிய வற்றை அறியத் துணை செய்கின்றன. சமயங்களை அறியச் சங்க இலக்கியங்கள் உதவுவது போலவே, வரலாறுகளைப் பற்றி அறியவும் அவை உறுதுணையாகின்றன.

# 9. சங்க இலக்கியத்தில் சமய நோக்கு

க. வெள்ளைவாரணன்

ஒத்த அன்பினராகியஆடவரும் மகளிரும் நல்லூழின் தூண்டு தலால் ஒருவரையொருவர் எதிர்ப்பட்ட முதற்காட்சியிலேயே உயிரோரன்ன செயிர்தீர் நட்பினராகி உலகத்தார் அறிய மணந்து வாழும் அகத்திணையொழுகலாறாகிய குடும்ப வாழ்வு குறித்தும், பல்லாயிரங் குடும்பங்கள் தம்முட் பகையின்றி அன்பும் அறமும் வளர ஒத்து வாழ்தற்கு இன்றியமையாத அரணாக அமைந்த அரசியல் சமுதாய அமைப்புக்களாகிய புறத்திணை வாழ்வு குறித்தும் விரித்துரைக்கும் வாழ்வியல் இலக்கியங்களாகத் திகழ்வன பத்துப் பாட்டு எட்டுத்தொகையென வழங்கும் சங்க இலக்கியங் களாகும். அகம் புறம் என இருவகைப்படுத்துமுன்னைத் தமிழ்ச் சான்றோர் வகுத்துணர்த்திய வாழ்க்கை நெறி முறைகளை வரம் பாகக் கொண்டு இற்றைக்கு ஆயிரத் தெண்ணூறாண்டுகட்குமுன் பாடப் பெற்ற சங்கச் செய்யுட்களிலே பண்டைத் தமிழ் மக்களது வாழ்வியல் நம்பிக்கைகளும் அவற்றின் பயனாக அவர்கள் மேற் கொண்டொழுகிய தெய்வ வழிபாட்டு முறைகளும் தத்துவ வுண்மைகளும் அவர்தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளிற் பிரிவின்றிக் கலந்துள்ளன. சங்க காலத் தமிழர் கொண்ட தெய்வக்கொள்கை யினையும் தத்துவவுண்மைகளையும் ஒருவாறு தொகுத்து நோக்கு வதே இவ்வாய்வுரையின் நோக்கமாகும்.

உலகியலொழுகலாறுகளை விரித்துரைத்தலையே நோக்க மாகக் கொண்டு பாடப்பெற்ற சங்கச் செய்யுட்களிற் கடவுள் வழிபாடு பற்றிய செய்திகள் அருகியே காணப்படுகின்றன எனவும், கடவுள் வழிபாட்டினை விரித்துப் போற்றும் முறையில் பத்துப் பாட்டின் முதற்பாட்டாகவுள்ள திருமுருகாற்றுப்படையும் இவ் வாறே எட்டுத்தொகைகளின் முன்னரமைந்துள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களும் சங்ககாலத்தன அல்ல பிற்காலத்திற் பாடிச் சேர்க்கப் பெற்றனவே எனவும் கருதுவாருமுளர். திரு முருகாற்றுப் படையில் விரித்துரைக்கப் பெறும் செவ்வேள் வழி பாடும் எட்டுத் தொகைகளின் முன்னுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களில் இடம் பெற்றுள்ள சிவபெருமான் திருமால் ஆகிய இருபெருந் தெய்வங்களின் வழிபாடும் தொகை நூல்களின்

புறத்தேயுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களில் மட்டுமன்றித் தொகை நூல்களின் அகத்தேயுள்ள பாடல்கள் பலவற்றிலும் சிறப்பிடம் பெற்றுள்ளன. எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரி பாடல் என்னுந்தொகைநூல், திருமால், செவ்வேள், கொற்றவை ஆகிய தெய்வங்களைப் பரவிப்போற்றும் பண் சுமந்த பாடல் களைத் தன்னகத்தே கொண்ட செந்தமிழ்த் தெய்வப்பனுவ லாகத் திகழ்கின்றது. அன்றியும் பத்துப்பாட்டுள் முதற்பாட் டாகத் திகழும் திருமுருகாற்றுப் படையினையும் பரிபாடலாகிய தொகையினையும் சங்க காலத்தன அல்ல என்போமாயின் "முன் னோர்கள் பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும்'' என நம் முன்னோர் வழங்கி வரும் இலக்கிய மரபிற்கு மாறாகச் சங்க விலக்கியத்தை 'ஒன்பது பாட்டு, ஏழுதொகை' எனக் குறிப்பிட வேண்டிய நிலையேற்பட்டிருக்கும். பாரதம் பாடிய பெருந் தேவனார் பாடிய 'கண்ணிகார்நறுங்கொன்றை' யென்னும் முதற் குறிப்புடைய புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலைச் சங்ககாலத்துப் பாடலன்று என நீக்கி விட்டால் அத்தொகை நானூறு பாடல் என்னும் எண்ணிக்கையில் ஒன்று குறைய மு நூற்றுத் தொண்ணூற்றொன்பது என்னும் தொகையினதாகும். எனவே பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய 'கண்ணி கார்நறுங்கொன்றை' யென்னும் கடவுள் வாழ்த்துப் பாடலையும் சேர்த்து எண்ணினால்தான் அத்தொகை நூல் இறையனார் களவியலுரையாசிரியர் குறித்தவண்ணம் 'புறநானூறு' என்னும் பெயருக்கு உரியதாகும்.

இனி, சங்கத்தொகை நூல்கள் பலவற்றிற்குக் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனார் என்னும் புலவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என வழங்கப் பெறுதல் கொண்டு அவரைச் சங்ககாலத்தவர் அல்லர் என விலக்குதல் ஏற்புடைய தாகாது. வடமொழிக் காப்பியங்களாகிய இராமாயணத்திலும் மகாபாரதத்திலும் கூறப்படுஞ் செய்திகள் பல சங்கச் செய்யுட் களில் உவமைகளாக எடுத்தாளப் பெற்றுள்ளன. மதுரையிற் சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த பாண்டியர்கள் வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத் தமிழில் மொழி பெயர்க்கச் செய்தனர் என்ற செய்தி 'மாபாரதந் தமிழ்ப்படுத்தும், மதுராபுரிச் சங்கம் வைத் தும்' எனவரும் சின்னமனூர்ச் செப்பேட்டுத் தொடர்களால் நன்கு விளங்கும். இவ்வாறு மதுரையிற் சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த பாண்டியரது ஆட்சியில் மாபாரதத்தைத் தமிழில்

ஆசிரியப்பாவினால் மொழி பெயர்த்துதவிய சங்கப்புலவர் பெருந் தேவனாராதலின் அச்சிறப்பு நோக்கிப் பாரதம் பாடிய பெருந் தேவனார் என அழைக்கப் பெற்றார் எனக் கருதுதல் மேற் குறித்த சின்னமனூர்ச் செப்பேட்டிற் குறிக்கப்பெற்ற வரலாற்று நிகழ்ச்சிக்கு ஏற்புடையதாகும். தொல்காப்பியம் புறத்திணை யியல் 17-ஆம் சூத்திரவுரையில் 'ஆதி சான்ற மேதகு வேட்கை யின்' எனவும் 'வானவர் போரிற் றானவர்க் கடந்த' எனவும் 'நான்மருப் பில்லாக் கானவில் யானை' எனவும் 'மறங்கெழு வேந்தன் குறங்கறுத் திட்டபின்' எனவும் வரும் முதற்குறிப் புடைய ஆசிரியப்பாடல்கள் நான்கினையும் 'பாரதப்பாட்டு, என நச்சினார்க்கினியர் குறித்துள்ளார். இவை கடைச்சங்கப் புலவர் பெருந்தேவனார் பாடிய பாரதத்திலுள்ள பாடல்களா யிருத்தல் வேண்டும் எனக் கருதவேண்டியுளது.

இனி, கி. பி. எட்டாம் நூற்றாண்டினையடுத்து வாழ்ந்த பெருந்தேவனார் என்னும் மற்றொரு புலவர் பாரதக் கதையினை வெண்பாவும் உரைநடையும் விரவிய நிலையில் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகப் பாடியுள்ளார். எனவே, பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற பெயர் இவர்க்கும் பொருத்த முடையதாக அமைந்துள்ளது. வடமொழியிற் காவியாதர்சம் என்ற அணியிலக்கண நூலையியற்றிய ஆசிரியர்க்குரிய தண்டி என்னும் பெயர் அதனைத் தமிழில் மொழி பெயர்த்த ஆசிரியர்க் கும் உரியதாக வழங்குதல் இங்கு ஒப்பநோக்கத்தகுவதாகும். சங்கப் புலவர் பெருந்தேவனரால் தமிழில் முதன்முதற் பாடப் பெற்ற பாரதம் ஆசிரியப்பாவால் அமைந்தது. பிற்காலப்புலவர் பெருந்தேவனார் பாரதம் வெண்பாவும் உரைநடையும் விரவிய நிலையில் இயற்றப் பெற்றது. எனவே காலத்தாலும் யாப்பாலும் வேறுபட்ட நூல்களைச் செய்த ஆசிரியர் இருவரையும் பெய ரொப்புமையொன்றே பற்றி ஒருவரெனத் துணிதற்கு இடமில்லை யென்பது இங்கு உளங்கொளற்பாலதாகும்.

இவ்வுலகிற் பல்வேறு உடம்புடன் பிறந்து வாழும் உயிரினங் களுள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி யுணர்வுகளுடன் ஆறாவதாகிய மனவுணர்வினையும் ஒருங்கு பெற்றுக் கல்வியறிவொழுக்கங்களால் மேலும் மேலும் வாழ்க்கை

யில் முன்னேறுதற்குரிய தகுதி மக்கட்குலத்தார்க்கேயுரிய சிறப் பியல்பாகும். இவ்வாறு ஒழுக்கத்தால் மேன்மேலுயர்தற்குரிய கல்விப் பயிற்சியும் அதன் பயனாகிய நல்லறிவும் அவ்வறிவின் திறத்தால் சிறந்தன செய்தற்குரிய ஆற்றலும் மக்களினத்தார்க்கே யுரியவாதல் பற்றி, ஒழுக்கவுணர்வு வாய்க்கப் பெறாமையால் அஃறிணையெனப்பட்ட ஏனைய உயிர்த்தொகுதிகளினும் ஒழுக் கத்தால் உயரும் தன்மையினையுடையார் மக்களினத்தாரே என்ற கருத்தில் உயர்திணையெனச் சிறப்பிக்கப் பெற்றனர். உயர்திணையெனச் சிறப்பிக்கப் பெறும் மக்கட்குலத்தார் அறத் தின் வழிநிலை பெற்றுப் பொருளையீட்டித் தாமும் பிறரும் இன்பமுடன் இனிதுவாழ்தல் வேண்டித் தமது வாழ்க்கையில் தவறாது கடைப்பிடித்தற்கு அமைத்துக் கொண்ட ஒழுக்கநெறி களே சமயம் என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றன. சில் வாழ்நாட் பல் பிணிச் சிற்றறிவினராகிய மக்கட் குலத்தார் தமது நிறைவுடைய அறிவினை மட்டுமே துணையாகக் கொண்டு அமைத்துக் கொள்ளும் உலகியல் வாழ்க்கை நெறிமுறைகளைவிட நாடு மொழி இனம் என்னும் வேற்றுமைக்கு இடந்தராது எல்லா வுலகிற்கும் உரிய தனிமுதற் பொருளாய் எல்லாவுயிர்கட்கும் உயிர்க்குயிராய் உள்நின்று உலகங்களை இயக்கியருளும் தெய்வம் ஒன்று உண்டு என்னுந்தெளிவுடையராய்த் தெய்வத்தின் திருவருள் வழியடங்கி நின்று எல்லா உயிர்களும் வையத்து வாழ்வாங்கு வாழும் வண்ணம் அமைத்துக் கொள்ளும் மெய்ம்மையான ஒழுக்க நெறியே யாவராலும் சமயம் என மேற்கொள்ளத்தகும் சிறப் புடையதாகும். இத்தகைய தெய்வக்கொள்கையின் வழியமைந்த சமயத்தையே 'பொய்தீர் ஒழுக்கநெறி'[1] எனப் போற்றுவர் தெய்வப் புலவர்.

இவ்வுலகிற்காலந்தோறும் ஏற்படுங்கடல்கோள், புயல், இடி, மழை வெள்ளப் பெருக்கு, நிலநடுக்கம் முதலிய இயற்கை நிகழ்ச்சி களாகிய பல்வேறு இடையூறுகளையும் புலி முதலிய கொடிய வுயிரினங்களால் நேரும் இடர்களையும் உதிர்த்து நின்று தமது வாழ்க்கையினைச் செவ்விய முறையில் அமைத்துக் கொண்டு முன்னேறும் உணர்வுடைய மக்களினத்தார் தமக்கு இடர்கள் பல நேரும் போதெல்லாம் தம்முள்ளத்தே தோன்றும் அச்சத் தினைப் போக்கி ஆண்மையும் அறிவாற்றலும் கிளர்ந்தெழும்

வண்ணம் தோன்றாத்துணையாய் உடனிருந்து காத்தருளும் தெய்வம் என்பது ஒன்று உண்டு என்னும் நல்லுணர்வினைப் பெறு வாராயினர். யாக்கை, இளமை, செல்வம் முதலிய பலவகை யாலும் நிலைபேறில்லாத இவ்வுலக வாழ்க்கையிற் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வாழையடி வாழையென வாழ்ந்து வரும் தம் முன்னோர்களின் வழியாகத் தாம் பெற்றுள்ள அழுந்தி யறிதல் எனப்படும் அநுபவத்தின் பயனாக உலகுயிர்களை யியக்கி உயிர்கட்குத் தோன்றாத் துணையாய் உடனிருந்து அருள் புரியும் தெய்வம் என்பது ஒன்று உண்டு என எண்ணுந் தெளி வுடைய சிந்தையினைப் பெற்ற காலமே மக்கள் வாழ்க்கையின் பொற்காலமாகும். தமிழகத்தில் தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என வகுத்துரைக்கப்படும் சங்ககாலத்தை இத் தகைய பொற்காலம் எனக் கூறலாம். உலகிற் பல பகுதிகளிலும் வாழ்ந்த மக்கள் இத்தகைய தெய்வவுணர்வு கைவரப் பெறாது அறியாமையிருளிலகப்பட்டு வருந்திய இருட்காலமும் உண்டு.

> ''தேசம் உமை அறிவதற்கு முன்னோ பின்னோ
> திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே''

எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழி, மக்கட் குலத்தார் உள்ளத்தே கடவுள் உண்டு என்னும் உணர்வு தோன்றுவதற்கு முன்னரேயே உலக முதல்வனாகிய இறைவன் தன் திருவருள் ஊற்றெடுத்துப் பெருகும் நிலையங்களாகப் பல்வேறூர்களிற் கோயில் கொண்டு மக்கள் உள்ளத்தே தன்னை நினைக்குமாறு செய்து அருள் வழங்குகின்றான் என இறைவனது பெருங் கருணைத் திறத்தை அறிவுறுத்து நிலையில் அமைந்துள்ளமை இங்கு நினைக்கத்தகுவதாகும்.

இயற்றமிழ் நூலாகிய தொல்காப்பியத்தை இலக்கண மாகக் கொண்டு பாடப் பெற்றனவே எட்டுத்தொகை, பத்துப் பாட்டு ஆகிய சங்க இலக்கியங்களாகும். இவ்வுண்மை'' இடைச் சங்கத்தார்க்கும் கடைச் சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல் காப்பியம்'' எனவரும் இறையனார் களவியலுரையால் நன்கு தெளியப்படும். எனவே முன்னூலாகிய தொல்காப்பியத்திற் கூறப்படும் நானிலத்தெய்வங்களாகிய மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய தெய்வ வழிபாடுகளும், வீரர்க்கு

வெற்றி விளைக்கும் கொற்றவை வழிபாடும் நானிலத்திற்கும் பொதுவாகிய கடவுள் வழிபாடும் முருகனைப் பரவும் கூத்தாகிய வாடா வள்ளியும் சங்க இலக்கியங்களிலும் இடம் பெற்றிருத்தல் இயல்பே.

மக்களால் மதிக்கத் தகும் பொருள்கள் முதல், கரு, உரி என மூவகைப்படும். உயிர் வாழ்க்கைக்கு நிலைக்களமாக அமைந்த நிலமும் பருவகாலமும் முதற் பொருள்கள். அவற்றிற் கருக் கொண்டு தோன்றும் உடம்பினைப் பெற்ற புலமுதல் மக்களீறாகவுள்ள உயிர்த்தொகுதிகளும் உயிரல் பொருள்களும் கருப்பொருள் எனப்படும். மனவுணர்வுடைய மக்கட் குலத்தார்க்கே சிறப்புரிமையுடைய அகமும் புறமுமாகிய ஒழுகலாறுகள் உரிப்பொருள் எனப்படும். மக்கள் வாழும் நிலத்தியல்பிற்கும் பருவச் சூழ்நிலைகட்கும் ஏற்பவே அந்நில மக்களின் மனத்தியல்பாகிய உள்ளத்துணர்ச்சிகளும் தொழில் முறைகளும் உருப்பெறுவனவாகும். இந்நுட்பத்தினை நன்குணர்ந்த முன்னைத் தமிழ்ச் சான்றோர் தெய்வங்கொள்கையினை அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களுள் ஒன்றாக வகுத்துரைத்தனர். இதனால் மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்பவே அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வக் கொள்கைகளும் வழிபாட்டு முறைகளும் தோன்றி நிலைபெறுவனவாயின என்னும் வரலாற்றுண்மை நன்கு புலனாதல் காணலாம்.

காடுறையுலகமாகிய முல்லை நிலத்திற் காத்தற் கடவுளாகிய திருமால் வழிபாடும், மைவரையுலகமாகிய குறிஞ்சி நிலத்திற் சேயோனாகிய முருகன் வழிபாடும், தீம்புனலுலகமாகிய மருத நிலத்தில் வேந்தனை (இந்திரனை)த் தெய்வமாகக் கருதிப் போற்றும் முறையும், பெருமணலுலகமாகிய நெய்தல் நிலத்தில் கடற்றெய்வமாகிய வருணனது வழிபாடும் தோன்றி நிலை பெற்றன எனத் தொல்காப்பியம் கூறும். முல்லை நிலத்துக் கோவலர், தம்மால் மேய்க்கப் பெறும்* பசுநிரைகள் பாலாகிய பயன்தருதல் வேண்டிக் காயாம் பூவண்ணனாகிய திருமாலைப் பரவிக் குரவைக் கூத்தாடுதலும், தம்மகளிரைத் தகுதியுடைய தலைவனுக்கு மணஞ்செய்து கொடுத்தலை விரும்பிக் கொல்லுந் தன்மையனவாகிய வலிய காளைகளை வளர்த்து அவற்றைத்

தழுவிப் பிடித்த தறுகண்மைமிக்க வீரனுக்குத் தம் மகளிரை மணஞ்செய்து கொடுத்தலும் ஆகிய ஒழுகலாறுகளையுடையராய் மாயோனைத் தெய்வமாக வழிபட்டு வாழ்ந்தனர் என்பது எட்டுத் தொகையுள் ஒன்றாகிய கலித்தொகையிலுள்ள முல்லைத் திணைப்பாடல்களால் இனிது புலனாகின்றது.

குறிஞ்சி நிலத்து மக்களாகிய மலைவாணர், மலரினுள்ளிருந்து தோன்றும் நறுமணம் போன்று மக்களது நெஞ்சத் தாமரையின் உள்ளிருந்து தோன்றும் தெய்வமணமாகிய வெறியினையறியுஞ் சிறப்புடையனாகி, முருகப் பெருமானை வழிபாடு செய்யும் வேலன் என்பானையழைத்து முருகென்னுந்தெய்வம் மணங்கமழ வெறியாடச் செய்து செங்காந்தள் நிற வண்ணனாகிய செவ்வேளை வழிபட்டு மன்னுயிர்களின் பசியும் பிணியும் பகையும் நீங்கப் பருவ மழை பொழிய மலைவளம் பெற அருள் புரிந்தருள்க எனப்பரவிப் போற்றித் தாம் வேண்டிய வேண்டியாங்குப் பெற்று மகிழ்மீக்கூர நல்வாழ்வு பெற்றனர். செவ்வேள் வழிபாட்டினால் மக்கள் பெறுதற்குரிய இம்மை மறுமை நலங்களைச் சங்கவிலக்கியத்தில் உள்ள குறிஞ்சித் திணைப் பாடல்களும் பத்துப் பாட்டின் முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப்படையும் பரிபாடலிற் செவ்வேளைப் பரவிய பாடல்களும் நன்கு புலப்படுத்தல் காணலாம்.

மருத நிலத்து உழவர்கள், மலர்தலையுலகிற்கு உயிரெனச் சிறந்த வேந்தனைத் தெய்வமென மதிக்கும் பேரன்புடையராய், நாடுமலிய மழை பெய்து விளையுள் பெருக மழைவளஞ் சுரத்தல் வேண்டி வானோர் தலைவனாகிய இந்திரனை மலர் தூவி வழிபட்டு இந்திரனுக்குரிய இந்திர விழாவை நிகழ்த்தினார்கள். இச்செய்தி 'இந்திர விழவிற் பூவின் அன்ன' (ஐங். 62-1) என வரும் ஐங்குறுநூற்றுத் தொடரால் உய்த்துணரப்படும். சிலப்பதிகாரத்திலுள்ள இந்திரவிழவூரெடுத்த காதையும் மணிமேகலையிலுள்ள விழாவறை காதையும் கடைச்சங்க காலத்து மருத நிலத்துப் பேரூர்களிலே நிகழ்ந்த இந்திர விழாவின் செயல்முறைகளை விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

கடலில் மீன் பிடித்தலாகிய தொழிலைச் செய்து வாழும் வலைவாணராகிய நெய்தல் நிலத்துப் பரதவர்கள் தமக்கு

வலைவளம் நன்கு வாய்த்தல் வேண்டித் தமது மனையின்கண் சுறாமீனின் கோட்டினைத் தெய்வ அடையாளமாக நிறுத்திக் கடற்றெய்வமாகிய வருணனை வழிபட்டுப் போற்றுதலைத் தமது தெய்வ வழிபாட்டு முறையாகக் கொண்டு வாழ்வு பெற்றனர். இச்செய்தி,

> ''வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்
> சினைச் சுறவின் கோடு நட்டு
> மனைச் சேர்த்திய வல்லணங்கினான்
> மடற்றாழை மலர்மிலைந்தும்
> பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்
> புன்றலை யிரும்பரதவர்
> பைந்தழைமா மகளிரொடு
> பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது
> உவவுமடிந் துண்டாடியும்'' (85-93)

எனவரும் பட்டினப் பாலையடிகளால் விரித்துரைக்கப் பெற்றது.

மேற்குறித்தவாறு நானிலமக்களாற் சிறப்பு முறையில் நிகழ்த்தப் பெறும் நிலத்தெய்வ வழிபாடுகளேயன்றித் தறுகண் மறவர் எல்லோராலும் மேற்கொள்ளப்படும் கொற்றவை வழி பாடும் தொல்காப்பியனார்காலம் முதல் தமிழ்நாட்டில் மேற் கொள்ளப் பெற்று வருகின்றது என்பது 'சிறந்த கொற்றவை நிலை' யென்னுந் தொல்காப்பியத் தொடரால் இனிது புல னாகும். வெற்றித் தெய்வமாகிய கொற்றவை பகை வேந்தரைப் போரில் வென்று அவரது யானைத் தந்தத்தால் அமைத்த கட்டில் மேல் எழுந்தருளியிருந்து போர் வீரர் உவப்புடன் தரும் குருதிப்பலி தன் திருமேனியிற்பட்டாலல்லது தன் முன் படைக்கப் படும் திருவமுதினை ஏற்றுக் கொள்ளமாட்டாள் என்றதோர் அச்சத்துடன் கூடிய தெய்வ உணர்வு அக்கால மறவர் உள்ளத்தே நிலை பெற்றிருந்தமை,

> ''வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவர்
> அரசுவா அழைப்பக் கோடறுத் தியற்றிய
> அணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து
> தும்பை சான்ற மெய்தயங் குயக்கத்து
> நிறம்படு குருதி புறம்படி னல்லது

மடையெதிர் கொள்ளா அஞ்சுவரு மரபிற்
கடவுள் அயிரை'' (பதிற்றுப். 79)

எனவரும் அரிசில்கிழார் பாடற் பகுதியாற் புலனாகின்றது.

தலைவி தன் ஆருயிர்த் தலைவனுடன் கொற்றவைக்குப் பரவுக்கடன் கொடுத்தற் பொருட்டு நூலினைக் காப்புக் கட்டிக் கொண்டு புள்நிமித்தம் பார்த்தலும், நற்சொற்கேட்டலும் ஆகிய வழிபாட்டினை மேற்கொள்ளும் வழக்கம் உண்டென்பது,

''விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் பூணும் கைந்நூல் யாவாம்
புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்
உள்ளலும் உள்ளா மன்றே தோழி
உயிர்க்குயி ரன்ன ராகலின் தம்மின்று
இமைப்புவரை யமையா நம்வயின்
மறந்தாண் டமைதல் வல்லியோர் மாட்டே''

(218)

எனவரும் குறுந்தொகைப் பாடலால் உய்த்துணரப்படும்.

போர்க்களத்தே கடுஞ்சினத்துடன் ஓதப்படும் மந்திர முழக்கத்துடன் அருந்திறற் கடவுளுக்குக் குருதியுடன் கலந்து படைக்கப்பெறும் சோற்றுத் திரளைக் காக்கைக்குப் பலியாக வீசுங்கால் அதனைப் பேயும் தன்கையால் தொடுதற்கு அஞ்சி நடுங்கும் என்பதும் அவ்வுணவின் மேல் எறும்பு மொய்ப்ப தில்லை என்பதும் ஆகிய வியப்புடைய நிகழ்ச்சி பதிற்றுப்பத்திற் குறிக்கப் பெற்றுளது.(2)

மக்களுக்கு அவ்வக்காலத்து ஏற்படும் இன்ப துன்ப நிகழ்ச்சி களைப் பல்லியின் சொல்லைக் கொண்டும், பறவைகளின் குரல் இயக்கம் முதலியன கொண்டும், விரிச்சியெனப்படும் நற்சொல் லைக் கொண்டும் முன்னரேயறிந்து கொள்ளும் பழக்கம் சங்க காலத்தில் மக்களிடையே நிலைபெற்றிருந்தமை சங்கச் செய்யுட் களால் நன்கு புலனாகின்றது(3). அணங்கு, பேய், சூர் முதலியன பற்றிய நம்பிக்கைகளால் மக்கள் அஞ்சி வாழ்ந்த தொன்மைக் காலத்தே அவர்தம் உள்ளத்தில் தோன்றிய அச்சத்தைப்போக்கி அஞ்சாமையென்னும் தறுகண்மையினைத் தந்தது, வேற்படை

யினாற் கடலிற் சூர்மாகொன்ற செவ்வேளாகிய முருக வழி பாடாகும்.

தமது நாட்டின் அரசியல் ஆட்சி முறையினைப் பாதுகாத்து மக்களுக்கு நலஞ் செய்தல் வேண்டும் என்னும் உயர்ந்த குறிக் கோளுடன் தமது இனிய உயிரையும் பொருட்படுத்தாது பகைவ ரொடு பொருது உயிர்துறந்த வீரர்களைத் தெய்வமாகப் பேணி அவருடைய பெயரினையும் அவர் செய்த வீரச் செயலாகிய பெருமையினையும் கல்லிற்பொறித்து அக்கல்லினையே தெய்வ மாக நட்டு வழிபடும் நடுகல் வழிபாடு ஆசிரியர் தொல்காப்பிய னார் காலத்திற்கு முன்னரே தமிழ்நாட்டிற் சிறப்பிடம் பெற்றி ருந்தது. வீரரைத் தெய்வமாக்கி வழிபடும் நடுகல்லினை அவ் வீரர்களுடன் நெருங்கிய தொடர்புடையவர்களும் அவர்களொடு தொடர்பின்றி அந்நாட்டின் வழியே செல்லும் அயலாரும் தெய்வ மாக மதித்து வழிபட்டனர் என்ற செய்தி சங்கச் செய்யுட்கள் பலவற்றிலும் இடம் பெற்றுள்ளது. மக்கள் பலரும் நெல்லும் மலருந் தூவிச் செய்யும் தெய்வ வழிபாடுகள் எல்லாவற்றிலும் சிறப்புடையதாக நடுகல் வழிபாடாகிய இதனையே தமக்குரிய வழிபாடாகத் தறுகண் மறவர்கள் மேற்கொண்டனர். இச்செய்தி,

> 'ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
> ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
> கல்லே பரவி னல்லது
> நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே' (335)

எனவரும் புறநானூற்றுப் பாடற் பகுதியால் நன்கு புலனாதல் காணலாம்.

தொல்காப்பியனார் காலத்தில் காடுறையுலகமாகிய முல்லை நிலத்தில் நிலவிய மாயோன் வழிபாடு, கடைச் சங்க காலத்தில் நில வெல்லையைக் கடந்து நாடு முழுவதும் பரவியது—திரு வுருவ வழிபாட்டில் கண்ணன், பலதேவன் என எண்ணி வழிபடும் இருபெருந் தெய்வநிலையினை எய்தியது; செங்கட்காரி (வாசு தேவன்) கருங்கண் வெள்ளை (சங்கருடணன்) பொன்கட்பச்சை (பிரத்தியும்நன்) பைங்கண்மால் (அநிருத்தன்) என்னும் நால் வகை வியூகமாக விரிவு பெறுவதாயிற்று. சாங்கியர் கூறும் இருபத்தைந்து தத்துவங்களுள் இருபத்தைந்தாந் தத்துவமாகிய

மூலப்பகுதியாகத் திகழ்பவன் வாசுதேவனாகிய திருமாலே எனக் கொள்ளும் வைணவ தத்துவக் கொள்கை உருப்பெற்ற காலம் கடைச்சங்க காலமே என்பதும், அந்தணர்கள் வேத விதிப்படி செய்யும் வேள்விகளில் வேள்வித் தூணத்தில் அமர்ந்து அங்குப் பலியிடப் பெறும் யாகப்பசுவாகிய ஆட்டினையுணவாக ஏற்றுக் கொள்ளுந் தெய்வம் திருமாலேயென்பதும் பரிபாடலில் திருமாலைப் போற்றும் பாடற்பகுதிகளால் உய்த்துணரப்படும்.

தொல்காப்பியனார் காலத்தில் குறிஞ்சி நிலத்தில் நிகழ்ந்த செவ்வேள் வழிபாடு, நிலவெல்லையைக் கடந்து நாடு முழுவதும் பரவிய காலம் கடைச்சங்க காலம் எனக் கருதுதல் பொருந்தும். முருகமர் மாமலைகள் எல்லாவற்றிலும் குன்றுதோறாடல் என்ற முறையிற் பொதுவாக நிகழ்ந்த செவ்வேள் வழிபாடு மதுரையையடுத்துள்ள திருப்பரங்குன்றம், கடற்கரையில் உள்ள திருச்செந்திலாகிய திருச்சீரலைவாய், திருவாவிநன்குடி, திருவேரகம், பழமுதிர்சோலை ஆகிய திருப்பதிகளிற் சிறப்புமுறையில் விரிவாக நிகழ்ந்தமை திருமுருகாற்றுப்படை, பரிபாடல் முதலிய சங்கச் செய்யுட்களாற் புலனாகின்றது.

தொல்காப்பியனார் காலத்தில் வள்ளிக்கு நாயகனாகப் போற்றப் பெற்ற முருகப்பெருமான், கடைச்சங்க காலத்தில் இந்திரன் மகள் தெய்வயானையம்மையார்க்குரிய கணவனாகவும் போற்றப்பெறுகின்றான். குறிஞ்சி நிலமக்கள் தம் குலதெய்வமாகிய முருகப்பெருமானை வழிபடும் முறையில் வேலேந்தியாடும் வேலனைக் கொண்டு மறியினைப் பலியிட்டுக் குருதியொடு விரவிய பிரப்பரிசியினையும் தினையினையும் அமுதாகப்படைத்து வழிபடும் தொன்மை வாய்ந்த வழிபாட்டு முறையும் மந்திர மரபின் அந்தணர் செய்யும் பிற்கால வழிபாட்டு முறையும் ஆகிய இருவகை வழிபாட்டு முறைகளையும் சங்கப் புலவர் நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப்படையிற் காணலாம். கடைச்சங்க காலத்தில் திருப்பரங்குன்றத்தில் நிகழ்ந்த முருகன் வழிபாடு வேலனைக் கொண்டு பழைய முறையிலேயே நிகழ்த்தப் பெற்றதென்பது செவ்வேளைப் பரவும் பரிபாடற் பகுதிகளால் நன்கு புலனாகின்றது.

குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் வழிபாட்டிற்கும் முல்லை நிலத் தெய்வமாகிய திருமால் வழிபாட்டிற்கும் தொடர்புடைய

தாய் முல்லையுங் குறிஞ்சியும் வேனில் வெம்மையால் திரிபுற்ற பாலையெனப்படும் அருஞ்சுரத்திலே இழையணி சிறப்பிற் பழை யோளாகிய காடுகிழாள் (காளி கோயில்) இடம் பெறுவதாயிற்று.

மனைவாழ்க்கையினை மேற்கொண்ட மக்கள் தம் வாழ் வுக்கு உறுதுணையாகிய தெய்வம் தம்முடைய வீட்டிலே எழுந் தருளியிருப்பதாகக் கொண்டு அதனை இல்லுறை கடவுள் என்ற பெயரால் நாள்தோறும் வழிபடுவதனை மரபாகக் கொண்டனர். மணமாகாத மகளிர் தமது திருமணம் இனிது நிறைவேற இல் லுறை கடவுளைப் போற்றி வழிபட்டனர். இச்செய்தி,

> ''வல்லே வருக வரைந்த நாளென
> நல்லிறை மெல்விரல் கூப்பி
> இல்லுறை கடவுட்கு ஆக்குதும் பலியே'' (அகம்,202)

எனவரும் அகநானூற்றுப் பாடலால் விரித்துரைக்கப் பெற்றது.

திருமாலின் திருமார்பில் அவரது தேவியாகிய திருமகள் அமர்ந்துள்ளமை 'திருஞெமரகலம்' என அவரது திருமார்பு சிறப்பிக்கப்படுதலாற் புலனாம். இருமருங்கும் யானைகள் இரண்டு நின்று நன்னீராட்டத் தாமரை மலர்மேல் எழுந்தருளி யிருக்குந் திருமகளது தெய்வத் தோற்றம் கலித்தொகையிற் சொல்லோவியஞ் செய்து காட்டப் பெற்றுளது. (4) திருமால் படைத்தற்கடவுளாகிய நான்முகனுக்கும் காமவேளாகிய மன் மதனுக்குந் தந்தையாகப் போற்றப் பெற்றுள்ளார். 'இருவர் தாதை இலங்கு பூண் மாஅல்' (1— 31) என்பது பரிபாடல்.

படைத்தற் கடவுளாகிய நான்முகன் 'ஆதியந்தணன்' என வும் 'தொடங்கற்கண் தோன்றிய முதியவன் எனவும்' குறிக்கப் பெறுகின்றான். இளவேனிற் காலத்துக் காமவேளுக்கு விழாக் கொண்டாடப் பெற்றது. அதனை 'வில்லவன் விழா' எனக் கலித்தொகை(35) குறிப்பிடுகின்றது. திருமால் திருவோணம் என்ற விண்மீனுக்கு உரிமையுடையவனாதலின் திருவோண நாளில் திருமாலுக்கு விழாக் கொண்டாடப் பெற்றது. 'மாயோன் மேய ஓண நன்னாள்''(591) என வரும் மதுரைக் காஞ்சியால் இச்செய்தி புலனாகின்றது. சிவபெருமான் திருவாதிரை விண் மீனுக்குரியவராக 'ஆதிரை முதல்வன்' (பரிபாடல் 8— 6) எனப்

போற்றப் பெறுகின்றார். சிவபெருமானுக்கு மதுரை முதலிய பேரூர்களில் திருக்கோயில்கள் அமைக்கப் பெற்றிருந்தன. அக்கோயில்களில் ஏழு நாள்கள் திருவிழாவும் எட்டாம் நாள் தீர்த்த மாடுதலும் நிகழ்ந்தமை ''கழுநீர் கொண்ட எழுநாளந்தி'(427) எனவரும் மதுரைக் காஞ்சித் தொடராற் புலனாகின்றது. முருகப் பெருமான் திருக்கோயில்களிற் கால்கோள் விழாவாகிய கொடியேற்றம் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. நாடாள் வேந்தர்க்கு வெற்றியுளதாதல் வேண்டி நாடெங்கிலும் கார்த்திகைத் திங்கள் கார்த்திகையிரவில் கார்த்திகை விளக்கீடு விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. (நற். 202)

உயிர்கள் வாழ்வு பெறுதற் பொருட்டு ஐம்பெரும்பூதங்களின் திரட்சியாகிய உலகினைப் படைத்தும, உயிர்கள் இளைப்பாறுதற் பொருட்டு உலகினைத் தன் கண் ஒடுக்கியும் உலகிற்கு நிமித்த காரணமாகத் திகழ்பவன் சிவபெருமானே என்பதும், அம் முதல்வனே எல்லாத் தெய்வங்கட்கும் தலைவனாகிய முழுமுதற் கடவுள் என்பதும், மதுரை மாநகரில்அமைந்த திருக்கோயிலில் அந்திக்காலத்தில் நிகழும் விழாவில் ஆடவர்களேயன்றி மகளிரும் தாம் பெற்ற இளங்குழந்தைகளுடன் வந்து இறைவனை மலர்தூவி வழிபட்டனர் என்பதும்,

''நீரும் நிலனுந் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவ னாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற வுணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்
அந்தி விழவில் தூரியங் கறங்கத்
திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை
ஓம்பினர் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்
காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்து புறங்காக்கும் கடவுட் பள்ளி''

(மதுரைக்— 453— 67)

எனவரும் மதுரைக்காஞ்சியடிகளாலும்,

"தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்
போல்
எல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய"
(நெய்தற்கலி—12)

எனவரும் கலித்தொகைத் தொடர்களாலும் நன்கு புலனாகும்.

வேதங்கள் ஒருவராலும் இயற்றப்பெற்றன அல்ல என்னும் வடவர் கொள்கைக்கு மாறாக, நால் வேதங்கள் அருளிச் செய்தவன் சிவபெருமானே என்னுங்கொள்கை சங்க காலத்தில் தென்னாட்டில் வாழ்ந்த அந்தணர்களிடையே நிலவியதென்பது,

" நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகாது
ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த ஒருமுதுநூல் " (புறம் — 166)

என்னும் ஆவூர் மூலங்கிழார் பாடிய பாடற் பகுதியாலும்,

" ஆறறி யந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து "

எனவரும் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பகுதியாலும் நன்குணரப்படும்.

சிவபெருமான் திரிபுரத்தையெரித்தருளியது, கயிலையைப் பெயர்த்தெடுத்தது, இராவணனைத் திருவடிப்பெருவிரலொன்றினால் அடர்த்தருளியது, ஆலின்கீழ் அமர்ந்து முனிவர்க்கு அறமுரைத்தருளியது, மலையரையன் மகளாகிய உமையை மணந்து மாதொருபாகனாகியது, கங்கையைச் சடையிற் கரந்தருளியது, தேய்மதியாகிய திங்களைச் சடையில் அணிந்தருளியது, ஆலகால நஞ்சினைக் கண்டத்தடக்கி நீலமணிமிடற்றினனாகத் திகழ்ந்தது முதலிய சிவனைப்பற்றிய புராணச் செய்திகளும் பாற்கடலில் அரவணையிற் பள்ளி கொண்டருளியது, தனது உந்தித் தாமரையில் நான்முகனைத் தோற்றுவித்தது, பாற்கடலைக் கடைந்து வானோர்க்கு அமிழ்தம் அருளியது, மாவலியிடம் குறளனாகச் சென்று மூவடிமண் வேண்டி நெடியோனாக நிமிர்ந்தருளியது. இராமனாக அவதரித்துக் குரங்குப்படை கொண்டு இராவணனை வெல்லுதற்குக் கோடிக்கரையில் துணைவர்களுடன் அமர்ந்து

சூழ்ச்சி செய்தது, கண்ணனாகவும் பலதேவனாகவும் அவதரித்து ஆயர்பாடியில் அருள் விளையாடல்கள் புரிந்தது முதலிய திரு மாலைப் பற்றிய புராணச் செய்திகளும், முருகப்பெருமான் சர வணப்பொய்கையில் குழந்தையாகவிருந்து கார்த்திகைப் பெண் கள் அறுவராலும் பாலூட்டி வளர்க்கப் பெற்றது, கடல் நடுவே சூர்மாவாகிய அவுணனை வேலாற்கொன்றருளியது, வானோர் தலைவனாகிய இந்திரன் மகள் தெய்வயானையையும் குறமகள் வள்ளிநாச்சியாரையும் திருமணம் கொண்டருளியது முதலிய முருகனைப்பற்றிய புராணச் செய்திகளும் சங்கச் செய்யுட்களில் இடம்பெற்றுள்ளன. வேதம் ஓதுதலும் வேள்வி செய்தலும் ஆகிய அந்தணர்க்கே உரிய ஒழுகலாறுகளும், சமண்முனிவர்கள், முக்கோற்பகவர், அவிர்சடை முனிவர் முதலிய பல சமயத் தவ முனிவர்கள் மேற்கொண்டொழுகிய தவச்செயல்களும் சங்கச் செய்யுட்களில் ஆங்காங்கே குறிப்பிடப்பெற்றுள்ளன. யாறு, குளம் முதலிய நீர்த்துறைகளிலும் நாற்றெருக்கள் கூடுமிடங் களிலும் இரண்டு மூன்று பெருவழிகள் சந்திக்கும் இடங்களிலும், ஆல், கடம்பு முதலிய தெய்வமரங்களிலும், நடுதறியாகத் தூணை நிறுத்தி வழிபடும் ஊர்ப்பொதுமன்றங்களிலும், மலைகளிலும், காடுகளிலும் மக்களால் நிகழ்த்தப்பெறும் பலதிற வழிபாடுகளும், முழுமுதற் கடவுளாகிய ஒருவனையே சென்று சார்ந்து உலகிற்கு நற்பயன் விளைவிப்பன என்னும் பொதுமையுணர்வு சங்க காலத் தமிழ் மக்களிடையே நிலை பெற்றிருந்தமையால் ஆங்காங்கு நிகழும் தெய்வவழிபாடுகள் எல்லாவற்றிலும் வேற்றுமையின்றிக் கலந்து கொண்டார்கள்.

> "ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
> கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
> அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
> எவ்வயி னோயும் நீயே'' (67–70)

எனவரும் பரிபாடற் பகுதியாலும்,

> '' யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்
> சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
> மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினும் ''
> (224–226)

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடராலும் இச்செய்தி இனிது புலனாதல் காணலாம்.

உலகுயிர்களை இயக்கியருளும் முழுமுதற் பொருளாகிய இறைவனது இயல்பு மக்களது சிந்தைக்கும் மொழிக்கும் எட்டா நிலையினது ஆதலின் இறைவனது திருவடியாகிய திருவருளைத் துணையாகக் கொண்டே அம்முதற்பொருளையுணர்ந்து உய்தி பெறுதல் வேண்டும் என்பது,

> '' கூறாமற் குறித்ததன் மேற் செல்லும் — மணிமிடற்று
> எண்கையாய் ''

எனவரும் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துத் தொடராலும்

> '' நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
> நின்னடி யுள்ளி வந்தனன் '' (278, 279)

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடராலும் வற்புறுத்தப் பெற்றுள்ளமை இங்கு மனங்கொளத் தகுவதாகும்.

உலகம் அடிக்கடி நிலைமாறும் உள்பொருள் என்பதும், உலகில் வாழும் உயிர்கள் என்றும் அழியாதன ஆதலின் மன்னுயிர் என வழங்குதல் மரபென்பதும், அவைதாம் இவ்வுலகிற் பெற்றுள்ள உடம்புடனேயே எக்காலத்தும் கூடியிராது வினை வயத்தால் அடிக்கடி மாறிப் பிறப்பதுண்டு என்பதும், உயிர்கட்கு இவ்வுலகியலில் உறவாம் இன்ப துன்ப நுகர்ச்சிகள் யாவும் பிறரால் தரப்படுவன அன்றி அவ்வுயிர்கள் செய்த வினைகளின் பயனாகவே அமைவனவாதலின் அவை பிறரால் விளைவன என்றெண்ணாது தாம் செய்த தீவினைப் பயன்களை வெறுப்பின்றித் தாமே ஏற்று நுகர்தலே அறிவுடைமை என்பதும்; உலக நிலையாமையினையுணர்ந்து பிறப்பற முயலும் நன்னெறியிலொழுகிப் பேரின்ப நிலையினைப் பெறுதலே வாழ்க்கையின் குறிக்கோளாதல் வேண்டும் என்பதும் சங்ககாலத் தமிழ் மக்களிடையே நிலவிய சமய நம்பிக்கைகளாகும். ''யாதும் ஊரே யாவருங் கேளிர்'' (192) ''செய்குவங்கொல்லோ நல்வினை யெனவே'' (214) என வரும் புறநானூற்றுப் பாடல்கள் இத்தகைய நம்பிக்கைகளை வற்புறுத்தல் அறியத்தகுவனவாகும்.

அகம் புறம் பற்றிய பொருட்பகுதிகளையும் அவை பற்றியமைந்த பாடல்களின் அடியளவு, பாவகை, அரசர் வரலாறு முதலியவற்றையும் அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்து தொகுக்கப்பெற்றவை சங்கத் தொகை நூல்கள். இத்தொகுப்பு இறையனார் களவியலுரைக்கு முற்பட்ட தொன்மையுடையது

என்ற கால வரையறையினை வரம்பாகக் கொண்டு சங்கச் செய்யுட்கள் ஆராயப் பெறுதல் வேண்டும். சங்க இலக்கியத்திற் காணப்படும் சமயச் சார்புடைய கருத்துக்களில் மக்கள் கொண்டுள்ள தெய்வ நம்பிக்கை பற்றிய சில குறிப்புக்களே இங்குத் தொகுத்துச் சுட்டப்பெற்றன. இக்குறிப்புக்கள் மேலும் தெளிவாக வகைப்படுத்தி விளக்கப்பெறுதற்குரியன. இன்றுவரை நம் தமிழகத்தில் விரிவு பெற்று வழங்கும் தெய்வப் பெயர்கள் பலவற்றுள் சங்கச் செய்யுட்களில் வழங்கும் பெயர்களை அடிப்படையாகக் கொண்டே அத்தெய்வங்களைப் பற்றிய வழிபாடுகள் குறிக்கப்பெற்றன. நெடுங்காலமாகச் சைவர்களும் வைணவர்களும் தத்தம் தெய்வத் தொடர்புடைய திருமந்திரங்களாகக் கொண்டு போற்றி வரும் ஐந்தெழுத்து, எட்டெழுத்து என்னும் மந்திரங்களுக்கு, முறையே மூலமாகவுள்ள சிவன், நாராயணன் என்னுந் திருப்பெயர்கள் நமக்குக் கிடைத்துள்ள சங்கச் செய்யுட்களில் இடம் பெறவில்லை. எனினும், சங்சச் செய்யுட்களில் முக்கட் செல்வனாகிய சிவபெருமானைக் குறித்தும் மாயோனாகிய திருமாலைக் குறித்தும் வழங்கப் பெற்றுள்ள திருப்பெயர்களையும் தொடர்களையும் பிற செய்திகளையும் அடிப்படையாகக் கொண்டே சைவ சமய தத்துவவுண்மைகளையும் வைணவ சமய தத்துவவுண்மைகளையும் ஓரளவு புரிந்து கொள்ள முடியும் என்பது எனது கருத்தாகும்.

### அடிக்குறிப்பு :

1. திருக்குறள் — கடவுள் வாழ்த்து
2. பதிற்றுப்பத்து — 30
3. அகநானூறு — 387, பாலைக்கலி – 10
4. கலித்தொகை — 44

# 10. சங்க இலக்கியத்தில் வரலாற்று நோக்கு

அ. கிருஷ்ணசாமி

பொதுவாக வரலாற்றை வரைவதற்கும், கற்பதற்கும் பல முறைகளை முற்கால வரலாற்று ஆசிரியர்கள் பின்பற்றியுள்ளனர். வரலாற்று நூல்களுக்கு இரு பெரும் கிரேக்கப் பெருமக்கள் வரலாற்றுத் தந்தைகள் என அழைக்கப் பெற்றனர். அவ்விருவர் ஹெரோடோடஸ் (Herododus) தியூசிடைடிஸ் (Thucydides) என்ற பெரியோராவர். முன்னவர் எழுதிய முற்கால வரலாறு (Objectivemethod) அல்லது வரலாற்று நிகழ்ச்சிகள், நடந்தபடியே உண்மைக்கு மாறுபடாமல் தகுந்த ஆதாரங்களுடனும், காலவரன்முறை பிறழாமலும் கூறுவதாகும். வரலாறு உண்மைச் செய்திகளை நிகழ்ச்சிநிரல்படக்கூறி மக்களுடைய மனவிருளைப் போக்கும் கருவியாக இருத்தல் வேண்டும். ஆனால் ஹெரோடோடஸிற்குப் பிறகு கிரேக்க வரலாற்றை எழுதிய தியூசிடைடிஸ் என்பார் (Subjectivemethod) என்ற முறையில் (Peloponnesiar war) என்ற வரலாற்று நூலை அமைத்தார். அந்நூலில் கிரேக்க நாட்டில் (Sparta and Athens) என்ற இரு இராச்சியங்களிடையே நடந்த பெரும்போர் நிகழ்ச்சிகளைக் கூறி அப்போர் ஏன் முப்பதாண்டுகள் நடந்தது என்றும், அது கிரேக்க நாகரிகம் மறைவதற்கு எவ்விதம் காரணமாயிற்று என்றும் காட்டி வன்முறைடைய அடிப்படையாகக் கொண்டு நடைபெறும் எல்லா வரலாற்று நிகழ்ச்சிகளும் நாகரிக மக்களின் வாழ்க்கையைச் சீர்கேடு அடையச் செய்கின்றன என்னும் பேருண்மையையும் கற்போர் மனத்தில் பதியும்படி எழுதியுள்ளார். இவ்விருவித முறைகளும், (Objective and Subjective) இன்றும் வரலாற்றாசிரியர்களால் கையாளப்படுகின்றன.

இவ்விருவித முறைகள் அன்றியும் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டு வரலாறு எழுதுவதை காரல் மார்க்ஸ் (Kari Marx) என்ற ஆசிரியர் தன்னுடைய Capital என்ற நூலில் பொருளாதார — வரலாற்று முறையைப் பின்பற்றியுள்ளார். இந்த நூற்றாண்டில் வாழ்ந்து மறைந்த அர்நால்டு

தாயன்பி (Arnold Toynbee) என்ற ஆசிரியர் '' வரலாற்று நிகழ்ச்சிகள் உயர்சமயங்களாகிய சைவம், வைணவம், கிறித்தவம், இஸ்லாம் முதலிய சமயங்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருக்கின்றன என்று தன்னுடைய 'Study of History' என்னும் நூலில் கூறுவர். மகாத்மா காந்தியடிகள் எழுதிய தன்னுடைய சுயசரிதைக்கு '' My experiments with Truth '' அல்லது சத்திய சோதனை என்று பெயரிட்டார். வாய்மையை அடிப் படையாகக் கொண்டு இறைவனுடைய அருளைப்பெற முயற்சி செய்தார். அவருடைய நோக்கில் வாய்மை அல்லது மெய்ப் பொருள், கடவுள் என்றும் வரலாற்று நிகழ்ச்சிகள் தெய்வத்தின் நியதிக்குட்பட்டு நடக்கின்றன என்றும் நாம் காணலாம்.

தமிழக வரலாற்றை எழுதுவதற்கும் அதை நன்கு உணர் வதற்கும் சங்ககால இலக்கியங்கள், முற்கூறப்பெற்ற முறைகளில் பலவற்றைப் பின்பற்றியிருப்பதை இக்கட்டுரையில் எடுத்துக் காட்டுவது நோக்கமாகும். தமிழ் நாட்டிற்கு வரலாறு இல்லை யென்றும், வரலாற்றுணர்விற்கும், தமிழர்களுக்கும் வெகுதூரம் என்றும் மேலை நாட்டாசிரியர்கள் கூறி வந்தனர். தமிழ்நாட்டு வரலாற்றைச் சங்ககால இலக்கியங்களின் துணைகொண்டு முதல் முதலில் எழுதிய பி. டி. சீனிவாச ஐயங்கார் அவர்களும் 'If chronology is the eye of history South Indian History must be eternally blind' என்று கூறிப்போந்தார். அவ்வாறு கூறுவதற்குப் பல ஏதுக் கள்இருந்தன. தமிழக வரலாற்றுக்கு ஏற்ற கல்வெட்டுகள், செப் பேடுகள், வெளிநாட்டு, உள்நாட்டு இலக்கியங்கள், நாணயங்கள் முதலியவை அவருடைய காலத்தில் முழுவதும் கிடைக்கவில்லை. மனோன்மணீயம் என்ற சிறந்த நாடகத்தை எழுதிய பேராசிரியர் பி.சுந்தரம் பிள்ளை மாத்திரம் '' உண்மையான இந்திய வரலாறு தென்னிந்தியாவில் (தமிழ்நாட்டில்) உள்ள தாம்பிரபரணி, காவிரி, வைகை, பாலாறு முதலிய ஆறுகள் பாய்ந்து வளம் படுத்திய படுகைகளில் தொடங்கவேண்டுமெனக் கூறியது மிக்க பொருள் பொதிந்ததாகும்.

தமிழகத்தின் எல்லைகள் : தொல்காப்பியத்திற்குப் பாயி ரம் எழுதிய பனம்பாரனார் ''வடவேங்கடம் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகம் '' என்று தமிழகத்தின் எல்லையைக் கூறிப்போந்தார். 13-ஆம் நூற்றாண்டில் நன்னூலை எழுதிய பவணந்தி முனிவர் 'குணகடல், குமரி, குடகம் வேங்கடம் எனும்

நான்கெல்லையுள் இருந்தமிழ்க் கடலுள்' என்று தமிழ் நாட்டின் எல்லையைக் கூறியுள்ளார். ஆனால், இப்பொழுதுள்ள எல்லை களே சங்க காலத்திலும் அதற்கு முன்னரும் இருந்தனவா என்று நாம் ஆராய வேண்டும்.

Arnold toynbee என்ற வரலாற்றுப் பேரறிஞர் 31 பகுதிகளாகப் பிரித்து 8000 பக்கங்களுக்குமேல் எழுதிய '' நாக ரிகங்களின் வரலாறு '' என்னும் நூலில் இதுகாறும் தோன்றி, மறைந்து, இன்றும் நிலைபெற்றுள்ள நாகரிகங்களைச் சுமார் 30 நாகரிகங்களாகக் கணக்கிட்டு அவற்றை (1) முதல் தலை முறை (Primary) நாகரிகங்கள், (2) இரண்டாவது தலை முறை நாகரிகங்கள் (3)மூன்றாவது தலைமுறை நாகரிகங்கள் எனப் பாகுபாடு செய்துள்ளார். அவற்றுள் முதல் தலைமுறை யைச் சேர்ந்த நாகரிகங்கள் (1) எகிப்திய,(2) சுமேரிய, (3) கிரீட், (4) கிரேக்க, (5) சிரியா, (6) சிந்துசமவெளி, (7) ஷாங்கல்சர், (சீனா) (8) மாயன், (9) ஆந்திய நாகரிகங்களாகும். மேற்கூறப் பெற்ற நாகரிகங்களிலிருந்து இரண்டாவது தலைமுறையாக (1) மேலை நாட்டு நாகரிகம் (Western) (2) வைதீக கிறித் தவ நாகரிகம் (Orthodox Christian) (3) இரானிக் (Iranic) 4) அராபிக் (Arabic) (5) இந்திக் (Indic) (6) சைனிக் (7) பாபிலோனியன் (Babylonian) (8) ஹிட்டைட் என்ற எட்டு நாகரிகங்கள் தோன்றின.

இந்த இரண்டாவது தலைமுறை நாகரிகங்களிலிருந்து மூன் றாவது தலைமுறை நாகரிகங்களான 1) மேலைக் கிறித்தவ நாகரிகம் (2) ருஷ்யநாடடு நாகரிகம் 3) இஸ்லாமிய நாகரிகம் (4) இந்து சமூக நாகரிகம் (5) சீன நாட்டு நாகரிகம் (6) தூரக் கிழக்கு நாகரிகம் (7) வட, தென் அமெரிக்க சமூக நாகரிகம் தோன்றின என்றும் தாயன்பி கூறுவர்.

மேற்கூறப்பெற்ற 23 நாகரிகங்களில், சிந்து சமவெளி நாக ரிகம் முதல்தலைமுறை நாகரிகமாகக் கருதப்படுகிறது. சிந்து சமவெளி நாகரிகத்திலிருந்து இந்திக் (Indic) நாகரிகம் தோன் றியது. இந்திய நாகரிகம் மூன்றாவது தலைமுறை நாகரிகம் எனக் கூறுவார். சிந்து சமவெளி நாகரிகத்தை அங்குக் கிடைத் துள்ள பொருள்களிலிருந்தும், எழுத்துக்கள், கட்டடங்கள் முத லியவற்றிலிருந்தும் திராவிட நாகரிகம் என்று பலநாட்டு வர லாற்று அறிஞர்கள் தங்களுடைய ஆராய்ச்சியின் பயனாக அறுதி யிட்டுள்ளார்கள். இந்தத் திராவிட அல்லது தமிழக நாகரிகம்,

வடமேற்கே சிந்து நதி தீரத்திலுள்ள ஹரப்பா, மொகஞ்சோதரோ முதற்கொண்டு தெற்கே ஆதிச்சநல்லூர் வரையில் பரவியிருந்ததெனப் பழம் பொருள் அகழ்வு ஆராய்ச்சியாளர்களால் கருதப்பெறுகிறது. அக்காலத்தில் பரவியிருந்த திராவிட நாகரிகம் குமரிமுனையைக் கடந்து இப்பொழுது இந்துப் பேராழி என்று கூறப்பெறும் சமுத்திரத்தில் ஆப்பிரிக்காவோடும், மடகாஸ்கர் தீவோடும், ஆஸ்திரேலியா கண்டத்தோடும் இணைந்து நின்ற லெமூரியாக் கண்டம், அல்லது குமரிக்கண்டம் என்ற மிகப் பெரிய நாடாக விளங்கியது. அதுவே வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தமிழகமாகும்.

''ஆசியாக் கண்டத்திலுள்ள சந்தா தீவுகளிலிருந்து, ஆப்பிரிக்கா கண்டத்தின் கிழக்குக் கடற்கரை வரையிலும் மடகாஸ்கார் தீவு வரை பரவியுள்ள இந்துப் பேராழி பல ஊழிகளுக்கு முன் மிகப் பெரியதொரு நிலப்பரப்பாகப் பரவியிருந்தது. இந்தக் கண்டமே லெமூரியாக் கண்டம் அல்லது குமரிக் கண்டம் என்று அழைக்கப்பட்டது. இது தென்னிந்திய திராவிட மக்களின் பிறப்பிடமும் திராவிட நாகரிகத்தின் தொட்டிலுமாகும். (1) விந்திய மலைக்குத் தெற்கிலுள்ள நாவலந்தீவு என்ற நிலப்பரப்பு தமிழகம் என்ற பெயருடன் விளங்கியது. இக்கண்டம் ஆப்பிரிக்கா (Africa) ஆஸ்திரேலியா கண்டங்களுடன் இணைந்து தூரக்கிழக்கில் காம்சட்கா வரையிலும் பரவியிருந்ததெனவும் கூறுவர் (2) காம்சட்காவில் உள்ள மக்களும், நியூசிலாந்தில் உள்ள மயோரியர்களும் பேசும் மொழியிலும் பல தமிழ்ச்சொற்கள் விரவியுள்ளன என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். குமரிக்கண்டத்தில் வாழ்ந்த மக்களுடைய மொழியும் பண்பாடும், சுமேரியா, அஸ்ஸிரியா, பாபிலோனியா, எகிப்து முதலிய நாடுகளிலும் பரவியுள்ளன என்று சுவாமி விவேகானந்தர் கூறுவர்.

இவ்வாறு பரவியிருந்த குமரிக் கண்டத்திற்குப் பெரியதொரு கடல் கொந்தளிப்பு ஏற்பட்டு இக்கண்டம் இந்துப் பேராழியாக மாறுவதற்கு முன் முதலாம் நிலந்தரு திருவிற்பாண்டியன் என்னும் பாண்டிய மன்னன், பஃறுளியாற்றின் கரையில் இருந்த தென் மதுரையில் முதற்சங்கத்தை கி.மு.16500 ஆண்டிற்கு முன் அமைத்திருந்தான். கி.மு.16500–16000 ஆண்டுகளின் இடைப் பகுதியில் தாரகாட்சன், கமலாட்சன் வித்யுன்மாலி என்ற ஆப்பிரிக்க நாட்டு நீக்ரோத் தலைவர்கள் பாண்டியர்களுடைய ஆட்சியை வீழ்த்தித் தங்களுடைய அசுர ஆட்சியை நிலைபெறச் செய்தனர்.

கி.மு.14500 முதல் 14000 ஆண்டுகளுக்கு இடையில் குமரிக் கண்டத்தைச் சிங்கமுகன், தாருகாசுரன், பானுகோபன் என்ற அசுரர்கள் கைப்பற்றினர். அவர்களைக் குமரவேள் என்ற பாண்டி மன்னன் தன்னுடைய கூர்மையான வேலாயுதத்தினால் வென்று மீண்டும் தமிழ்ச் சங்கத்தை நிலைபெறச் செய்தான். பின்னர் பன்னூறாண்டுகள் கழித்துப் பெரியதொரு பூகம்பம் தோன்றவே, குமரிக்கண்டத்தின் பெரும்பகுதி கடலுள் ஆழ்ந்தது. இதன்பிறகுதான் குமரவேள் கவாடபுரத்தில் இடைச் சங்கத்தை அமைத்தார்.

மேற்கூறப்பெற்ற செய்திகள் கந்தபுராணத்தில் கூறப்பெற்ற செய்திகளால் வலிவு பெறுகின்றன. இச்செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்பெறுகின்றனவா என்பதை நாம் இப்பொழுது காண வேண்டும்.

மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினால் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்

(கலி. 104)

வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி.

(சிலம்பு 11:18–22)

மேற்கூறப்பெற்ற சங்க இலக்கிய வரிகள் குமரிக்கண்டம் கடலால் அழிக்கப்பெற்றதையும், அப்பெருநிலப்பகுதி இந்துப் பேராழியாக மாற்றம் அடைந்ததையும் பற்றிக் கூறுகின்றன. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் குமரி மலைக்கும் பஃறுளியாற்றுக்கும் இடையே 700 காவதத்தூரம் இருந்ததென்றும், இந்தப் பெருநிலப்பரப்பில் ஏழ்தெங்கநாடு, ஏழ்மதுரை நாடு, ஏழ்முன்பாலை நாடு, ஏழ்பின் பாலை நாடு, ஏழ்குன்ற நாடு, ஏழ்குணகாரை நாடு, ஏழ்குறும்பனை நாடு என்ற 49 நாடுகள் கடலுள் அமிழ்ந்தன என்றும் கூறுவர். இந்த இலக்கியச் சான்றுகள் குமரிக்கண்டம் அல்லது இலமுரியா கண்டம் ஒன்று

இருந்து அதன் பெரும்பகுதி இரண்டு கடற்கோள்களால் அழிந்து போயின என்னும் வரலாற்றுச் செய்தியை வற்புறுத்துகின்றன.

**தமிழ்நாட்டில் சங்கம் அமைந்திருந்ததற்குரிய ஆதாரங்கள்**

> தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.
>
> ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
> மாங்குடி மருதன் தலைவனாக
> உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின்
> புலவர் பாடாது வரைகஎன் நிலவரை (புறம். 72)

என்று கூறிய வஞ்சின மொழியில் மாங்குடி மருதன் தலைமையில் புலவர் கூட்டம் ஒன்றிருந்தது புலனாகின்றது. சிறுபாணாற்றுப் படையில் 66—67-ஆம் வரிகள்

> தமிழ்நிலை பெற்ற தாங்கரும் மரபின்
> மகிழ்நனை மறுகின் மதுரை — என்றும்
> தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே. (புறம். 58—13)

என்றும் சங்க நூல்கள் கூறுகின்றன. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர் '' நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக்கிழி தருமிக்கு அருளி னோன் காண்'' (திருப்புத்தூர்த் திருத்தாண்டகம்) என்றும் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்கவாசகர் தம் திருக் கோவையில் ''உயர்மதிற் கூடலில் ஆய்ந்த ஒண்தீந்தமிழ்'' என் றும் கூறியுள்ளனர். கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய இறையனார் அகப்பொருள் உரையில் முச்சங்கங்கள் இருந்த வரலாற்றுக் குறிப்புகள் காணப்பெறுகின்றன. குமரி முனைக் குத் தெற்கில் கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் முதற்சங்கம் அமைந்திருந்ததென அறிகிறோம். இத்தலைச் சங்கத்தில் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள், முருகவேள், குபேரக்கடவுள் முதலாக 549 புலவர்கள் இருந்தனர். அன்றியும் அகத்தியர், முரஞ்சியூர், முடிநாகராயர் முதலிய மானிடப் புலவர்களும் அதில் இடம் பெற்றிருந்தனர். காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் என்ற அரசன் ஈறாக 83 பாண்டியமன்னர்கள் முதற்சங்கத்தைப்பாதுகாத் தனர். அவர்களுள் ஏழுபேர் புலவர்களாக நூல்கள் இயற்றினர். 4449 புலவர்களுடைய பாடல்கள் முதற்சங்கத்தில் அரங்கேற்றம் செய்யப்பெற்றன. அகத்தியம் என்ற நூல் முதற்சங்கப் புலவர் களுக்கு இலக்கணமாக இருந்தது. முதுநாரை, முதுகுருகு கள

ரியாவிரை, பரிபாடல் முதலிய நூல்கள் முதற்சங்கப் புலவர் களால் ஒப்புக்கொள்ளப்படுகின்றன.

தென் மதுரையில் அமைந்திருந்த முதற்சங்கம் முதல் ஊழியில் ஏற்பட்ட கடற்கோளினால் அழிவுற்றபிறகு பாண்டியர் தலை நகரமும் சங்கத்தின் இருப்பிடமும் கவாடபுரத்திற்கு மாற்றப் பெற்றன. கவாடபுரத்தில் அமைந்திருந்த சங்கம் இடைச்சங்கம் அல்லது இரண்டாவது சங்கமெனப் பெறுகிறது. இச்சங்கத்தில் 59 புலவர்கள் அங்கம் வகித்தனர். அவர்களுள் அகத்தியர், தொல்காப்பியர், இருந்தையூர் கருங்கோழியர், மோசிகீரனார், வெள்ளூர் காப்பியனார், கீரந்தை என்போர் சிறப்புமிக்கவராவர். இச்சங்கத்தில் 3700 புலவர்கள் தங்களுடைய பாடல்களை அரங் கேற்றம் செய்ததாகவும் இச்சங்கம் 3700 ஆண்டுகள் நிலை பெற்றிருந்ததாகவும் இறையனார் அகப்பொருள் உரையில் கூறப் பெற்றுளது. இச்சங்கத்துப் புலவர்களுக்கு அகத்தியம், தொல் காப்பியம், மாபுராணம், இசை நுணுக்கம், பூதபுராணம் முதலிய நூல்கள் இலக்கண நூல்களாக இருந்தன. கலி, குருகு, வெண் டாழி, வியாழமாலை அகவல் முதலிய நூல்களை இரண்டாவது சங்கப்புலவர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர்.

இடைச்சங்கம் அமைந்திருந்த கவாடபுரம் இரண்டாவது கடற்கோளினால் அழிவுற்றது. பாண்டிய மன்னனும், சங்கப் புலவர்களும் கவாடபுரத்தைக் கைவிட்டு வைகையாற்றின் தென் கரையில் அமைந்துள்ள மதுரை நகரை அமைத்துப் பாண்டிய அரசருடைய தலைமை நகரத்தையும் மூன்றாம் சங்கத்தையும் அமைத்தனர். இதுவே மூன்றாம் அல்லது கடைச்சங்கமெனப் பெயர் பெற்றது. இதில் 49 புலவர்கள் தலைமை வகித்தனர். இவர்களுள் சிறுமேதாவியர், சேந்தம் பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர் கிழார், நல்லந்துவனார், மருதம் இளநாகனார், நக்கீரர் முதலிய பெரும்புலவர்களும் இருந்தனர். 449 புலவர் களுடைய பாடல்கள் மூன்றாம் சங்கத்தினால் ஒப்புக்கொள்ளப் பெற்றன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் காப்பியங்கள் முதலியவை கடைச்சங்க காலத் தில் தோன்றிய நூல்களாகும். 1850 ஆண்டுகளுக்கு முந்தியது மூன்றாம் சங்கம். மூன்றாம் சங்கத்தை அமைத்த பாண்டிய அரசன் முடத்திருமாறன் என்பவன். இதன் இறுதிக்காலத்தில் உக்கிரப் பெருவழுதி என்ற பாண்டிய மன்னன் வாழ்ந்தான்.

முதல் இரண்டு கடற்கோள்களும் பாண்டிய நாட்டிற்கு ஏற்பட்ட இயற்கை எதிர்ப்புகளாகும். இவற்றிற்கு அஞ்சாமல் பாண்டிய மன்னர்கள் தங்களுடைய தலைமை நகரத்தையும், தமிழ்ச் சங்கத்தையும், தொடர்ந்து நடத்திவந்தமையால் தமிழர்களுடைய நாகரிகமும், பண்பாடும் தொடர்ந்து வளர்ந்து இந்நாள் வரையில் நிலைபெற்றுள்ளன. தங்களுக்கு ஏற்பட்ட இடுக்கண்களுக்கு அஞ்சாமல் அவற்றை எதிர்த்துச் சமாளிப்பதுதான் நாகரிக மக்களின் வாழ்க்கையாகும் என வரலாற்றறிஞர் கூறுவர்.

**மூன்றாம் சங்கத்தின் கால எல்லை**

தமிழ்நாட்டின் வரலாற்றைக் காலவரன்முறைப்படி எழுதுவதற்கு மூன்றாம் சங்கத்தின் காலத்தை உறுதி செய்யவேண்டும். அக்காலத்தைத் தொல்காப்பியத்தின் காலத்தைக் கொண்டு நாம் அறியக்கூடும். இடைச்சங்கம், கடைச்சங்கம் ஆகிய இரு அமைப்புகளுக்கும் இலக்கணமாக அமைந்த நூல் தொல்காப்பியமாகும். தொல்காப்பியத்தின் காலத்தைக் கொண்டு பிற சங்க நூல்கள் எப்பொழுது தோன்றின என்றும் நாம் உணரக்கூடும். தொல்காப்பியத்தின் காலத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்த பெருமக்கள் பின்வருவதுபோல் கூறியுள்ளனர்.

| | | |
|---|---|---|
| க. வெள்ளைவாரணனார் | — | கி.மு. 5320 |
| கே. கனகசபாபதி பிள்ளை | — | கி.மு. இரண்டாம் நூற்றாண்டு. |
| என். சுப்பிரமணியன் | — | கி.மு. நான்காம் நூற்றாண்டு முதல் மூன்றாம் நூற்றாண்டு வரையில். |
| எஸ். வையாபுரிப் பிள்ளை | — | கி.பி. நான்காம் நூற்றாண்டு. |

மேற்கூறப்பெற்ற கால எல்லைகளுள் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடியது எந்தக்காலம் என்பதை நாம் இப்பொழுது உறுதி செய்ய வேண்டும். சங்க இலக்கியங்களில் களப்பிரர்களைப் பற்றியோ, பல்லவர்களைப் பற்றியோ கூறப்பெறவில்லை. கி.பி.575-ஆம் ஆண்டில் கடுங்கோன் என்ற பாண்டிய மன்னன் மதுரை நகரைக் களப்பிரனாகிய கர்நாடக வேந்தனிடமிருந்து கைப்பற்றியதாக வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. ஆகையால், கடைச்சங்க காலத்திய இலக்கியங்கள் கி.பி.5-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர்த் தோன்றியிருக்க வேண்டும். தொண்டை மண்டலத்தைப்பற்றிய பல்லவ அரசன் சிம்மவர்மன்,

கரிகாற்சோழனுடைய சமகாலத்தவனாகிய தொண்டையன் இளந்திரையனிடமிருந்து காஞ்சிபுரத்தைக் கைப்பற்றவில்லை. சாணக்கியர் எழுதிய அர்த்தசாத்திரத்தில் பாண்டிய கவாடகம் என்னும் முத்துக்களைப்பற்றிக் கூறப்பெறுகின்றது. சங்க இலக்கியத்தில் நந்தர் என்னும் சொல் உள்ளது. பாடலிபுரத்தில் கங்கை நதியின் கரையில் நிலவரை ஒன்றில் நந்தவமிசத்து அரசனாகிய தனநந்தன் தன்னுடைய செல்வக்குவியலைப் புதைத்து வைத்திருந்ததாகப் பின்வருமாறு மாமூலனார் என்ற புலவர் கூறுவர்.

பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலி குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ (அகம். 265)

நந்தவமிசத்துக் கடைசி அரசனாகிய தனநந்தன் கி.மு.350-இல் ஆட்சி புரிந்துள்ளான். இந்த அரசனுடைய செல்வத்தைப் பற்றியே மாமூலனார் குறிப்பிட்டுள்ளார் போலும். ஆகையால் கி.மு.350-ஆம் ஆண்டிற்குப் பிறகு சங்க இலக்கியங்கள் தோன்றியிருக்க வேண்டும். நந்தர்களுக்குப் பிறகு மௌரியப் பேரரசனாகிய பிந்துசாரன் கி.மு.275 வரையில் ஆட்சிபுரிந்து தென்னாட்டின் மீது படையெடுத்ததாகக் கருதப்பெறுகிறது. இந்த மௌரியப் படையெழுச்சி பற்றியும் சங்க இலக்கியங்களில் குறிப்புக்கள் வருகின்றன. ஆகையால் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு கடைச்சங்கம் அமைந்திருக்க வேண்டும்.

கி.பி.350-ஆம் ஆண்டைச் சேர்ந்த காலப்பகுதியில் தென்னிந்தியாவின் மீது படையெடுத்துக் காஞ்சிபுரம் வரையில் வந்த சமுத்திரகுப்தனைப்பற்றிச் சங்க இலக்கியங்களில் குறிப்புக்கள் இல்லை. ஆகையால் கடைச்சங்க காலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதென்றும், கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதென்றும் கூறலாம்.

## ஐந்திணைப் பிரிவுகள் அகம்-புறம் வாழ்க்கை

சங்க கால இலக்கியங்களில் தமிழ் கூறும் நல்லுலகம் இயற்கை அமைப்பிற்கு ஏற்றவாறு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகையாகப் பிரிக்கப்பெற்றிருப்பதும், மக்களின் வாழ்வியல், அகவாழ்வு புறவாழ்வு என்று பிரிவுற்றிருப்பதும் தமிழக வரலாற்றின் சிறப்புத் தன்மைகளாகும். இவ்

வைந்து பிரிவுகளுள் முதல் நான்கு பிரிவுகளைப் பற்றி மாத்திரம் தொல்காப்பியப் பொருளதிகாரச் செய்யுள் ஒன்று கூறுகிறது.

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே
(தொல். அகத்திணையியல்—5)

குறிஞ்சி நிலத்தில் வேடர், குறவர்களுடைய வாழ்க்கைகளும், முல்லை நிலத்தில் ஆயர்களுடைய வாழ்க்கையும், மருத நிலத்தில் உழவுத் தொழில் வாழ்க்கையும் நெய்தல் நிலத்தில் கடல் படு பொருட்களைக் கொண்டு வாழும் வாழ்க்கையும் தோன்றின என்று இலக்கிய, வரலாற்று அறிஞர்கள் கூறுவர். பாலை நிலத்தில் மறத்தொழிலாகிய ஆறலை கள்வர்களுடைய வாழ்க்கை தோன்றியதெனவும் கூறுவர். இவ்வித ஐந்திணை வாழ்க்கைகளும் நிலவமைப்பினாலும் தட்பவெப்ப நிலைகளாலும் தோன்றியவையா, மக்களுடைய முயற்சியால் தோன்றியவையா என்பதை நாம் இப்போது ஆராய்ந்தறிவது சாலச் சிறப்புடையதாகும். இன்றும் வரலாற்று அறிஞர்கள் உலகத்தின் வளமான பகுதிகளாகிய ஆற்றுப்பள்ளத்தாக்குகளில் முற்கால நாகரிகங்கள் தோன்றின என்று கூறி எகிப்து நாட்டில் நீலநதியின் பள்ளத்தாக்கில் தோன்றிய எகிப்திய நாகரிகத்தையும், யூப்ரட்டிஸ்—டைகிரிஸ் நதிகளின் பள்ளத்தாக்கில் தோன்றிய சுமேரிய நாகரிகத்தையும் சிந்து நதியின் வளப்பத்தைப் பெற்ற சைந்தவ நாகரிகத்தையும் சீனாவில் ஹோயாங்—ஹோ நதிப்பள்ளத்தாக்கில் தோன்றிய சைனிக் நாகரிகத்தையும் எடுத்துக்காட்டுகளாகக் கொள்வர். அர்னால்டு தாயன்பி என்ற வரலாற்று அறிஞர் இக்கொள்கையை மறுத்துள்ளார். வளமான இடங்களாகிய ஆற்றுப்படுகைகளிலும், பள்ளத்தாக்குகளிலும் நாகரிகங்கள் தோன்றியது உண்மையானால், உலகத்தில் காணப்பெறும் எல்லா வளமான ஆற்றுப் படுகைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் நாகரிகங்கள் தோன்றியிருக்க வேண்டும். நீலநதி, யூப்ரடிஸ்—டைகிரிஸ் நதிகள், சிந்து நதி, ஹோயாங்ஹோ ஆகிய நதிகளின் பள்ளத்தாக்குகளில் மாத்திரம் எகிப்திய, சுமேரிய ,சைந்தவ, சீன நாகரிகங்கள் தோன்றியுள்ளன. ஆனால், ஆப்பிரிக்காவில் உள்ள

காங்கோ, சாம்பசி நதிகளின் பள்ளத்தாக்குகளிலும் ஐரோப்பாவில் உள்ள ரைன், ரோன், தான்யூப், வால்கா நதிகளின் கரையோரங்களிலும், அமெரிக்காவில் உள்ள மிசிசிபி—மிசௌரி, லாரன்ஸ், அமேசான், லாபிளாட்டா நதிகளின் பள்ளத்தாக்குகளிலும், ஆஸ்திரேலியாவில் உள்ள நதிக்கரைகளிலும் எந்த விதமான நாகரிக வாழ்க்கைகளும் தோன்றவில்லை. ஆற்றுப் பள்ளத்தாக்குகள் இல்லாத கிரீஸ் நாட்டிலும், நான்கு பக்கங்களிலும் நீரால் சூழப்பெற்ற கிரிட் தீவிலும், மத்திய அமெரிக்காவில் உள்ள சுண்ணாம்புக்கல் பிரதேசமாகிய யூகாடன் தீபகற்பத்திலும், மழையையே கண்டறியாத ஆண்டிஸ் மலைப்பிரதேசத்திலும் நாகரிகங்கள் ஏன் தோன்றின என்ற கேள்வியும் எழுகிறது. ஆகையால் ஆற்று நீர்வளமுள்ள இடங்களில்தான் நாகரிகங்கள் தோன்றுகின்றன என்பது உண்மையுள்ளதாகத் தோன்றவில்லை.

தமிழ்நாட்டில் இயற்கையாக அமைந்துள்ள ஐவகையான நிலங்களும் அவ்வப்பகுதியில் வாழ்ந்த மக்களுக்குச் சில எதிர்ப்புகளைத் தோற்றியுள்ளன. அவ்வெதிர்ப்புகளைச் சமாளித்ததன் மூலமாகவே தமிழ்நாட்டின் ஐவகையான குறவர், ஆயர், உழவர், பரதவர், மறவர் முதலியோருடைய நாகரிகங்கள் தோன்றியிருக்க வேண்டும். குறிஞ்சி நிலத்தில் மக்கள் தங்களுடைய வாழ்க்கையை நடத்துவதற்கு மலைகளிலும் குன்றுகளிலும் உள்ள காடுகளில் வாழ்ந்த காட்டு மிருகங்களையும் பறவைகளையும் வேட்டையாடியே வாழ்க்கை நடத்துவதற்கு ஏற்ற வேடர்களாகவும், குறவர்களாகவும் வாழ்க்கையை ஏற்றனர். குறிஞ்சி நிலங்களில் ஆட்சியை மேற்கொண்ட சேர அரசர்கள் மலைகளின் இயற்கையான எதிர்ப்பைச் சமாளித்ததைக் குறிக்க, வில் அம்பு முதலிய ஆயுதங்களைத் தங்களுடைய கொடியில் எழுதிக்கொண்டனர். முல்லை நிலம் என்பது காடுகளையும், புல்தரைப் பிரதேசங்களையும் குறிக்கும். அங்குத் தழை, செடி, கொடிகளும் புற்களும் ஏராளமாகக் கிடைக்குமே அன்றி மக்களுக்கு ஏற்ற உணவுப்பொருட்கள் கிடைக்கமாட்டா. இந்தக் காடுகளின் எதிர்ப்பையும் புல்தரைப் பிரதேசங்களின் எதிர்ப்பையும் சமாளிக்க அம்மக்கள் ஆடுமாடுகளையும் மற்ற விலங்குகளையும் பழக்கி அவைகளுக்குத் தழை, புல் முதலிய உணவுப் பொருட்களைக் கொடுத்து, அவற்றிடமிருந்து பால், பாற்பயன், தோல் முதலியவற்றைப் பெற்று ஆயர் வாழ்க்கையைப் பின்பற்றினர்.

மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆறுகளில் உண்டான வெள்ளநீர்ப் பெருக்கினையும் மழைக்காலங்களில் கிடைக்கும் நீர்ப்பெருக்கினையும் கண்டு முதலில் துன்புற்றனர். பின்னர் ஆறுகளில் பெருகி வந்த வெள்ளநீரைக் கட்டுப்படுத்தியும் பள்ள மான இடங்களில் ஏரிகளையும் குளங்களையும் அமைத்து நீரைப் பாதுகாத்தும் கிணறுகளை அமைத்து நிலத்தடி நீரைப் பயன் படுத்தியும் உழவுத் தொழிலை மேற்கொண்டும் நெல், கரும்பு முதலிய நன்செய்ப்பயிர்களையும் மற்ற புன்செய்ப் பயிர்களையும் வளர்த்துத் தங்கள் முயற்சியினாலும் உழைப்பினாலும் உயர்வு பெற்றனர். நீர்வளம் நிறைந்த இடங்கள் சதுப்புநிலங்களாகவும் காடுகளாகவும் இருந்தன. இவற்றை நன்னிலங்களாக மாற்று வதற்குக் காடுகொன்று நாடாக்கியும், குளந்தொட்டு வளம்பெருக் கியும் மருத நில நாகரிகத்தை வளர்த்தனர்.

பெருமணல் உலகமாகிய நெய்தல் நிலத்தில் இருந்த மக்க ளுக்கு அருகில் உள்ள உப்புநீர்க்கடல்களும் பேராழிகளும் பெரியதொரு எதிர்ப்பைத் தோற்றுவித்தன. கடல்களிலும், பேராழிகளிலும் தங்களுடைய கலங்களையும் கப்பல்களையும் செலுத்தி மீன்பிடித்தல், முத்துஎடுத்தல், திரைகடல் ஓடித் திரவியம் தேடுதல் முதலிய தொழில்களை மேற்கொண்டனர்.

பாலைநிலத்தில் வேட்டையாடுதலும், மாடுமேய்த்தலும், உழவும், நெய்தற்தொழிலும் நடைபெற்றன. ஆகையால் பாலை யின் சூழ்நிலைக்கேற்றபடி ஆறலை கள்வர் தங்கள் வாழ்க்கை யைத் தொடங்கினர். இதையேதான் ஔவையார் நாடாக ஒன்றோ, காடாக ஒன்றோ, அவலாக ஒன்றோ மிசையாக ஒன்றோ என நிலத்தைப் பகுத்துக் கூறியுள்ளார்.

**தமிழ்நாட்டு வரலாற்றில் தமிழர் பண்பாட்டு வளர்ச்சி**

சங்ககாலநாகரிகம் ஐந்திணைப் பிரிவுகளை அடிப்படை யாகக்கொண்டு அந்தந்தத் திணைப்பகுதிகளில் தோன்றிய எதிர்ப் புகளைச் சமாளித்ததனால் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற நிலப்பகுதிகளில் அந்தந்தப் பகுதிக்கேற்ற நாக ரிகங்கள் தோன்றின. இவைகள் ஒன்றோடு ஒன்று இணைந்து தமிழ்ச் சமுதாயத்தை ஒன்றுபடுத்தின. ஒரு நாகரிகத்தின் வளர்ச்சிக் காலத்தில் ஒரு சமுதாயத்தில் அடங்கியுள்ள மக்கள் தொகையை இரு கூறாகப் பிரிக்கலாம்.

(1) வழிகாட்டுவோர். (2) பின்பற்றுவோர்.
(Creative Individuals and Uncreative Majority)

வழிகாட்டுவோரைச் சமுதாயத்தின் தலைவர்கள் எனக் கூறலாம். அவர்களின் தொகை சிறியதேயாகும். அவர்களுடைய கொள்கை களையும் போதனைகளையும் பின்பற்றுவோர் பெருந்தொகை யினராவர். இவ்விருபிரிவினர்களில் வழிகாட்டுவோரை (Creative Individuals) என்றும் அவர்களைப் பின்பற்றும் பெரும்பான்மை மக்களைக் (Uncreative Majority) என்றும் (Arnold Toyanbee) கூறுவர்.

சங்ககாலத்தில் தமிழ்நாட்டு முடியுடை வேந்தர்களுக்கும் சிற்றரசர்களுக்கும் வழிகாட்டிகளாகவும், அமைச்சர்களாகவும், தூதர்களாகவும், மெய்ப்பொருள் உணர்த்தும் தத்துவ ஞானி களாகவும் புலவர்கள் விளங்கினர். அறத்திற்கும் மறத்திற்கும், நன்மைக்கும் தீமைக்கும் செய்யத்தகுவனவற்றிற்கும் செய்யத் தகாதவற்றிற்கும் உள்ள வேற்றுமைகளை விளக்கி வேந்தர்களை யும், வேளிர்களையும் நல்வழிப்படுத்தினர். அவர்களிடம், பொருள்பெறுவது முக்கிய நோக்கமாயினும், உண்மையைக் கூறிக் கடமைகளை உணர்த்தியவர்கள் சங்க காலப் புலவர்கள். இப் புலவர்களுடைய பாடல்களிலிருந்து சங்ககால மக்களின் பண் பாட்டையும் அதைப் புலவர்கள் போதித்த முறைகளையும் நாம் சிறிது ஆய வேண்டும்.

## அன்புடைமையும் நட்பும்

சங்க காலத்தில் சமுதாய அமைப்பில் மக்களிடத்திலும் மற்ற உயிர்களிடத்திலும் அன்பு வேண்டும் என்ற சிறந்த கொள் கையைச் சங்கப்புலவர்கள் வற்புறுத்தியுள்ளனர். அக்கால மக்கள் ஒருவருக்கொருவர் உயிரையே விடுவதற்குரிய பண்புடையவர் களாக இருந்தனர். பிசிராந்தையார், பொத்தியார் என்ற இரு புலவர்கள் கோப்பெருஞ்சோழனுடன் மிகுந்த நட்புகொண்டு அவர் வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தபோது தாங்களும் வடக் கிருந்து உயிர்விடத் துணிந்தனர். (புறம். — 215, 216, 222)

இவ்விருவருள் பிசிராந்தையாரின் அன்புடைமைப் பற்றிக் கோப்பெருஞ்சோழன்,

தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
பிசிரோன் என்பஎன் உயிரோம் புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே (புறம். – 215)

இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே
தன்பெயர் கிளக்கும் காலை என்பெயர்
பேதைச் சோழன் என்னும் சிறந்த
காதற் கிழமையும் உடையன்; அதன்தலை
இன்னதோர் காலை நில்லலன்
இன்னே வருகுவன் ஒழிக்கஅவற்கு இடமே (புறம். - 216)

என்று கூறிய சொற்களும் பொத்தியார் பாடிய பின்வரும் அடிகளும்கொண்டு சங்ககாலத்துச் சமுதாயம் அன்புடைமை என்னும் அடிப்படையில் அமைந்திருந்தது எனக் கூறலாம். பொத்தியார்,

அழலவிர் வயங்கிழை பொலிந்த மேனி
நிழலினும் போகா நின்வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென
என்னிவன் ஒழித்த அன்பிலாள

(புறம். – 222)

நிலைபெறு நடுக லாகியக் கண்ணும்
இடங்கொடுத் தளிப்ப மன்ற உடம்போடு
இன்னுயிர் விரும்பும் கிழமைத்
தொன்னப் புடையார் தம்முழைச் செலினே (புறம். - 223)

எனக் கோப்பெருஞ்சோழனுடைய அன்பையும், நட்பையும் புகழ்ந்துள்ளார்.

ஆதனுங்கன் என்ற குறுநில மன்னனிடம் கள்ளில் ஆத்திரையனார் என்ற புலவர் மிக்க அன்புகொண்டிருந்தார். அவருடைய அன்பு எத்தகையது என்பதனை அப்புலவரே பின்வருமாறு வெளிப்படுத்தியுள்ளார். "இறைவ, நீ எப்பொழுதும் என் நெஞ்சில் இடம் பெற்றுள்ளாய். என் நெஞ்சை யாராவது திறந்து பார்த்தால் அதனுள் உன்னையே காண்பர். நான் உன்னை எப்பொழுதும் மறக்கமாட்டேன். என்னுயிர் என் உடம்பை விட்டுப் பிரிந்துபோகும் காலத்தில் தான் உன்னை நான் மறந்துவிட

முடியும்.'' (புறம்—175) ஒருவற்கு ஒரு துன்பம் உண்டாகில் அவ்வூரில் இருந்த மக்கள் அனைவரும் துன்புறுவர். ஒல்லையூர் கிழான் மகன் சாத்தன் இறந்தபொழுது கீரத்தனார் என்ற புலவர் ஒரு முல்லைக் கொடியை நோக்கி

'' இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி அணியாள்
ஆண்மை சான்ற ஆடவர்க் கடந்த
வல்வேல் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே (புறம். - 242)

என்று கூறிய செய்யுள் நம்முடைய நெஞ்சை உருக்குவதாகும். சங்க காலப்புலவர்கள் மறுமையிலும் தங்கள் அன்பும் நட்பும் தொடர வேண்டுமெனவும் விரும்பினர். வேள்பாரி இறந்தபிறகு அவன் மகளிரைப் பாதுகாப்பில் வைத்துவிட்டு, கபிலர் பாரியைத் தன் மனக்கண்ணில் கண்டு, ''இப்பிறப்பில் நம் இருவரையும் கூட்டி ஒன்றிய நட்பால் உயர்வாழ்வு வாழச்செய்த நல்வினை மறுபிறப்பிலும் உன்னோடு கூடி உறையும் வாழ்வை நல்குவதாக'' எனப் பாடினார். (புறம். — 236)

### பிறர்க்குதவி செய்தல் தன்னலமின்மை

தன்னலம் கருதாது நாட்டு மக்களின் நலத்தைக் கருதுவதும் சங்ககாலப் புலவர்களின் நோக்கமாகும் என்பதற்குப் புறநானூற்றில் பல சான்றுகள் உள்ளன. சங்ககால மக்களுக்கு நல்வழி காட்டுவோராக இருந்த இருபுலவர்களை மட்டும் இங்கு நாம் பார்க்கலாம். முதலாவதாகப் பாண்டியன் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

உண்டால் அம்ம இவ்வுலகம், இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே, முனிவிலர்,
துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சி
புகழெனின் உயிருங் கொடுக்குவர், பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர், அயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே (புறம். — 182)

இப்புற நானூற்றுச் செய்யுள் உலகப் பேரறிஞர்களும் வழி காட்டிகளும் சேர்ந்து புகழத்தக்க ஒரு சொல்லோவியமாகும்; கௌதமபுத்தர், இயேசு கிறித்து, காந்தியடிகள், ஆபிரகாம் இலிங்கன் முதலிய பெரியோர்களுக்கு ஏற்றதொரு கவியாகும். சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்கள் இலாபத்தை எதிர்பார்க்காது சமூகத்திற்கு உதவவேண்டும் எனக் கருதினர். இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கக்கூடிய பலன்களை எதிர்பார்த்து அறத்தை விலைப்பொருளாகக் கொள்ளக்கூடாது என்னும் கருத்தை உட்கொண்டு உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்பார்,

> இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்
> அறவிலை வணிகன் ஆயலன் பிறரும்
> சான்றோர் சென்ற நெறியென
> ஆங்குப் பட்டன்று அவன்கைவண் மையே. (புறம். — 134)

எனக் கூறுவர். இதனால் சங்க காலத்தில் வாழ்ந்தோர் தாம் ஒருவருக்கு ஓர் உதவி செய்யும்போது, மறுமைப் பயனை எதிர் பார்க்கவில்லை. அறத்தை விலைகொடுத்து வாங்கும் அறவிலை வணிகர் அல்லர் என்பது புலனாகும்.

நீண்டகாலம் வாழ்வைக் கொடுக்கும் நெல்லிக்கனியைத் தானே உண்ணாது ஔவையாருக்குக் கொடுத்து அவர் நீண்ட காலம் வாழும்படி செய்த அதிகமான் நெடுமான் அஞ்சியும், ஒரு வாளைக் கொடுத்துத் தன் தலையை அறுத்துத் தன் தம்பி யிடம் கொடுக்கும்படி கொடுத்த குமணனும் இந்த இனத்தைச் சேர்ந்தவர்களாவர்.

**ஊழ்வினைப்பயனும்—உலகப் பொது நோக்கும்**

> யாதும் ஊரே யாவரும் கேளிர்
> தீதும் நன்றும் பிறர்தர வாரா
> நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
> சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
> இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
> இன்னா தென்றலும் இலமே மின்னொடு
> வானந் தண்டுளி தலைஇ யானாது
> கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று
> நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்

முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தன மாதலின் மாட்சியில்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

(புறம். 192)

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்துறக்கத் துணிந்த பொழுது அவரைக்கண்டு தானும் உயிர்விடத் துணிந்த பிசிராந்தையார் வயதினால் முதிர்ச்சியடைந்திருந்தபோதிலும் இளமை நலத்துடன் காணப்பெற்றார். இவ்விளமை நலத்திற்குக் காரணம் யாது என்று வினாவியவர்க்குப் பதில்கூறும் முகத்தால் பிசிராந்தையார் ஒரு பாடலை (புறம். - 191) இயற்றியுள்ளார். அதன் பொருள் ''என் மனைவி இல்வாழ்க்கைக்கு ஏற்ற மாண்புகளுடையவள். அறிவும் நிரம்பியவள். என்னுடைய புதல்வர்களும் மிகுந்த அறிவுள்ளவர்கள். என்னுடைய ஏவலாளரும் நான் கூறியபடியே செய்வர். என்னுடைய நாட்டு அரசனும் முறையல்லாதன செய்யான். செய்யத் தகுந்தவற்றை அவ்வப்போது செய்து குடிமக்களைப் பாதுகாப்பான். என்னுடைய ஊரில் பல சான்றோர்கள் உள்ளனர். அவர்கள் கல்வியறிவும், இயற்கை அறிவும் நிறைந்து, புலன்களை அடக்கிய அருள் உள்ளம் படைத்தவர்கள். அவர்களோடு நான் கூடிப்பழகுவதாலும் நான் இளமையோடு இருக்கிறேன்.'' இச்செய்யுள் (புறநானூறு—191) சங்ககால மக்கள் அரசியலிலும் சமூகத்திலும், இல்லறத்திலும் மேன்மையுற்றிருந்தனர் என்பதற்கு ஏற்ற எடுத்துக்காட்டாகும். சங்ககாலச் சான்றோரின் இலக்கணம் யாது என்று விளக்கிக் கூறுவது 'உண்டாலம்ம' என்று தொடங்கும் செய்யுளாகும். (புறம். - 182). இந்தச் சான்றோர்கள் ''தேவாமிழ்தம் கிடைத்தாலும் அதைத் தாங்கள் மட்டிலுமே உண்ணமாட்டார்கள், யாரிடமும், எதனோடும் வெறுப்புக் கொள்பவர்கள் அல்லர், பிறர் அஞ்சும் துன்பங்களுக்குத் தாமும் அஞ்சுவர். அதனால் புதிய நற்செயல்களைச் செய்யாது மனம் மடிந்து இருப்பவரும் அல்லர். 'புகழ் தரக்கூடிய தருமங்களைச் செய்வதற்குத் தம் உயிரையும் கொடுப்பர். இவ்வுலகச் செல்வங்கள் அனைத்தையும் பெறுவதாக இருந்தாலும் பழிச்சொற்களை விரும்பமாட்டார். தங்களுடைய கடமைகளை நிறைவேற்றும்பொழுது அவர்களுக்குத் தளர்ச்சி ஏற்படுவதில்லை. தமக்கு என முயற்சி செய்யாமல் பிறர் நலம் கருதி வாழ்ந்தனர்.

சங்க காலத்தில் வாழ்ந்த சான்றோர்கள் விரிந்த மனப் பான்மையையும் உலகத்திலுள்ள மக்கள் அனைவரும் ஒரே இறைவனால் படைக்கப்பெற்றவர்கள் என்ற கொள்கையையும் கொண்டிருந்தனர். வரலாற்று நிகழ்ச்சிகள் இறைவனுடைய ஆணையினாலும், ஊழ்வினைப் பயனாலும் நடைபெறுகின்றன என நம்பினர். திறவோர் என்ற சான்றோர்கள் பெரிய பதவியில் இருப்பவர்களிடம் இச்சகம் பேசி வாழவில்லை. தங்களைவிடத் தாழ்ந்தவர்களை இகழ்ந்து பழித்தல் ஒரு கடுகளவேனும் இல்லை என்று கணியன்-பூங்குன்றனார் பாடியுள்ளார்.

இன்பமும் துன்பமும் கலந்தது இவ்வுலக வாழ்க்கை, இயன்ற வரையில் நல்ல செயல்களைச் செய்வது சான்றோர் கொள்கை.

நெருதல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

என்னும் குறட்கருத்தினை *(336)* உணர்ந்து உயிர் உள்ள பொழுதே

''நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்,
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா றதுவே'' (புறம். - 195)

என்றபடி நடக்கவேண்டும்.

**எலியைப் போல் வாழாது புலியைப் போல் வாழ வேண்டும்.**

எவ்விதமான உழைப்பும் முயற்சியும் இன்றிப் பிறரை வஞ்சித்து வாழும் மக்கள் எலியைவிட மோசமானவர். ஓர் உழவன் தன் நிலத்தைப் பண்படுத்தி நீர்பாய்ச்சி விதை விதைத்து, காப்பாற்றி நெற்கதிர்களை விளைவிக்கின்றான். இதுவரையில் நெல் விளைவதற்கு எந்த முயற்சியும் செய்யாத எலி நெற்பயிர் விளைந்து கதிர் முற்றிய பிறகு அவற்றைக் கடித்துக்கொண்டு தன்னுடைய வளைகளில் சேர்த்துக்கொண்டு பின் அவற்றை உண்ணும். உழவனுடைய பெரு முயற்சியின் பயனை அவன் அனுபவிக்காதவாறு செய்துவிடும். இவ்விதம் பிறனுடைய உழைப்பால் கிடைத்த பொருட்களைச் சங்ககால மக்கள் விரும்பவில்லை. விரும்பக்கூடாது என்று சோழன் நல்லுருத்திரன் கூறுவன். எலியைப்போல் பிறரை வஞ்சிக்காமல் புலியைப் போல் முயற்சியோடு வாழவேண்டும் எனவும் கூறியுள்ளான். ஒரு புலி காட்டில் இரை தேடி விரைவாகப் பாய்ந்தது. அப்பொழுது

எதிர்பாராதபடி பன்றியொன்று அதன் வேகத்தில் அடிபட்டு இடப்பக்கமாக வீழ்ந்தது. புலிக்குப் பசியிருந்தபோதிலும் அப் பன்றியைப் புலி உண்ணவில்லை. அதற்கு மானக்குறைவாகத் தோன்றியதுபோலும். எனவே, அதைவிடுத்து மலைப்பிளவு களில் பாய்ந்து ஓர் ஆண்யானையைத் தனது வலப்பக்கத்தில் விழும்படி செய்து தன் பசியை ஆற்றிக்கொண்டது. அவ்வாறு செய்த புலியைப் போல மெலிவில்லாத நினைப்பும் அதற்கேற்ற முயற்சி உரமும் உடையவராகச் சங்ககாலத் தமிழர் வாழ்ந்தனர். முன்னோர் தேடிய சொத்து, சீதனப் பொருள், நன்கொடை, குதிரைப்பந்தயப் பணம், லாட்டரிசீட்டுப் பணம், களவு, சூது, கடுவட்டி, மதுபானக்கடைகளில் வரும் இலாபம், கள்ளநோட்டு அடித்தல் முதலிய வழிகளைப் பின்பற்றும் இக்காலத்துச் செல் வர்களுக்கும் சங்க காலத்தியச் சான்றோருக்கும் இருந்த வேற் றுமைகளை இச்செய்யுளின்* மூலம் நாம் உணரலாகும்.

**அகம், புறம் பற்றிய வரலாற்று நோக்கங்கள்**
**(Objective method of writing history)**

சங்க இலக்கியங்களில் அகநானூறும், கலித்தொகையும் தமிழ்நாட்டின் வரலாற்றுச் செய்திகளை நேரடியாகக் கூறாமல் மக்களுடைய அகத்துறை வாழ்வியலைப் பற்றிக் கூறுமிடத்து தொடர்பு வைத்துக் கூறுகின்றன. பதிற்றுப்பத்து என்னும் தொகை நூல் பத்து சேர மன்னர்களுடைய வரலாற்றைக் கூறும் ஒரு கருவூலமாகும். இந்நூலைப் பாணபட்டர் எழுதிய ஹர்ஷசரிதத்திற்கும், பில்ஹணர் எழுதிய விக்கிரமாங்கசரிதத் திற்கும் கல்ஹணர் எழுதிய ராஜதரங்கணி என்னும் வரலாற்று நூலுக்கும் ஒப்பிடலாம். தொடக்கத்தில் பத்து சேர அரசர் களைப்பற்றி ஒவ்வொரு அரசனுக்கும் பத்துப் பத்துப் பாடல்களாக நூறு பாடல்களைக் கொண்டிருந்தது. ஆனால் முதல் பத்தும், இறுதிப் பத்தும் காலம் என்னும் காலனால் மறைந்துவிட்டன. இரண்டு முதல் ஒன்பது வரையில் உள்ள பதிகங்களே தற்காலத்தில் கிடைத்துள்ளன. இவற்றுள் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு பத்துகள் முழுமையாக அவற்றிற்கு முன்னுரை போன்ற-

---

*விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டு அளைமல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்
வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு
இயைந்த கேண்மை இல்லா கியரோ! (புறம் — 190)

பதிகங்களோடு ஆறு சேரமன்னர்களுடைய பெயர்களையும் அவர்களுடைய வீரச்செயல்கள், கொடை, அளி முதலியவற்றையும் கூறும் (Objective study) என்ற புறவகை இலக்கியமாகக் காணப்பெறுகின்றன.

உதியஞ்சேரல் வழியில் வந்த ஐந்து சேர அரசர்களைப் பற்றிய 50 பாடல்களும், இரும்பொறை மரபில் வந்த மூன்று சேர அரசர்களைப் பற்றிய 30 பாடல்களுமே இப்பொழுது நமக்கு உதவியாக உள்ளன.

| எண் | அரசன் | பாடிய புலவர் |
|---|---|---|
| 2-ஆம் பத்து | இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் | குமட்டூர்க் கண்ணனார் |
| 3-ஆம் பத்து | பல்யானைச்செல்கெழு குட்டுவன் | பாலைக் கௌதமனார் |
| 4-ஆம் பத்து | களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 5-ஆம் பத்து | கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் | பரணர் |
| 6-ஆம் பத்து | ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் | காக்கைபாடினியார் நச்செள்ளையார் |

இந்த ஐவரும் உதியன் மரபைச் சேர்ந்தவர்.

| எண் | அரசன் | பாடிய புலவர் |
|---|---|---|
| 7-ஆம் பத்து | செல்வக் கடுங்கோவாழியாதன் | கபிலர் |
| 8-ஆம் பத்து | தகடூர்எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை | அரிசில்கிழார் |
| 9-ஆம் பத்து | இளஞ்சேரல் இரும்பொறை | பெருங்குன்றூர்க் கிழார் |

இம்மூவரும் பொறையன் மரபைச் சேர்ந்தவர்கள்; கொங்கு நாட்டை ஆண்டவர்கள்.

எட்டு பத்துகளுக்கும் (பிற்காலத்தில்) முகவுரைபோன்று பதிகங்களும் உள்ளன. இரண்டாம் பத்தைப் பாடிய குமட்டூர்க் கண்ணனாருக்கு இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் உம்பற்காட்டு 500 ஊர்களைப் பிரமதேயமாகக் கொடுத்து 38 ஆண்டுகளுக்குத் தென்னாட்டின் வருமானத்தையும் கொடுத்தான்

என்றும் இவ்வரசன் 58 ஆண்டுகள் அரசாண்டான் என்றும் இப் பதிகம் கூறுகிறது.

மூன்றாம் பத்து பல்யானைச் செல்கெழுகுட்டுவன் மீது பாலைக் கௌதமனாரால் பாடப்பெற்றது. இப்புலவர் எவ் வகைப் பரிசிலும் பெறாமல் 10 யாகங்கள் செய்யும்படி வேண்டிக் கொண்டு, இறுதியாகத்தில் தன் மனையாளுடன் சுவர்க்கம் பெற் றார் என்று பதிகத்தில் கூறப் பெற்றுள்ளது. (இஃது உண்மை யான வரலாற்றுச் செய்தியா என்பது ஆராயத்தக்கது) நெடும் பாரதாயனார் என்ற அந்தணரும் இதில் பங்கு கொண்டார்.

நான்காம் பத்தைக் காப்பியாற்றுக் காப்பியனார், களங் காய்க்கண்ணி நார்முடிச் சேரல் மீது பாடினார். இப்பாட்டிற் காக 40 இலட்சம் பொன்னும் தான் ஆண்ட நாட்டில் பாதியும் பரிசிலாகக் கொடுத்தான். இவ்வரசன் 25 ஆண்டுகள் ஆட்சி புரிந்தான்.

ஐந்தாம் பத்து கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் மீது பாடப்பட்டது. 55 ஆண்டுகள் செங்குட்டுவன் ஆட்சி புரிந்த தாகப் பதிகம் கூறுகிறது. பாடிய புலவர் பரணர். இவர் பெற்ற பரிசில் உம்பற்காட்டு வருவாயாகும். செங்குட்டுவன் மகன் குட்டுவன் சேரலும் பரணரிடம் ஒப்படைக்கப் பெற்ற செய்தியும் உள்ளது.

ஆறாம் பத்தை ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மீது காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்ற பெண்பாற் புலவர் பாடி யுள்ளார். இப்புலவர் தம்முடைய அணிகலன்களுக்காக 9 காணம் பொன்னும் ஓர் இலட்சம் காணமும் பரிசிலாகப் பெற்றார். அரசன் அவருக்குத் தன் பக்கத்தில் அமரச் சரியாசனமும் கொடுத்தான். ஏழாம் பத்தைச் செல்வக்கடுங்கோவாழியாதன் மீது கபிலர் பாடினார் (இந்தக் கபிலர் வள்ளல் பாரியினுடைய சபையில் இருந்த புலவரா அல்லதுவேறு ஒருவரா என்பது ஆராயத்தக்கது). இவருடைய பாடல்களைக் கேட்ட செல்வக் கடுங்கோ, புலவருக்கு ஓர் இலட்சம்காணம் சிறுபுறமாகக் கொடுத்தான். நன்றா அல்லது திருநணா என்னும் குன்றின்மீது ஏறிநின்று தன்னுடைய கண்ணிற் கெட்டிய நாடெல்லாம் அவருக்குக் கொடுத்ததாகப் பதிகம் கூறு கிறது. செல்வக் கடுங்கோ 25 ஆண்டுகள் அரசாண்டான்.

எட்டாம் பத்தை அரிசில்கிழார் என்னும் புலவர் பெருஞ் சேரல் இரும்பொறை என்னும் அரசன் மீது பாடினார். இவ்

வரசன் தகடூர் எறிந்து அதிகமானை வென்ற செய்தி பதிகத்தில் கூறப்பட்டுள்ளது. மறுவில் வாய் மொழி அரிசில்கிழார் என இப்புலவர் போற்றப்படுகிறார். பெருஞ்சேரல் இரும்பொறை தன்னுடைய அரண்மனைக்கு வெளியே நின்று தன்னுடைய அரசச் செல்வமனைத்தையும் கொடுத்து அரியணையில் அமர்ந்து அரசோச்சும்படியும் வேண்டிக் கொண்டான். புலவரோ யான் இரப்ப இதனையாள்க எனக்கூறி அரசனிடம் திரும்பக் கொடுத்து துறவு பூண்டார். ஒன்பதாம் பத்து இளஞ்சேரல் இரும்பொறை என்பான் மீது பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவரால் பாடப் பெற்றது. இவர் பாடிப் பெற்ற பரிசில் 32 ஆயிரம் காணம் எனப் பதிகம் கூறுகிறது. தொடக்கத்தில் பரிசு கொடுக்காமல் காலந் தாழ்த்தி இப்புலவருக்குத் தெரியாமல் ஊர், வீடு, நிலம் முதலிய வற்றை அமைத்துக் கொடுத்தான். ''அவர் அறியாமை, ஊரும் மனையும் வளமிகப் படைத்த ஏரும் இன்பமும் இயல்வரப்பரப்பி எண்ணற்கு ஆகா அருங்கல வெறுக்கையொடு பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் கொடுத்தான்'' என்று ஒன்பதாம் பத்தின் பதிகம் கூறுகிறது.

ஆகையால் பதிற்றுப்பத்தைப் பாடிய புலவர்கள் கிரேக்க வரலாற்று ஆசிரியராகிய ஹெரோடோடஸ் பின்பற்றிய objective அல்லது புறவயத்தன்மை கூறும் முறையைப் பின்பற்றிச் சேரர் வரலாற்றைக் கூறியுள்ளனர் எனக் கூறலாம்.

## கருவிநூல் பட்டியல்—தமிழ்

1. ச. வையாபுரிப் பிள்ளை,
— சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்)
பாரி நிலையம்— சென்னை— 1967.

2. மா. இராசமாணிக்கனார்,
— பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னை—1970.

3. எஸ். வித்தியானந்தன்
—தமிழர் சால்பு. சங்ககாலம்—பாரி புத்தக நிலையம்—
சென்னை—1971.

4. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை—
—சேரமன்னர் வரலாறு, சென்னை—1960.

5. அடைக்கலம்—தமிழ் இலக்கிய வரலாறு.

6. மயிலை. சீனி வேங்கடசாமி
—கொங்கு நாட்டு வரலாறு; சென்னை—1966.

**ஆங்கில நூல்கள்**

(1) *K. G. Sesha Iyer* – Chera Kings of the Sangam Period – 1937

(2) *K. N. Sivaraja Pillai* – Chrolonogy of the Early Tamils – 1932

(3) *P. T. Srinivasa Iyengar* – The History of the Tamils Asian Educational Services. New Delhi – 1982.

(4) *Iravatham Mahadevan* – Historical Tamil Brahmi Inscriptions – 1966

(5) *Warmington* – Commerce between the Roman Empire and India

(6) *K. A. Nilakanta Sastri* – A History of South India – 1972

(7) *T. V. Mahalingam* – Kanchipuram in early South Indian History 1969

(8) *Dr. N. Subramanian* – History of Tamilnad, Madurai – 1972.

*Do.* – Sangam Polity

(9) *Dr. A. Krishnaswami* – An Introduction to Toynbees study of History, Annamalainagar – 1979

(10) *Dr. K. K. Pillai* – A Social History of the Tamils

(11) *M. Arunachalam* – An Introduction to the History of Tamil Literature – Tiruchittambalam – 1974

(12) *N. Mahalingam* – Games from Pre-historic past – 1981

(13) *Rajasekhara Thangamani* – History of the Pandyas – 1978

(14) *N. K. Mangala Murugesan* – The Sangam Age – Madras – 1982

(15) *Dr. A. Swaminathan* – The Sangam Age – in Tamil 1982

# கலந்துரையாடல்

**விருத்தாசலம் :**

திருக்கோவையாருக்கு இறைமைத் தொடர்பான உள்ளுறைப் பொருள் கூறுவதுபோலச் சங்க அகத்திணைப் பாடல்களுக்கும் அத்தகு உள்ளுறைப் பொருள் கொள்ளலாமா? சிவபெருமானைப் பற்றிய குறிப்பு தொல்காப்பியத்தில் இல்லை என்கின்றனர். 'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' என்ற தொடரில் வரும் 'வேந்தன்' சிவனைக் குறிக்கும் என்று கொள்ளலாம். முடியுடை மூவேந்தர் என்ற தொடரால் முடி வேய்ந்தவரே வேந்தர் என அறிகின்றோம். கொன்றை வேய்ந்த காரணத்தால் சிவபெருமான் கொன்றை வேந்தன் எனக் குறிக்கப் பெறுகிறான். மாணிக்க வாசகரும் வேந்தன் எனச் சிவபெருமானைக் குறிப்பிட்டுள்ளார். ஆதலின் வேந்தன் என்பது சிவனைக் குறிப்பதாகக் கொள்ளலாமா ?

**க. வெள்ளைவாரணனார் :**

திருக்கோவையாருக்கு ஈருரை உண்டு. ஒன்று மாந்தர் நிலையில் உரைப்பது; இரண்டாவது இறைமை நிலையில் உரைப்பது. கடவுள் மாட்டு மானிடர் நயந்த பக்கம் என்ற வகையில் இரண்டாவது உரையைக் கொள்ளலாம். கடவுள் நிலத் தெய்வத்தில் அடங்காது. அனைத்தையும் கடந்த நிலையில் உள்ளவன் கடவுள். அது சிவபெருமானைக் குறிக்கும். வேந்தன் என்பது கடவுளைக் குறிப்பதாகக் கூறவேண்டியதில்லை. மன்பெருஞ் சிறப்பின் பூவைநிலை என்பதால் திருமாலை அரசனாகக் குறிப்பிட்டுள்ளார். பிற தெய்வங்களைப் பூவை நிலையில் வைத்துக் கூறுதல் பொருந்தாது.

**இரா. சாரங்கபாணி :**

'முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்' என்னும் குறளால், காத்தல் தொழிலினால் அரசன் திருமாலாகக் கருதப்படுகிறான் என்பது பெறப்படும். திருமாலை இறைவன் என்னும் சொல்லால் திருவள்ளுவர் குறித்துள்ளார்.

''இருள்சேர் இருவினையும் சேரா; இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''

என்ற குறளில் வரும் இறைவனும் திருமாலையே சுட்டுகிறது எனச் சிலர் கருதுவர். திருமாலைப் பற்றிப் பரிபாடல் 'பிறவாப் பிறப்பிலை, பிறப்பித்தோர் இலையே' எனக் கூறுகிறது. ஆதலால், திருமாலையே முழுமுதற் கடவுளெனக் கொள்ளலாமா?

**க. வெள்ளைவாரணனார் :**

சமயப் பூசலுக்கு நான் இறங்கவில்லை. திருமாலையும் முழுமுதற் கடவுளாகக் கொள்ளலாம். ஆனால், 'இறைவனை முற் கூறாது மாயோனை முற் கூறியது என்னையோ எனின்' என அடியார்க்கு நல்லார் கூறுவதால், சிவனையே இறைவனாகக் கருதியமை பெறப்படும். ''இறையோன் தருக திருநுத லாகென' என இளங்கோவடிகள் சிவனை இறைவன் எனச் சுட்டல் காண்க.

**பாரதிப்பித்தன் :**

சமயம் என்பது யாது? வாழ்க்கை நெறியா? கோட்பாடா? கடவுள் தொடர்பில்லாததும் சமயம் ஆகுமா? தத்துவ ஞானம், நிலையம், சடங்கு சம்பிரதாயங்கள் ஆகியவற்றை மூவகை நிலைச் சமயம் என்கின்றனர். சமயம் என்பது இம்மூவகை நிலையில் எதைச் சார்ந்தது? ஊழ் சமயத்திற்கே உரியதா? சங்க காலம் வர்க்கப் போராட்டக் காலமல்லவா?

**க. வெள்ளைவாரணனார் :**

பொய்தீர் ஒழுக்க நெறியே சமயம் என்பது. அது வாழ்வை அடிப்படையாகக் கொண்டு வாழ்வைச் செம்மை செய்வது, தெய்வங் கொள்கையை உடையது. ஊழ் என்பது எல்லாச் சமயத்திற்கும் பொது. 'யாம்செய் தொல்வினைக்கு எவன் பேதுற்றனை' எனவும் 'நன்றாங்கால் நல்லவாக் காண்பவர், அன்றாங்கால் அல்லல் உழப்பது எவன்' என்றும் பழைய நூல்கள் ஊழ்வினை பற்றிக் கூறுகின்றன. சமயத்திற்கு நல்லோர் கூட்டுறவும் தீயோரை ஒருவி வாழ்தலும் இன்றியமையாதன. 'நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்' எனப் புறநானூறும் இதனை வலியுறுத்தும். தத்துவ ஞான, நிலையம், சடங்கு என்ற மூன்றையும் தனித்து நோக்காது மூன்றன் கூட்டுறவாகவே சமயத்தைக் கருதலாம். சடங்குகள் வைதீகச் சடங்கு, வழிபாட்டுச் சடங்கு என இருவகைப்படும். விரிநூல் அந்தணர்கள் கோயிற் பூசை செய்ய ஆகமங்களை உருவாக்கினர். இது சமயச் சடங்கைக் குறிப்பதாகும்.

புரிநூல் அந்தணர்களாகிய பிராமணர்கள் வைதிகச் சடங்கை உருவாக்கினர்,

**பாரதிப்பித்தன் .**

சங்ககால மூவேந்தர் ஆட்சி மறைந்து களப்பிரர் ஆட்சி தோன்றுவானேன்?

**அ. கிருட்டிணசாமி :**

வாள் எடுத்தவன் வாளாலே அழிவான் என்றபடி சங்ககால மன்னர்கள் வன்முறையைப் பின்பற்றி அதனாலேயே அழிந் தார்கள். கள் குடித்தலும் பரத்தைமையும் சங்க காலத்து மிகுந் திருந்தன. இக்களியாட்டங்கள் அவர்கள் வீழ்ச்சிக்குக்காரணம் எனலாம்.

**குளோரியா சுந்தரமதி :**

இலக்கியத்திலிருந்து வரலாற்றைத் தேர்ந்து கொள்ள எதனைப் பின்பற்றலாம் ?

**அ. கிருட்டிணசாமி :**

சங்க இலக்கியச் செய்திகள் சில கல்வெட்டுக்களால் உறுதிப் படுத்தப்படுகின்றன. சேரர் வரலாறுகளைச் சில கல்வெட்டுக்கள் மெய்ப்பிக்கின்றன. வெளிநாட்டார் பிளைனி போன்றோர் எழுதிய குறிப்புக்களாலும், பெரிபுளூசில் காணப்படும் சில செய்தி களாலும், உரோம வரலாறுகளாலும், சங்க இலக்கிய வரலாறுகள் அயல் நாட்டு வாணிகம் பற்றிய சில செய்திகள் வெளிப்படுத்தப் பட்டுள்ளன. இத்தகைய பிற குறிப்புக்களைக் கொண்டு வர லாற்று உண்மையைத் தெளியலாம்.

**அரங்கவடிவேலன் :**

சங்க காலத்தில் பெருஞ்செல்வர்கள் ஏழைப் பொது மக் களைச் சுரண்டி வாழ்ந்தார்கள். ஏழைகளின் எழுச்சியைத் தவிர்ப் பதற்காக, 'உண்டாலம்ம இவ்வுலகம்' 'யாதும் ஊரே யாவரும் கேளீர்' போன்ற பாடல்களைப் பாடிப் பொதுமக்களை மூளைச் சலவை செய்துவிட்டனர் என்று கூறுகின்றனர். அது பற்றிய கருத்து என்ன?

**அ. கிருட்டிணசாமி :**

இவ்வினா கட்சிச் சார்பில் எழுந்ததே அன்றி இலக்கிய நோக்கில் எழுந்ததாகத் தெரியவில்லை. சங்ககாலத்தில் பல வள்ளல்கள் தம்மிடம் உள்ள எல்லாப் பொருள்களையும் வாரி வழங்கினர் என அறிகின்றோம். ஓம்பாது உண்டு கூம்பாது வீசினர். இத்தகைய கொடை நிலவிய காலத்தில் சுரண்டலுக்கு இடமில்லை. எனவே, சங்க இலக்கியம் படித்தவர்கள் சங்க காலத்தில் சுரண்டல் கொள்கை இருந்தது என்பதை ஒத்துக் கொள்ள மாட்டார்கள்.

**பாரதிப்பித்தன் :**

செங்குட்டுவனின் வடநாட்டுப் படையெடுப்பு நம்பத் தக்கதா? சங்ககாலம் வர்க்கப் போராட்டம் இல்லாத காலமா? இவ்வரலாற்றுக் கட்டுரையில் கடல் மர்மம் பற்றிக் குறிப்பிடாதது ஏன்?

**அ. கிருட்டிணசாமி :**

நள்ளி, ஆய், பாரி போன்ற வேளிர்கள் ஏதோ ஒரு நில மானியத் திட்டத்தின் கீழ் மூவேந்தர்களுக்கு அடங்கி வாழ்ந்த னர். அது எந்த அடிப்படை முறையில் என்று அறிவதற்குச் சங்க இலக்கியத்தில் சான்று இல்லை. சிற்றரசர்கள் சிலர் போர் எழும் காலத்துச் சில வேந்தர்களை ஆதரித்துத் துணை போயினர் என்று தெரிகிறது.

சிலப்பதிகாரத்தைச் சீனிவாச அய்யங்கார் போன்றோர் சிலர், கட்டுக்கதையாகக் கருதுகின்றனர். அவர்கள் செங்குட்டு வனது வடநாட்டுப் படையெடுப்பை நம்புவதில்லை. பாரதப் போர் பற்றி எல்லாம் சங்க இலக்கியத்தில் குறிப்பு இருக்கிறது. பாரதப் போரில் உதியன் சேரலாதன் சோறு அளித்த செய்தி புறநானூற்றில் உண்டு. சிறிது புனைந்துரையும் இருக்கலாம். இமயப் படையெடுப்பைச் செங்குட்டுவன் நிகழ்த்தி இருக்கலாம். ஆனால் உறுதியாகக் கூற முடியாது. இலெமூரியாக் கண்டம் இருந்தது என்பதனையும் உறுதியாகக் கூற முடியாது. முதலாம் இராசேந்திரன் கடாரம் கொண்டது உண்மை. அதற்குக் கலிங் கத்துப் பரணியில் சான்று உள்ளது. கடாரத்திலிருந்து வந்த தால்தான் ஒருவகைக் காயைக் கடாரங்காய் என வழங்குகிறோம். இதுவும் இராசேந்திரனின் வெற்றியை வலியுறுத்தும். இதுபோலச் செங்குட்டுவனின் படையெடுப்பும் நடந்திருக்கலாம். கடல்

மர்மம் மர்மமாகத்தான் இருக்கிறது. அதைப் பற்றி முடிந்த முடிபாக எதுவும் கூற முடியாது.

**விருத்தாசலம் :**

'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று, இந்நான் கல்லது குடியும் இல்லை' என்று புறநானூற்றில் வருகிறது. வருணாசிரம தர்மம் சங்க காலத்து இருந்ததா? வேற்றுமை தெரிந்த நாற்பால்' எனக் குறிப்பிடப்படுவது தொழில் அடிப்படையிலா? பிறப்பு அடிப்படையிலா? பெரும்பாணாற்றுப்படையில் பல நில மக்களின் இயல்பு கூறப்பட்டுள்ளது. ஆற்றுப்படுக்கும் போது, இந்த இடத்திற்குச் சென்றால் புலால் உணவு கிடைக்கும், இந்த இடத்திற்குச் சென்றால் மரக்கறி உணவு கிடைக்கும் என்று குறிப்பு வருகிறது. இவை நாற்பாலுக்கு விளக்கமா?

**இரா. சாரங்கபாணி :**

பிராமணர், சத்திரியர் முதலிய சாதி வேறுபாடு சங்க காலத்தில் இல்லை. வேற்றுமை தெரிந்த நாற்பால் என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலத்தில் வாழும் மக்களையே குறிக்கும். இந்த நால்வகை வேறுபாட்டைத்தான்.

> ''நாடா கொன்றோ காடா கொன்றோ
> அவலா கொன்றோ மிசையா கொன்றோ
> எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை வாழிய நிலனே''

என்னும் புறநானூற்றுப் பாட்டில் ஔவையார் குறிப்பிடுகின்றார்.

> நாடு—மருதம்; காடு—முல்லை;
> அவல்—நெய்தல்; மிசை—குறிஞ்சி

தொல்காப்பியர் திணை நிலைப் பெயரைக் குறிப்பிடும்போது,

> ''ஆயர் வேட்டுவர் ஆடூஉத்திணைப் பெயர்
> ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே''
>
> (தொல். அகத்திணை 23)

என்று கூறுவர். ஆகவே, வாழ்கின்ற நிலம் காரணமாகவும், செய்கின்ற தொழில் காரணமாகவும், பண்டைத் தமிழ் மக்கள்

பெயர் பெற்றனர் என அறிகின்றோம். பள்ளத்தில் வாழ்ந்தவர்கள் பள்ளர் என்று பெயர் பெறுகின்றனர். தொழில் செய்யும்போது உழவர் எனப் பெயர் பெறுகின்றனர். இவ்வாறே நில வகையில் நால்வகைப் பிரிவையும் கொள்ள வேண்டும்.

## முடிவுரை

மக்களின் வாழ்க்கையை உள்ளவாறு சித்திரித்துக் காட்டுவன இலக்கியங்கள். அவற்றுள்ளும் சங்க இலக்கியங்கள் கற்பனைக் கலப்பின்றிப் பல்வேறு வாழ்க்கைக் கூறுகளையும், பண்பாடு, நாகரிகங்களையும் புலப்படுத்துகின்றன. எனவே, தமிழக வரலாற்றினை அறியச் சங்க இலக்கியம் பெரிதும் துணைபுரியும். மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள், வேளிர்கள், ஆகியோர்தம் வாழ்க்கைக் குறிப்புகள் அவர்களைப் பாடிய புலவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளன. அரசர்களுள் சிலர் புலவர்களாகவும் திகழ்ந்துள்ளனர். சங்க இலக்கியங்களுள் புறநானூறும், பதிற்றுப் பத்தும் வரலாற்றுக் கருவூலம் எனலாம். பழம் பெருமைகளை அறிந்து கொண்டு மீண்டும் உயர்ந்த நாகரிகம், பண்பாடுகளைப் பின்பற்றி உயர்ச்சி பெறச் சங்க இலக்கியக் கல்வி இன்றியமையாததாகும். சமயத்தைப் பற்றிய அறிவு பெறப் பரிபாடல் பெரிதும் துணை புரியும். சங்க கால மக்களைப் பற்றிய வரலாறு, வாழ்வியல் முறைகள், உயரிய குறிக்கோள்கள், சமய நெறிக் கோட்பாடுகள் ஆகியவற்றைச் சங்க இலக்கியங்களைக்கொண்டு தெளிவாக உணரலாம்.

---

# ஆறாம் அமர்வு

## தலைவர் : அ. கிருட்டிணசாமி

### முன்னுரை

இயல், இசை, நாடகம் எனத் தமிழை மூன்றாகப் பாகு படுத்திக் கூறும் வழக்கம் உண்டு. முத்தமிழ் என்னும் பாகுபாடு இருந்தமைக்குச் சான்றாகப் பரிபாடலில்,

'தெரிமான் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்'

என்னும் அடி காணப்படுகிறது. இயலிலே சில இசைக் கூறுகளைக் காணலாம். இசைப் பாடல்களில் சில நாடகக் கூறுகளைக் காணலாம். நாடகத்தில் ஏனைய இரு தமிழ்க் கூறுகளையும் காணலாம். எனவே, இவை மூன்றும் ஒன்றில் ஒன்று விரவிக் காணப்படும். சங்க காலத்திலேயே பல தெய்வ வழிபாடுகள் காணப்படுகின்றன. அப்பொழுது சமயக் காழ்ப்பில்லை. முரு கனைப் பாடிய புலவரே அதே ஈடுபாட்டோடு திருமாலைப் பாடக் காண்கின்றோம். சமயப் பொறை அக்காலத்தில் மிகுதி யாக இருந்தது.

# 5. சங்க இலக்கியத்தில் நாடகக் கூறுகள்

## கு. திருமேனி

சங்ககாலத்து நாடகங்கள் என்று குறிப்பிடுமாறு சங்க காலத்தில் பல நாடகங்களோ ஒரு நாடகமோ இருக்குமேயானால் 'சங்க இலக்கியத்தில் நாடகக் கூறுகள்' என்ற தலைப்பு எழுதற்கு வாய்ப்பில்லாது போயிருக்கும்.

தமிழ் மொழி இயல் இசை நாடகம் என்ற முப்பகுப்புடைய தாய் இருந்ததால் அதனை முத்தமிழ் என்று அழைக்கும் வழக்கு இன்றும் நம்மிடையே நின்று நிலவுகின்றது. இன்று நமக்குக் கிடைத்த சங்க இலக்கியங்கள் அனைத்தும் இயற்றமிழிற்குரிய வாய் உள்ளனவேயன்றி இசைத்தமிழ் நாடகத் தமிழ் என்ற கூறுபாட்டிற்குரிய நூல்கள் இல்லை. இவை இருந்து இல்லாது போன செய்தியை அடியார்க்கு நல்லார் தம் உரைப்பாயிரத்தில்,

''இனி இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீய முதலா உள்ள தொன்னூல்கள் இறந்தன. நாடகத் தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாகவுள்ள தொன்னூல்களும் இறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றியம் என்பனவற்றுள்ளும் ஒருசார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தன போலும். இறக்கவே வரும் பெருங்கலம் முதலிய பிறவுமாம்'' என்று நொந்து குறிப்பிடு கின்றார்.

இவ்வாறு நாடகத்தமிழ் நூல்கள் தனித்து இருந்து அழிந்த பின் இயற்றமிழ் நூல்களில் நாடகக் கூறுகளைக் காணுவது என்பது எத்துணைப் பொருத்தம் என்று அளவிடக் கூடவில்லை. நாடகத்தில் நாடகம் காணுவதும், இயலில் இயல் காணுவதும், இசையில் இசை தேடுவது என்பதும் ஒன்றிலேயே ஒன்று தேடுவது போலாகும். அதாவது வெல்லமூடையில் வெல்லத்தைத் தேடு வது போலாகும். அங்ஙனமே இயலில் நாடகத்தையோ, நாட

கத்தில் இயலையோ, இசையில் பிறவற்றையோ தேடுவதென்பது இல்லாததை இல்லாத இடத்தில் இருப்பதாகக் கருதித் தேடுவ தாகும். ஒன்றை ஒன்றாகக் கருதித் தேடுவது என்பது திரி புணர்ச்சியால் ஆனதாகும். இத்திரிபுணர்ச்சி நம்மொழிக்கு வரு வதற்குக் காரணம் மேலை நாட்டினர் இலக்கியங்களைப் பற்றி வியந்து கூறிய சில சொற்றொடர்களை நாம் புரிந்து கொண்ட பெற்றியில் அமைந்ததாகும். This is a dramatic expression; This is a dramatic Language என்பன போன்ற சொற்றொடர் களைத் தமிழில் நினைந்து கொண்டு இலக்கியங்களில் அந் நாடகக் கூற்றினை தேடும் எண்ணம் முகிழ்த்துள்ளது.

மேலை நாட்டினர் தம் இலக்கியங்களில் இன்று, இப்பொழுது நாம் காண முனைந்திருக்கும் இத்தகைய முயற்சியில் அவர்கள் தலைப்பட்டதில்லை. நாடகத்தைப் பற்றிய திறனாய்வு, தனித்த இலக்கியங்களைப் பற்றிய திறனாய்வு, காப்பியங்களைப் பற்றிய திறனாய்வு என்று தனித்தனி நோக்கத்தில் நூல்கள் பல உள்ளன.

நம் நாட்டில் காப்பியத்தில் நாடகம் கலக்கும் முறை வந்த தாக ''நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்'' (மணிமேகலை 19—80) என்று வரும் அடியினை எடுத்துக் காட்டி 'சொற் றொடர் நிலை, பொருள் தொடர்நிலை என்னும் தொடர் நிலைச் செய்யுட்கும் காப்பியம் என்று பெயர் கூறுதலும் ஆசிரியர் கருத்தென உணர்க' என்கின்றார். ஆனால் சிலப்பதிகாரப் பதி கத்தில் 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' (பதிகம் 87) என்றுதான் சிலப்பதிகாரம் குறிக்கப் பெறுகின்றது, இளங்கோ வடிகள் வரந்தருகாதையில்,

> ''இமையோர் இளங்கொடி, தன்திறம் உரைத்த தகைசால்
> நன்மொழி''
>
> (வஞ்சி. வரந்தரு: 183—184)

என்றே தம் நூலினைக் குறிப்பிடுகின்றார்.

''நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்'' (பதிகம்-60) என்று உள்ளது.

இதற்கு உரை கூறப்புகுந்த அடியார்க்கு நல்லார் ''தமது முத்தமிழ்க் கல்வியும், வித்தகக் கவியும் காட்டுதற்குத் தாம் வகுத்துக் கொண்ட மூவகை உள்ளுறையின் விளைவு தோன்ற ஒரு காப்பியமாக்கி உலகின் கண் நடாத்துவான் வேண்டவும்''

என்று எழுதியுள்ளார். (உரை சிறப்புப் பாயிரம் 10, 11) தொடர்ந்து பதிகத்தின் உரையின்கண் 'இசை நாடகத் தமிழ் நூலது பகுதியும் இவை போலப் பெருவழக்கிற்றாதலானும்'' என்று இதன் கண் இசை நாடகப் பகுதி இருப்பதாகவும் குறிப்பிடு கின்றார்,

''உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்''

''உரைசால் அடிகள் அருள' (பதிகம் 87, 88) என்றமையால் காப்பியங்கட்குச் சிறுபான்மை இவ்வுறுப்புகளும் சில வருமெனக் கொள்க. என்னை? ''உரையும் பாடையும் விரவியும் வருமே'' (தண்டி. பொது) என்பது அணியியல் ஆகலின்'' என்று சிலப் பதிகாரத்துக்கு இலக்கணமாகத் தண்டி ஆசிரியர் இலக்கணத்தை எடுத்துக்காட்டுகின்றார்.

இவற்றையெல்லாம் வைத்துப் பார்க்கின்றபோது அடி யார்க்கு நல்லார் நூலிலில்லாச் செய்திகளை வரவழைத்துப் புகுத்தியிருப்பது தெளிவாகும். இவர் சிலப்பதிகாரம் முப்பது காதைகளால் இயன்றதாதலின் காதை என்ற சொல்லின் கண் ணும் ஓர் ஆராய்ச்சி மேற்கொள்கின்றார். ''இதன் செய்யுள் காதையென்று வழங்குதலின் காதையாமாதலின் ஆசிரியம், வெண்பா, வெண்கலிப்பா என்னும் இவற்றோடு சிறுபான்மையின் ஒருசார் கொச்சகக் கலி மயங்கி வருதலானும், காண்டம் எனக் குறிபெறுதலானும் இதனைக் கதை என்றல் வலியுடைத்து என் பார்க்கு அற்றன்று கதை என்பது—காப்பியம் என்றலுமாம்.
(உரைப்பாயிரம் பக். 9)

இவ்விடத்துச் சிலப்பதிகாரத்திற்குக் காதை என்ற பெயர் உண்மையை ஏற்காத அடியார்க்கு நல்லார், இதற்குக் காப்பியம் என்ற பெயர் புனைவித்துக் காப்பியத்திற்கு விளக்கம் கூறி அத னோடு நில்லாமல் இது முத்தமிழ் விரவியது என்று காட்டி முத் தமிழ்க் காப்பியம் என்ற பெயரையும் சூட்டி நாடகக் காப்பியம் என்றோர் வழக்குண்மையும் காட்டி அவர் போக்கிற்குப் பல விளக்கங்கள் தந்துள்ளார். கதை பொய்யுடைய்து என்பதற்குச் சிந்தாமணியில் மேற்கோள் ஒன்றைக் காட்டிக் கதை என்பது புனைந்துரைக்கப் பெறுவது என்பாரேயாகில் 'கொங்குமாக்கதை' 'இராம காதை', 'பாரதக் கதை' இவையெல்லாம் பொய்படுவன வாகும்.

''காப்பியக்கவிகள் காமவெறியெழ விகற்பித்திட்டார்''
(சிந்தாமணி, 1585)

என்று சிந்தாமணியை மேற்கோள் காட்டுவாரேயானால் திருத் தக்கதேவர் இயற்றிய அவர் காப்பியம் அக்குறையுடைத்தாம். அவரே தம் காப்பியத்தைக் குறை கூறிக் கொண்டாரா? ஐம் பெருங்காப்பியத்திற்கு உட்பட்ட சிலப்பதிகாரம் அக்குற்றத் திற்குரியதன்றோ!

இலக்கியம் திணை, துறை, கைகோள், கூற்று, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, விளைவு ஆகிய உறுப்புக் களைத் தாங்கி இயலும். இந்த இலக்கியத்தில் பாவகைகள், அணி வகைகள், பொருள்கோள் வகைகள் என்று இன்ன அமைப்புகள் உண்டு.

நாடகத்தில் கதை ஒன்றுண்டு. அது உண்மையாகவும் புனைந்துரையாகவும் அமைந்து தெய்வம், அரசன், மக்கள், இவர்களைச் சார்த்தி அமைக்கப் பெறுவதாகும். ஒரு முழு நாடகத்தில் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருட் பயனும் அமைய வேண்டும். அறத்தைக் கூறும் முறை, பொருளைக் கூறும் முறை, இன்பத்தைக் கூறும் முறை, வீட்டினைக் கூறும் முறை என்று இவற்றில் வேறுபாடு உண்டு. நாடகத் தொடக்கம் சுவையை ஊட்டி முழுவதும் காணும் வேட்கையினைப் பிறப்பிக்கு மாறு அமையும். நாடகங்களில் தலைவர்கள் அமைப்பில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற வேறுபாடுகளும், அறம், பொருள், இன்பம், வீடுகளின் வேறுபாடுகளும் ஒன்பான் சுவை களின் வேறுபாடுகளும் அமைந்திருக்கும்.

நாடகத்தில் காட்சி, களன் என்ற பாகுபாட்டில் ஓரங்கம் முதல் பத்து அங்கங்கள் வரையிலும் நாடகங்கள் உண்டு. ஐந்து அங்க நாடகங்கள் பெரும்பான்மையானவை. ஏழு அங்க நாடகம் சற்று விரிவுடையது. கால எல்லை கூடியது. பத்து அங்க நாட கம் மூன்று பகுதிகளாகப் பிரிந்து மூன்று நாள்களில் நிகழ்வதாக அமையும்.

நாடகங்களில் காலப் பொருத்தம், இடப்பொருத்தம், நடிப்புப் பொருத்தம் என்ற இவை மிக இன்றியமையாதன. இவையே நடிப்போன் மெய்ப்பாட்டினைக் காண்போனுக்கு அவ்வாறே ஊட்டுவிப்பனவாகும்.

நாடகத்தில் கள அமைப்பு, காட்சி அமைப்பு; தனிச்சிறப் புடையன. நாடகத்தில் தற்கூற்று, புறக்கூற்று (களத்துள் பலர் தமக்குள்ளேயே பேசிக்கோடல்), விளிக்கூற்று (பலரை விளியாக்கி முன்னிலைப்படுத்திக் கூறுவது), விட்புலக் கூற்று (வானத்தை நோக்கிக் கூறுவது) வியப்பு, நயப்பு, நகை முதலிய மெய்ப்பாடு களைக் காட்டிப் பேசும்போது இடையிடையே நாடக உறுப் பினர் பிறர் பேசுவது போல நடித்துப் பேசும் இடையிட்ட கூற்றுகளும் உண்டு.

நாடகங்கள் பலவகைப்படும். மேற்கூறிய ஓரங்க முதல் பத்து அங்கங்கள் வரையிலுள்ள நாடகங்களைப் போலாது குரவைக் கூத்துக்கள் பலவகையுண்டு. வரிக்கூத்துகள் எண் வகைகளாக விரியும். இவை பாடலொடு ஆடலும் இயைந்தன. நகைக்கூத்து என்ற தனிக் கூத்து உண்டு. நாடக அமைப்பில் பெயரிடுவதில் அப்பெயர் புலப்பாட்டின் பொருளில் பாகுபாடு உண்டு. தலைவன் பெயரால், தலைவி பெயரால், நாடகத் தலைவர்களின் பண்புகளின் பெயரால் என்று எண்ணிறந்த வகைகள் உண்டு. உள்ளுறை நாடகம், என்பதும் ஒன்றுண்டு. நாடகக் குறிக்கோள், நாடக உறுப்பினர் அமைப்பு, அவ்வுறுப்பி னர் பகுதியை ஏற்று நடிப்போர் பொருத்தம், புனைவுப் பொருத்தம் இவை நாடகத்திற்கு இன்றியமையாதவை.

நாட்டிய நாடகம் பலதிறப்பட்ட இசைப்பாடல்களோடு ஒரு நிகழ்ச்சியையோ, ஒரு கதையையோ பொருளாகக்கொண்டு ஆடிப்பாடி ஒரு பாத்திரமே பல அங்கத்தில் பல திறப்பட்ட வேடம் புனைந்து ஆடுவதாக அமையும். இந்நாடகத்தில் பல பாத்திரங் களும் கலப்பதுண்டு. பாத்திரங்களின் எண்ணிக்கை அங்கங்களின் எண்ணிக்கை, சுவை, பயன் இவற்றினால் நாடகம் போன்றதே யாகும்.

நாடகத்தினுள் நாடகம் வர அமைப்பது ஒரு வகை. இழி சினர் மொழியில் கூத்தாட்டொடு பள்ளு, குறம் போன்ற அமைப்பில் நாடகம் அமைவதுண்டு.

தமிழில் நாடகம் என்பது, இன்று நாம் கருதும், 'நாட கம்' அன்று நாட்டியத்தைக் குறிக்கும். ஆனால் மிகப் பெரிய விரிவுடையது நாட்டியமேயல்லாமல் நாடகமன்று; அது இக்கூத்து வகையில் ஒன்று.

நாடகம் என்னும் கூத்துநூல் அகத்தியருடைய மாணவரான சாத்தனாரால் இயற்றப் பெற்றது. இந்த நூல் ஒன்பது பெரும் பகுப்புடையது. அதில் அவை நூல் என்ற ஒரு பகுதியும் தொகை நூல் என்ற பகுதியும் இன்று ஒரு நூலாகக் கூத்து நூல் என்ற பெயரில் வெளியிடப் பெற்றுள்ளது. இவற்றையடுத்து வரிநூல், கலைநூல், கரணநூல், தாளநூல், இசைநூல், அவைநூல், கண் நூல் என்ற ஏழு நூல்கள் இன்னும் வெளிவராமல் இருக்கின்றன. இந்த நூல், அடியார்க்கு நல்லார் உரையில் மேற்கோள் நூற்பாக்களாக இருந்த செய்தியை அறிய முடிந்ததேயன்றிப் பரிதிமாற் கலைஞர், சாமிநாதையர் போன்றவர்கள் காலத்துக் கிடைக்காதிருந்து அது இன்று கவிஞர் ச. து. சு— யோகியார் என்பவரால் உரையெழுதப்பட்டு மகாவித்துவான் மே. வீ. வேணுகோபால் பிள்ளை அவர்களால் தமிழ் நாட்டுச் சங்கீத நாடக சங்கமும், மத்திய சங்கீத நாடக அகடமியும் 1968இல் இணைந்து செய்த பொருளுதவியால் வெளி வந்துள்ளது. அந்த நூல் முழுமையும் வெளிவருமேயானால் சிலப்பதிகாரத்திலுள்ள கானல் வரி, வேட்டுவவரி, குன்றக் குரவை, ஆய்ச்சியர் குரவை முதலிய வற்றிற்கு நல்ல விளக்கங்கள் உறுதியாகக் கிடைக்கும். நாம் இன்று மேற்கொண்டுள்ள முயற்சிக்கு வேறாக நாடகம் இயற்றும் படைப்புத் தொழிலே புரியமுடியும்.

இலக்கியத்திற்கு இலக்கணம் கண்டவர் தொல்காப்பியர். மெய்ப்பாட்டியல் என்ற ஓர் இயல், நாடகத்தோடு மிகத் தொடர்புடையது. அங்கே அவர் நமக்குக் காட்டும் சுவைகள்

> ''நகையே அழுகை இளிவரல் மருட்கை
> அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று
> அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப''
>
> (தொல். மெய்ப். 3)

என்று கூறுவர். இவர் தொடர்ந்து இவை எட்டு மெய்ப்பாடுகளும் பிறக்கும் காரணங்களைக் கூறி, எந்த எந்த நிலைக்களங்களில் இவை பிறக்குமென்றும் விரித்துரைக்கின்றார்.

இதனைக் கூத்த நூலில் சாத்தனார் நகைச்சுவைக்கு மட்டும் வேறுபாடுகள் காட்டும் முறையில்,

> ''நகைப்பு அவிநயத்தை நவிலும் காலை
> நகுநகை, மிகுநகை, தொகுநகை, உகுநகை,
> இடிநகை, வெடிநகை, அடுநகை, படுநகை,
> இன்னகை, புன்னகை, மன்னகை, பிறர் நகை

கொள்ளக் கோடிய முகனுறு கொக்கணி
உறுப்புறு கொக்கணி உவப்புறு கொக்கணி
விரி முரி புருவம் விழிசிறுக்குறுதல்
விதிர் விதிர்ச் சிதற்றல் விலா எடுப்புடைமை
செயல் நடைப் பலவாச் செப்பினர் புலவர்''
(கூத்தநூல், பக். 72-73) (கிளைநூல்—1645) என்பர்.

இவ்வாறு பல சூழல்கள் உள்ள நாடக மெய்ப்பாட்டு நகைக் கூறுகள், வெளிப்படையாக உள்ள இலக்கிய மெய்ப்பாட்டு நகைக் கூறுகளோடு, பொருத்திப் பார்ப்பதோ, இல்லாதவற்றை இருப்பதாகத் தேடுவதோ இயலாத செயல். அதனால்தான் சங்க இலக்கியத்தில் நாடகக் கூறு கணிப்பது அருமைப்பாடாக உள்ளது என்றேன். இருந்தாலும் வலிந்த முறையில் இந்நாடகக் கூறுகள் சில சங்க இலக்கியங்களில் இருப்பதாகக் காட்ட முற் படுவேன்.

விறலியர் என்போர் ஆடு மகளிர். அவர்கள் ஆடற்கலை வல்லவர்களாயிருந்து அதன் திறத்தால் அரசனையும், அரசவை யினரையும் மகிழ்வித்து அவர் வழி பரிசு பெற்று வாழும் வாழ்க்கை யர். இலக்கியக் கலையினால் துணைக் கருவி எதுவும் வேண்டா மலே தம் சிந்தனை வளத்தால் செய்யுட் புனைந்து அதில் பொதிந்த கருத்தாலும், கற்பனையாலும் உவமையாலும் கேட் போர் உள்ளத்து உவப்பூட்டி எல்லோரையும் மகிழ்விக்கும் வாய்ப்புடையர். இவர்கட்குக் கேட்கப் பெறும் செவிகளே இன்றியமையாதன, இலக்கியம் செவிநுகர் கனியாதலின்.

நாடகம் கவிஞர்களுக்கு ஓர் ஆடுகளம். அக்களத்து, கண்டு உவப்போர், அக்களத்திடத்து ஆடற்கு இயைந்த தாளம் அமைந்த முழவோர், பாடற்குரியோர், அப்பாட்டிற்கு இயைய ஒலிக்கும் வங்கியம், யாழ், தூம்பு என்னும் பெருவங்கியம் முதலிய கருவிகள் வேண்டும். இவர்கட்குக் காண்போர் கண்களே இன்றியமையாதன. இவையின்றி நாடகம் எனும் ஆட்டம் செம்மையுறாது. இவ்வாட்டம் ஒன்றினை அகநானூற்றில் கபிலர் விரித்துரைக்கின்றார்.

காட்டில் மயிலொன்று அருவியின் சாரலில் ஆடத் தலைப் படுகின்றது. அந்த ஆட்டத்திற்குக் குழல் இசைப்போன் போன்று

அடுத்து வளர்ந்திருந்த மூங்கிலின்கண் வண்டுகள் இட்ட துளை யில் காற்று நுழைந்து குழலிசையைப் பிறப்பிக்கின்றது. மலைப் பாறையில் திடுதிடு என வீழ்கின்ற அருவி எழுப்புகின்ற ஒலி, முழவு அதிர்வது போல முழவு ஒலியாக அமைகின்றது. கலை மான் கூட்டங்கள் செய்கின்ற ஒலி பெருவங்கியம் என்னும் துளைக் கருவி இசைபோல அமைகின்றது. சாரல் மலரிடை மூசுகின்ற வண்டுகளின் ஒலி, யாழிசை போல அமைகின்றது. இவ்வளவு இசைக்கருவிகள் பொருந்தி இசைக்க அவ்விசைக்கு இயைந்து மயில் பாறை மீது குரங்கினங்கள் கண்டு களிக்க இங்குமங்குமாக உலவி ஆடுகின்றது. இது அவைக் களத்துப் பல்லியத்தார் நடுவிலே விறலி ஒருத்தி ஆடுவதுபோல் இருக்கின்றது என்று ஒரு நாடகக் காட்சியை இலக்கியத்தில் வருணித்துக் காட்டுகின்றார். இது நாடகக் காட்சியை இலக்கியத்தில் வருணிக்கும் வருண னையேயன்றி இதுவே நாடகமாகாது. இது நாடகமாக வேண்டு மேயானால் இந்த நாடகம் அகக்கூத்து, புறக்கூத்து, வசைக் கூத்து, புகழ்க்கூத்து, வேத்தியல், பொதுவியல், வரிக்கூத்து, வரிச் சாந்திக் கூத்து, சாந்திக்கூத்து, விநோதக் கூத்து, ஆரியக்கூத்து, தமிழ்க் கூத்து, இயல்புக்கூத்து, தேசிக் கூத்து என்பவற்றில் ஒன்றி லேனும், சொக்கம் என்ற நிருத்தவகை 108–இல் ஒன்றிலேனும், மெய்க்கூத்து தேசி, வடுகு, சிங்களம் என்ற மூன்றில் ஒன்றிலேனும் அவிநயம் என்னும் கதை தழுவாது பாட்டினது பொருளுக்கேற்பக் கை கொட்டித் திறமை காட்டும் கூத்துக்களில் ஒன்றிலேனும் அடங்க வேண்டும். அல்லது பலதிறப்பட்ட நாடகப் பாகுபாடு களில் ஒன்றில் அடங்கியதாக நாடகப் பாவகையும் பண்வகையும் தாள வகையும் குறிப்பிட்டு அவற்றிலொன்றில் அமைந்ததாகச் சுட்டிக் காட்டியிருக்க வேண்டும். அதனால் ஏதோ ஒருபுடை ஒப்புமை கொண்டு கபிலர் நாடக மகளை ''இயலி ஆடும் மயில் நனவுப்புகு விறலியின் தோன்றும்'' என்று உவமை கூறியுள்ளார் என்று கூறலாம். (பாட்டு 82. முதல் 10 வரிகள்) உவமை கூறுவது நாடகம் கூறுவதாகாது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ ஓரங்க நாடகம் ஒன் றினைத் தலைவன், தலைவி என்ற இரண்டு பாத்திரங்களை அமைத்துக் காட்டுகின்றார். பொருள் வயிற்பிரியக் கருதிய தலை வன் ஒருவன், தலைவி தன் பிரிவினைத் தாள மாட்டாள் என்ப தறிந்து அதனை வெளிப்படக் கூறாது மனத்து உன்னி அவட்குத் தலையளி செய்கின்றான். அத்தலைவி அவன் புரிகின்ற தலை

யளிக்கும் அவனிடை நிகழ்கின்ற முகவேறுபாட்டிற்குமுள்ள மாற்றத்தை அறிந்து அவன் தன்னைப் பிரியக் கருதுகின்றான் என்று துணிகின்றாள். அதனால் அவனை அணுகி அவன் முகம் நோக்கி வறிதாக முறுவலித்துக் தலைவன் செல்லும் காட்டிடத்துக் காய்ந்து உலறியதால் நிழலற்ற ஓமை மரங்களையும் கருங்கற் பாறையில் பளிங்குபோல் உதிர்ந்து கிடக்கும் நெல்லிக்காய்களையும் நினைக்கின்றாள். கதிரவனின் வெப்பம் உண்ட கூரிய வேல்நுனிபோல் கிடக்கும் பரற்கல்லின் மீது அவன் நடந்து செல்ல வேண்டிய துன்பச் சூழ்நிலையையும், விரல் நுதிகளை அவை தைத்தும் இடித்தும் சிதைக்கும் வன்னிலமாக அமைந்த அக்காட்டு வழியையும் அதன் வழி அவன் செல்லத் துணிந்த கொடுமையையும் அத்துன்பத்திற்குத் தன்னைத் துணையாக அழைத்துச் செல்லாத வன்கண்மையையும் உன்னுகின்றாள். மணந்த காலத்து 'நின்னிற் பிரியேன்' என்று சூளுரைத்தவன் அறத்தாறு அழுங்குமாறு பிரியக் கருதியது என்னையோ? என்று அவனைக் கேட்பாள் போலப் பார்க்கின்றாள். அப் பார்வை ஓவியங் காணுநர் அவ்வோவியத்திடை நிகழும் குறிப்பினைக் கண்டு கொள்வது போல அவன் முகத்திடை நிகழும் குறிப்பினைக் கண்டு நொந்து நோக்குகின்றாள். நோக்கியவள் கண்கலங்கி நடுங்கித் தன் அகத்து அணைத்திருந்த புதல்வனின் தலையின்கண் புனையப் பெற்றிருந்த செங்கழுநீர் மலர் மாலையினை நுகர்ந்து பெருமூச்சு விடுகின்றாள். அம்மாலை அதுபோது கருகித் தன் நிறங்கெட்டதைக் கண்டு தலைவன் தான் முன்னிய செலவினை முனிந்து விடுகின்றான் என்று பாடுகின்றார்.

இப்பாட்டில் பேச்சே நிகழாத வெறும் மெய்ப்பாடு நிகழ்கின்றது. அவள் பெற்றிருந்த பல திறப்பட்ட உணர்வுகளை அவள் புலப்படுத்தாது அடக்கவும் அவை மெய்ப்பாட்டு வழிப் புலப்படவுமாக நின்ற காட்சியை அவள் உயிர்த்த வெப்பக் காற்று புதல்வன் தலைக்கண் அணிந்திருந்த நீர்ப்பூவின் நிறத்தினை அழித்ததையும் தலைவன் கண்டு செலவொழிகின்றான். இங்குத் தலைவன் தலைவியரிடை நின்ற மெய்ப்பாட்டினை வருணித்துக் காட்டுகின்றார் புலவர். இது இலக்கியத்தில் புலவன் காட்டிய காட்சி. இது நாடகமானால் இதனைப் படித்து நம் மனக் கண்ணில் காட்சியாக்கி மகிழ்வது போல் மகிழாமல் தலைவன் தலைவியர்க்குரிய மெய்ப்பாடுகளை அவர்கள் புலப்படுத்த அதனைக் கண்காட்சியாகக் கண்டு மகிழ்வோம். காட்சி வழி சுவைப்பது எளிது. கேட்டுக் காட்சியாக்கி

மகிழ்வது அருமைப்பாடுடையது. இதுதான் இலக்கியத்திற்கும் நாடகத்திற்கும் உள்ள வேறுபாடு.

கலித்தொகையில் உள்ள பாடல்களை மேலைநாட்டார் நாடக இலக்கணக் கூறுகளின்படி திரு. மார்க்கபந்து சர்மா என்பவர் பகுத்துக் காட்டி நூல் எழுதியிருக்கின்றார். இந்தப் பகுப்பு முறைகூட மேலை நாட்டார் பகுப்பு முறையை அடிப் படையாக வைத்துக்கொண்டு இலக்கியத்தில் நாடகம் காண முற்பட்ட முயற்சியேயன்றிக் கலித்தொகைப் பாடல்களில் நாடகப் பாடல்கள் என்று விளக்கிய முறை அன்று.

பரிபாடலில் உள்ள பல பாடல்களை இத்தகைய பகுப்பு முறையில் பகுக்கலாம்.

பத்துப்பாட்டில் நாடகம் அமைக்க வாய்ப்புடைய செய்திகள் உண்டேயன்றி ஆண்டும் நாடகக் கூறுகள் இல்லை. சங்க இலக்கியத்தில் நாடகக் கூறுகள் காண்பது அருமைப்பாடுடையது.

**துணை நின்ற நூல்கள் :**


(1) சிலப்பதிகாரம் மூலமும் உரையும்
அடியார்க்கு நல்லார் உரை ... சாமிநாத ஐயர் பதிப்பு

(2) அகநானூறு ... கழகப் பதிப்பு

(3) கலித்தொகை ... கழகப் பதிப்பு

(4) பரிபாடல் ... கழகப் பதிப்பு

(5) பத்துப்பாட்டு ... சாமிநாத ஐயர் பதிப்பு

(6) நாடகவியல் ... பரிதிமால் கலைஞர்

(7) கூத்த நூல் ... சாத்தனார்

# 12. சங்க இலக்கியத்தில் திருமால் நெறி

தெ. ஞானசுந்தரம்

**வாடாக் கவிமலர்கள் :**

சங்க இலக்கியங்கள் சமயச் சார்பற்றவை எனினும் சமயத்தை மறந்தவை அல்ல. அவற்றின் நோக்கம் சமயக் கருத்துகளை விளக்குவது அன்று; வாழ்க்கையின் சிறப்பினை இசைப்பதே ஆகும். சங்க காலத் தமிழரின் வாழ்வில் சமயப் போராட்ட இடிமுழக்கம் இல்லை. இறைவனைப் பரவும் இன்னிசை முழக்கமே இருந்தது. அவர்களுக்குச் சமயமே வாழ்க்கையாக அமையாமல் வாழ்க்கையின் ஒரு கூறாகவே சமயம் இலங்கியது.பண்டை நல்லிசைப் புலவர்களின் பாடுபொருள் மனிதனே தவிரச் சமயம் அன்று. சங்கப் பாக்களில் சமய மணம் அளவாக இழைகிறது ; முல்லைப் பூவின் மணம் போலே. இறைவன் இணையடிகளுக்கே ஒரு கூடை எழுத்து மலர்களையும் அருச்சித்துத் தீர்க்கும் வழக்கம் நக்கீரரிடம் தொடங்குகிறது. அது திருமுருகாற்றுப்படை எழுத்து ஓட்டத்தில் ஏற்பட்ட ஒரு புதிய மடை மாற்றம். செல்வர்களை நாடிச் சென்ற சொல்லுழவர்களைச் செவ்வேளைத் தேடிச் செல்லுமாறு ஆற்றுப்படுத்துவதும் ஒரு புதிய திருப்பமே.

**நூற்பா அகல் :**

பண்டைத் தமிழ் மக்களின் வழிபாட்டு வரலாற்றினைத் தெரியத் துணைபுரியும் சிறிய அகல்விளக்கு,

> ''மாயோன் மேய காடுறை உலகமும்
> சேயோன் மேய மைவரை உலகமும்
> வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
> வருணன் மேய பெருமணல் உலகமும்
> முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
> சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே''

என்னும் நூற்பா.[1]

எனினும் இதன் வெளிச்சத்தில் தொலைதூரத்துப் பண்டை மக்களின் வழிபாட்டு மூர்த்தங்கள் சரியாகப் புலப்படவில்லை. சில விக்கிரகங்களை நாம் அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் தவிக்கிறோம். வேந்தனும் வருணனும் யாவர்?—இந்த வாமன வினா திரிவிக்கிரமனாய் வளர்கிறது.

''மருத நிலத் தெய்வமாகிய வேந்தன் அரச தெய்வமாகிய சிவபெருமானோ விண்ணவர் தெய்வமாகிய இந்திரனோ என்பது விளங்கவில்லை. நெய்தல் நிலத் தெய்வமாகிய வருணன் ஆரியத் தெய்வமோ தமிழ்த் தெய்வமோ என்னும் ஐயப்பாடு நிகழற்பாலது. வண்ணன் என்பது பாடமாயின் அது தமிழ்த் தெய்வத்தையே குறிப்பதாகும். இந்திரன் திராவிடக் கடவுளெனில் இன்றிறன் என்பது இந்திரனென மருவிற்றென்க'' என்கிறார் கா. சு. பிள்ளை.[2]

இவ்விளக்கம் நம்முள் எழும் வினாவுக்கு விடையாக அமையவில்லை. நமக்கு முன்னே நம்மைப் போலத் திக்குத் தெரியாமல் இன்னொருவரும் தவித்திருக்கிறார் என்னும் எண்ணத்தையே ஏற்படுத்துகிறது. அவர் குரலில் கேட்கும் ஓகாரமும் 'ஆயின்', 'எனில்' என்னும் சொற்களும் காட்சி, ஐயம் ஆகிய படிகளிலேயே அவர் தவித்து நிற்பதைத் தெரிவிக்கின்றன.

குறிஞ்சி நிலமக்கள் தம் தெய்வத்தைத் தீயின் கூறாகக் கொண்டு சிவந்தவன் என்னும் பொருளில் சேயோன் என்றும், முல்லை நிலமக்கள் தம் வானாவாரிப் பயிர்கள் விளைய மழை தேவைப்பட்டதால் கார் முகிலையே தெய்வமாகக் கொண்டு மால் என்றும், அறவாழ்வு நடத்தும் அரசன் தேவர் வேந்தனாவான் என்னும் கருத்தில் அவ்வரசனையே தெய்வமாகக் கொண்டு வேந்தன் என்றும், நெய்தல் நிலமக்கள் கடலாலே வாழ்ந்ததனால் கடலையே தெய்வமாகக் கொண்டு அதனை வாரணன் (வார் அணம் நிலத்தை வளைந்து அல்லது சூழ்ந்து இருப்பது; கடல்) என்றும் பெயரிட்டு வணங்கினர். வாரணம் என்பதே வடசொல் வடிவில் வருணன் என்று குறிக்கப்பட்டது.[3] இது தேவநேயப் பாவாணர் விளக்கம்; கணிப்பு.

இவரது விளக்கமும் முற்றும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இல்லை. மணம், இளமை, அழகு ஆகியவற்றின் பசுங்கூட்டமான முருகனைத் தீயின் கூறுபாடாகப் பண்டையோர் கருதினர் என்ப

தனையும், மருதநிலமக்கள் தங்கள் தெய்வத்தை மறுமைப் பேற்றினைக் கருத்தில் கொண்டு வேந்தனாகக் கொண்டார்கள் என்பதனையும், வாரணன் என்பதுவே வருணன் என்று குறிக்கப்பட்டது என்பதனையும் எந்த அளவுக்கு ஆராய்ச்சி உலகம் ஏற்றுக்கொள்ளும் என்பது சிந்தனைக்குரியது.

**இலக்கியச் சரவிளக்கு :**

இச்சிக்கலுக்குத் தீர்வு காணச் சங்க இலக்கியங்கள், அவற்றையொட்டி எழுந்த சிலப்பதிகாரம் ஆகியவற்றைத் துணையாகக் கொள்ளவேண்டியுள்ளது. சங்க காலத்தில் சிவன், சேயோன், மாயோன், இந்திரன், பலராமன், கொற்றவை ஆகிய கடவுளர்களே முன்வரிசையில் காட்சி தருகின்றனர்.[4] இவர்களைத் தவிர நான்முகன், தேவர், உமை ஆகியோரைப் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. சிலப்பதிகாரக் குன்றக் குரவையில் செந்தில், செங்கோடு, வெண்குன்று, ஏரகம் முதலிய முருகனின் படைவீடுகள் குறிக்கப்படுகின்றன. மாயோன் பூவைப் பூ வண்ணக் கண்ணனாகவும் தம்பியொடும் கான் போந்த சேவகன் இராமனாகவும் நாராயணனாகவும் போற்றப்படுகிறான். 'தேவர் கோமான் தெய்வக் காவற் படை'[5] 'விண்ணவர் தலைவனை விழுநீர் ஆட்டி'[6] முதலான தொடர்களில் இந்திரனைப் பற்றிக் குறிக்கப்படுகிறது. 'பிறவா யாக்கைப் பெரியோன்'[7] என்று சிவன் பெருந்தெய்வமாகப் பேசப்படுகிறான்.

சிலப்பதிகாரத்தால் சேயோன் முருகனே என்பதும், மாயோன் நாராயணனே என்பதும், வேந்தன் வேதங்களில் இடம் பெற்றுள்ள இந்திரனே என்பதும் வெளிச்சமாகின்றன. வருணன் வழிபாடு நின்று போயிற்று என்பது தெரிகிறது. வேந்தன் ஆரியத் தெய்வமென்று விளங்குவதால் வருணனையும் ஆரியத் தெய்வமென்று கொள்வது பிழையாகாது.

**ஐயமும் தீர்வும் :**

திணை மக்களிடையே நிலவிய கடவுளருள் மாயோனும் சேயோனுமே தொன்றுதொட்டுத் தொடர்ச்சியாக வழிபடப் பெற்று வந்துள்ளனர். நானில மக்கள் எவரிடத்தும் முகிழ்க்காத சிவன்வழிபாடு எங்ஙனம் எல்லாத் திணைகளுக்கும் பொதுவாக அமையக் கூடும் என்னும் நேர்மையான ஐயம்எழுகிறது. சேயோன்

வழிபாட்டிலிருந்தே சிவன் வழிபாடு தோன்றியது என்று கருது வோரும் உண்டு.* இவ்வாறு கோடற்குச் சங்க நூல்களில் தக்க சான்றுகள் இல்லை.

**புதுநெறி :**

தமிழர் நாகரிகத்தோடு ஆரிய நாகரிகம் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே கலந்துள்ளது. வடசொற்கிளவிகளைத் தமிழில் எவ்வாறு ஆளவேண்டும் என்று தொல்காப்பியர் விதி கூறுவதனின்றும் அக்கலப்பு எத்துணை வன்மையுடையதாய் இருந்தது என்பதனை உணரலாம். சங்க காலத்தில் மன்னன் இராய சூயம் வேட்கும் நிலை இருந்தது. சோழநாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் சிறந்ததொரு வேள்வி வாயிலாகப் பெருவிருந்து செய்த்தனைக் கண்டு ஆவூர் மூலங் கிழார் வாழ்த்துரைக்கும் செய்தியினைப் புறப்பாட்டு தெரி விக்கிறது.[8] இவ்விரு நாகரிகக் கலப்பும் சில நூற்றாண்டுகள் நிகழ்ந்து இறுதியில் இருநெறிகளும் தம்முள் சிலவற்றை இழந்து ஒரு புதுநெறியாகவும் பொதுநெறியாகவும் உருவெடுத்தன.

இதன் விளைவாக, ஆரியர்கள் கொண்டு வந்த இந்திர வழி பாடு வேர் பிடித்துத் தளிர்த்துப் பின்னர்ப் பட்டுப் போயிற்று; நெய்தல் நிலத்தார் கைக்கொண்டிருந்த வருண வழிபாடு நின்று போயிற்று. மாயோன் விட்டுணுவாகவும், நாராயணனாகவும் பெயர் சூட்டப் பெற்றான்; சேயோன் சுப்பிரமணியனானான்; வேதகாலத் தொடக்கத்தில் உருத்திரனாக முகிழ்த்துக் காலப் போக்கில் சிவனாக உருவெடுத்த கடவுள் வழிபாடு தமிழர் களிடையே வேரூன்றிச் செழித்து வளர்ந்தது.

வடநாட்டிலுள்ள கைலைமலையைச் சிவனுடைய சிறப் பான உறைவிடமாகவும், நேப்பாளத்தில் மட்டுமே கிடைக்கும் அக்கமணியைச் சிறந்த சைவச் சின்னமாகவும் சொல்வது. சிவன் வடநாட்டினின்றும் தென்னாட்டிற்குப் போந்தவன் என்னும் எண் ணத்தை வலியுறுத்துகிறது. 'தென்னாடுடைய சிவனே போற்றி; எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்னும் மணிவாசகப் பெருந்தகையும் 'ஒலிதரு கைலை உயர்கிழவோனே'[9] என்றும் 'மானக் கயிலை மலையாய் போற்றி'[10] என்றும் தலைக்கட்டு கிறார்; தெய்வச் சேக்கிழார் திருமலைச் சிறப்பு என்று கைலா யத்தைப் போரப் பொலியப் பாடுகிறார். இவையெல்லாம் இக் கருத்திற்கு வன்மை சேர்க்கின்றன.

**இசைவு முத்திரைகள் :**

பக்தி இலக்கியக் காலத்தில் முருக வழிபாடு சிவன் வழி பாட்டில் கலந்து இணைந்தது. சிவனும் விட்டுணுவும் முறையே சைவ வைணவ சமயங்களின் முழுமுதற் கடவுளாயினர்.

'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்' [11]

என்று திருநாவுக்கரசரும்,

'அந்தமிழ் இன்பப் பாவினை அவ்வடமொழியை'[12] என்று குலசேகரப் பெருமாளும் இறைவனைப் பாடுகின்றனர். மொழிப் போராட்டமோ இனப் போராட்டமோ இல்லாத காலத்தில் வாழ்ந்த அப்பெருமக்கள் பாடியுள்ள இத்தகு தொடர்கள் தமிழ் ஆரிய நாகரிகக் கலப்பின் விளைவாக உருவான புதுச் சமய நெறிக்கு அவர்கள் தந்த இசைவு முத்திரைகளேயாகும்.

**மண்ணில் மலர்ந்த மால்நெறி :**

தமிழ்நாட்டுப் பழங்குடியினராகிய முல்லை நிலத்து ஆய ரிடையே முகிழ்த்த மாயோன், தமிழ் வேதநெறிகள் கலப்பின் விளைவாகத் தன் 'வனவாசத்தை' முடித்துக்கொண்டு முதல் தெய்வமாக வளர்ந்து, பத்தி இயக்கக் காலத்தில் முழுமுதற் பொருளாகச் செங்கோலோச்சத் தொடங்கினான்.[13] வைணவ சமயம் தன் வளர்ச்சியில் ஒரு சிறப்புக் கட்டத்தை அடைந்தது.

**பழம் பெரும் திவ்விய தேசங்கள் :**

திருமால் வழிபாட்டின் பிறப்பிடம் காடும் காடு சார்ந்த பகுதிகளுமே யாதலால் தொடக்கத்தில் அப்பகுதிகளிலேயே அவனுக்குக் கோயில்கள் எழுந்தன. மதுரையை அடுத்த திருமாலிருங்குன்றம், [14] காஞ்சிநகரைச் சார்ந்த திருவெஃகா[15] ஆகிய இரு திருமால் தலங்கள் பரிபாடலிலும், பெரும்பாணாற்றுப் படையிலும் சுட்டப்படுகின்றன. முல்லை அரும்புகளும், மயிலும் குயிலும் குறிக்கப்படுவது கொண்டு திருமாலிருங்குன்றத்தின் இயற்கை வனப்பினையும், 'வெயில் நுழைபு அறியாக் குயில் நுழை பொதும்பர்' என்னும் குறிப்பால் திருவெஃகாவின் முல்லை நிலச் சூழலையும் அறியலாம். மேலும் சிலம்பு, திருவரங்கத்தில் பெருமான் கிடந்த கோலத்தையும், திருவேங்கடத்தில் நின்ற கோலத்தையும் எடுத்துரைக்கிறது. அவ்விடங்களும் சோலை களுக்கு நடுவே இருந்த அழகினை ஆழ்வார் பாசுரங்கள் சொல்

லோவியங்களாக்கியுள்ளன. இருந்தையூர் என்னும் திருமால் தலம் பரிபாடல் திரட்டில் குறிக்கப்படுகிறது. மதுரையை அடுத்த அத்தலத்துப் பெருமான் 'ஸ்ரீஇருந்த வளமுடையார்' என்று பேசப்படுகிறார். அக்கோயிலே இப்பொழுதுள்ள கூடலழகர் கோயிலாகும்.

**திருமால் திருப்பெயர்கள் :**

சங்க நூல்களில் திருமால் மால், மாயோன், நெடியோன் ஆகிய தமிழ்ப் பெயர்களாலேயே குறிக்கப்பெறுகிறான். வைணவம் பெருமானுக்குரிய சிறப்புப் பெயர்களாகக் கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விட்டுணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன், இருடீகேசன், பற்பநாபன், தாமோதரன் என்னும் பன்னிரண்டனையும் சுட்டும். **இவற்றுள் எப் பெயரும் அப்படியே சங்கப் பாக்களில் இடம் பெறவில்லை.** கேசவன் என்பதன் மொழிபெயர்ப்பாகக் 'கூந்தல்'[16] என்பது பரிபாடலில் காணப்படுகிறது. "இயன்ற எல்லாம் பயின்றகத்தடக்கிய வேதமுதல்வன்" என்பது நற்றிணைக் கடவுள் வாழ்த்துப் பகுதி. இதற்கு அறிவுடைப்பொருள், அறிவில் பொருள்களாகிய எல்லாப் பொருள்களினுள்ளும் உறைந்து அவற் றைத் தன்னுள்ளே அடக்கியுள்ள வேதத்தில் உணர்த்தப்படும் முதற்பொருள் என்பது கருத்து. இதுவே நாராயணன் என்னும் பெயரின் பொருளும் ஆகும். 'மாதாங்கு தடக்கை'[17] 'திரு ஞெமர்ந் தமர்ந்த மார்பன்[18] ஆகியன 'சிரீதரன்' என்னும் பெயரின் பொருளைத் தருவன. 'திருவின் கணவ'[19] என்பது மாதவனைக் குறிக்கும். 'நீர் செல நிமிர்ந்த மாஅல்'[20] என்பது திரிவிக்கிரமன், வாமனன் ஆகிய திருப்பெயர்கள் இறைவனுக்கு அமைந்தவாற்றைக் கட்டுரைக்கின்றன. 'நீலநிற உருவின் நெடியோன் கொப்பூழ், நான்முக ஒருவற் பயந்த பல்இதழ்த் தாமரைப் பொகுட்டின்'[21] என்னும் பெரும்பாணாற்றுப் படைத் தொடர் பற்பநாபன் என்னும் பெயர்க் காரணத்தைத் தெரிவிக்கிறது. 'எவ்வயினோயும் நீயே'[22] என்பது விட்டுணு வின் எங்கும் பரந்திருக்கும் தன்மையைக் குறிக்கிறது. 'கோவ லன்'[23] என்பது கோவிந்தனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். **மதுசூதனன், இருடீகேசன். தாமோதரன் ஆகிய பெயர்களின் பொருளைக் காட்டும் தொடர்கள் சங்கப் பாக்களில் காணப்பட வில்லை.**

**திருக்கோலம் :**

திருமால் நீல நிறத்தவன். நீல மணி, கடல், முகில், பூவைப்பூ[24] ஆகியன அவன் நிறத்திற்கு உவமைகள் ஆகும். அவன் மார்பில் அணியும் கௌத்துவமணியும்[25] துழாய் மாலையும்[26] கையில் கொண்டுள்ள ஆழியும் சங்கும்[27] மார்பில் உறையும் திருமகளும், அவனுடைய சிறப்பு அடையாளங்களாகும். **சங்க நூல்களில் அவனுக்குத் தேவியாகத் திருமகள் மட்டுமே சுட்டப்பெறுகிறாள். அவனுக்குத் தேவியாகக் குறிக்கப்படும் இராதை அண்மைக்காலம் வரை தமிழ் இலக்கியத்தில் இடம் பெறாதவள். நப்பின்னை பற்றிய செய்தி சங்க நூல்களில் காணப்படவில்லை; சிலம்பிலேயே காணப்படுகிறது.**

**ஐந்து வடிவங்கள் :**

இறைவனுக்கு ஐந்து வடிவங்கள் உண்டு என்பது வைணவர் துணிபு. அவை விண்ணாட்டு நிலை (பரத்வம்) அணிவகுப்பு நிலை (வியூகம்) பிறப்பு நிலை (விபவம்) உள்ளுறை நிலை (அந்தர்யாமித்வம்) வழிபடுநிலை (அர்ச்சை) என்பன. பெருமான் வைகுந்தத்தில் இருப்பது விண்ணாட்டு நிலை; பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பது அணிவகுப்பு நிலை; தேவர், மனிதர், விலங்கு, தாவரம் முதலிய உருவத்தைத் தன்விருப்பினால் ஏற்றுக்கொண்டு வருவது பிறப்பு நிலை; பொருள்தோறும் கரந்து நிறைந்திருப்பது உள்ளுறைநிலை; அடியவர் அமைத்த வடிவத்தையே தனக்கு மேனியாகக்கொண்டு மண்ணுலகில் இருப்பது வழிபடுநிலை. இச் செய்தி பாஞ்சராத்திரம் என்னும் சமயநூலில் காணப்படுவது.

இவ்வகை வடிவங்களும் பரிபாடலில் குறிக்கப்பட்டுள்ளன.

**விண்ணாட்டு நிலை :**

'தொழுவோர்க்கு, உரிது அமர் துறக்கமும் உரிமை நன்கு உடைத்து'[28] என்பது வைகுந்தத்தைக் குறிக்கிறது. பெருமானை வழிபடுவார்க்கு வைகுந்தம் உரியதாகும் என்கிறது இவ் வடி. இதில் துறக்கம் என்று குறிக்கப்படுவது பெருமான் உறையும் காலத்தால் மாறுபடாத திருநாடாகிய வைகுந்தமாகும்.

**அணிவகுப்பு நிலை :**

இறைவன் பாற்கடலில் இருக்கும் அணிவகுப்பு நிலையை,

தன்உரு உறழும் பாற்கடல் நாப்பண்
மின்அவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த
கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கைத்
துளபம் சூடிய அறிதுயி லோனும்[29]

என்னும் பகுதி விளக்குகிறது.

பாற்கடலில் பெருமான் நால்வேறு வடிவினனாய்ப் படுத்திருக்கிறான் என்றும், அந்நிலையில் வாசுதேவன், சங்கருடணன், அரத்யும்நன், அநிருத்தன் என்னும் பெயர்களைத் தாங்கியுள்ளான் என்றும் கூறுவர். இந்நால்வர் பெயரையும் முறையே செங்கட், காரி, கருங்கண் வெள்ளை, பச்சை, பைங்கண்மால் என்று தமிழாற் குறித்து அணிவகுப்பு நிலையினை,

''செங்கண் காரி கருங்கண் வெள்ளை
பொன்கண் பச்சை, பைங்கண் மாஅல்''[30]

என்று பேசுகிறார் கடுவன் இளவெயினனார்.

**பிறப்பு நிலை :**

சிவன் பிறவா யாக்கைப் பெரியோனாய்ச் சிறப்பெய்துவது போலத் திருமால் பல பிறப்புகள் பிறந்து ஒளிவரும் முழுநலம் பெறுகிறான். அவன் வினையடியாக இவ்வுலகில் பிறப்பதில்லை; தன் விருப்பத்தால் உருவேற்று வருகிறான். இதனைப் 'பிறவாப் பிறப்பிலை, பிறப்பித்தோர் இலையே'[31] என்று போற்றுகிறது பரிபாடல்.

பெருமான் எண்ணற்ற பிறப்புகள் எடுத்திருந்தாலும் அவற்றுள் பத்துச் சிறப்பானவை. மீன், ஆமை, பன்றி, ஆளரி, குறளன், பரசுராமன், இராமன், பலராமன், கிருட்டிணன், கல்கி என்பன அப்பத்துப் பிறப்புகள். இவற்றுள் பன்றி, ஆளரி, பலராமன், கிருட்டிணன் ஆகியவை பற்றிய குறிப்புகள் பரிபாடலில் உள்ளன.

''கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய ஊழி''[32]என்றும்

''பிருங்க லாதன் பலபல பிணிபட
வலந்துழி மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்து
அலர்ந்த புகழோன், தாதை ஆதலின்
இகழ்வோன், இகழா நெஞ்சினனாக, நீ இகழா

நன்றா நட்ட அவன்நன் மார்பு முயங்கி
ஒன்றா நட்டவன் உறுவரை மார்பின்
.................வகிர் வாய்த்த உகிரினை'' என்றும்[33]

'நீயே, வளையொடு புரையும் வாலியோற் கவன்
இளையவன் என்போர்க்கு இளையை ஆதலும்''என்றும்[34]

''கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்
எரிசினம் கொன்றோய்'' என்றும்[35]

முறையே கேழல், ஆளரி, பலராமன், கிருட்டிணன் ஆகிய பிறப்புகள் சுட்டப்படுகின்றன.

''திகழ்ஒளி முந்நீர் கடைந்த அக்கால் வெற்புத்
திகழ்புஎழ வாங்கித் தம்சீர்ச் சிரத்து ஏற்றி
மகரமறி கடல்வைத்து நிறுத்து''

என்று[36] கூர்மாவதாரத்தைப் பரிபாடல் திரட்டு சுட்டுகிறது.

பரிபாடலில் மீன், குறளன், இராமன், கல்கி ஆகிய பிறப்புகள் பற்றிய குறிப்பு யாதுமில்லை. பிரகலாதன் பிருங்கலாதன் என்று குறிக்கப்படுகிறான். முல்லைப்பாட்டில் குறளனும் புறப்பாட்டில் இராமனும்[37] குறிக்கப்படுகின்றனர். **மீன், கல்கி ஆகிய பற்றிச் செய்திகள் எங்கும் காணப்படவில்லை.**

திருமால் அன்னச் சேவலாகிச் சிறகாலே ஊழிக் காலத்து மழை நீரை வறளச் செய்தான் என்பது (பரிபாடல் 3-25-26) பரிபாடல் கூறும் புதிய செய்தி. கண்ணன் அவுணர்கள் கொண்டு ஒளித்த ஞாயிற்றைக் கொண்டு வந்து நிறுத்தினான் என்பது புறநானூற்றிலே (174) காணப்படும் ஒரு குறிப்பு. பால்போலும் மதியினைச் சேர்ந்து பாம்பு மறைத்ததாகவும் அப்பாம்பினைக் கண்ணன் அகற்றியதாகவும் ஒரு செய்தி முல்லைக்கலியில் வருகிறது. ஏறுதழுவும் வீரன் அரவாகவும், அவன் தழுவிய பால்நிற ஏறு நிலவாகவும், அவனைக் குத்தி அகற்றும் கரிய ஏறு கண்ணனாகவும் உவமிக்கப்படுகின்றன. (முல்லைக்கலி 105-43-46) **கண்ணனின் இச்செயல் ஆழ்வார்கள் பாடாதது; அரியது.**

**உள்ளுறை நிலை :**

இறைவன் எல்லாப் பொருள்களின் உள்ளேயும் உறையும் நிலையினை,

'தீயினுள் தெறல் நீ; பூவினுள் நாற்றம் நீ'

என்று தொடங்கி 'அனைத்தும் நீ; அனைத்தின் உட்பொருளும் நீ' என்று அழகுற விளக்குகிறது கடுவன் இளவெயினனாரின் பரிபாடல்.[38] தக்கிணாமூர்த்தி, முருகன் ஆகியோராக விளங்குவதும் திருமாலே என்கிறார் அவர். மும்மூர்த்திகளும் அவனே என்கிறார் நல்லெழுநியார்.

''ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
எவ்வயி னோயும் நீயே''[39]

''மூவுரு வாகிய தலைபிரி யொருவனை''[40]
என்னும் இப்பகுதிகள்போல் ''முனியே நான்முகனே முக்
கண்ணப்பா என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக் கண்கரு மாணிக்கமே[41]
என்னும் நம்மாழ்வார் திருவாய்மொழி அமைந்துள்ளது.

**வழிபடு நிலை :**

அடியார் மனத்தில் கருதும் உருவமே அவனுக்கு உருவம் என்பதனை 'மணக்கோள் நினக்கென வடிவு வேறிலையே'[42] என்னும் பரிபாடல் தொடர் தெரிவிக்கிறது. இது 'தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே'[43] என்னும் பொய்கையாழ்வார் கூற்றை நினைவூட்டுகிறது. 'நின்னிற் சிறந்த நின் தாளிணையவை'[44] என்பது அவனது வழிபடு நிலையின் சீர்மையினைத் துலக்குகிறது.

அக்காலத்தில் திருமாலிருங்குன்றத்தில் கண்ணன், பலராமன் ஆகிய இருவர் திருவுருவங்களும் சேர்ந்து இருந்தன என்கிறது பரிபாடல். ''பொன் புனை உடுக்கையோன் புணர்ந்து அமர்நிலையே நினைமின்''[45] என்பது பரிபாடல். ஆனால் இன்று பலராமனும் கண்ணனும் ஒன்று சேர்ந்த கோலம் அங்கு இல்லை. சங்க காலத்தில் பலராமன் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தமை, சிவன், திருமால், முருகன் ஆகியவர்களோடு அவனையும் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனுக்கு ஒப்பாக நக்கீரர் சொல்வது கொண்டு அறியலாம்.[46]

**பேறும் ஆறும் :**

இறைவனே வீடுபேற்றினை நல்குபவன்; அவனே பேறு; அவனே ஆறு என்பது வைணவர் தெளிவு. இக்கருத்து,

''நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்''47

என்னும் அடிகளில் இனிது அமைந்துள்ளது.

**விழாக்கள் :**

திருமால் திருவோணத்தில் தோன்றியவன் என்பது மரபு.

'நின்ற மராமரம் ஏழும் சாய்த்தாய் நீ பிறந்த திருவோணம்
இன்று நீராட வேண்டும் எம்பிரான் ஓடாதே வாராய்'
(பெரியாழ்வார் 2:4:2)

என்றும்,

'ஆண் ஒப்பார் இவன் நேரில்லை காண்திரு
வோணத்தான் உலகாளும் என்பார்களே' (பெரியாழ்வார்
1:1:3)

என்றும் பெரியாழ்வார் கூறுவர். அந்நாளினை மதுரைமக்கள் நன்னாளாகக் கொண்டு விழா எடுத்து மகிழ்ந்துள்ளனர். அவ்விழாவின் கூறாக, மறவர்கள் யானைகளைப் போர் செய்ய ஏவிக் கண்டு களித்துள்ளனர் என்பது மதுரைக்காஞ்சியால் தெரியவருகின்றது (மதுரைக்காஞ்சி 590-599). இவ்வாறு குறித்த நாளிலன்றித் துன்புற்ற காலத்தில், காலங்கருதாமல் திருமாலை வழிபடும் நிலை இருந்தது என்பதைக் கண்ணகியின் வருத்தங் கண்டு ஆயர் பாடியில் திருமாலைப் பரவும் ஆய்ச்சியர்கள் செயலால் அறியலாம்.

**தத்துவ வெளிச்சம் :**

உலகத் தோற்றம் குறித்துப் பேசுவோர் அதற்குக் காரணங்களாக இருப்பனவற்றைத் தத்துவங்கள் என்பர்.

சைவர் உலகம் முப்பத்தாறு தத்துவங்களால் ஆகியது என்பர். உலகம் இருபத்துநான்கு தத்துவங்களால் ஆகியது என்பது வைணவர் கோட்பாடு. மேலும் இருபத்தைந்தாவது தத்துவம் உயிர் என்பதும் இருபத்தாறாவது தத்துவம் இறைவன் என்பதும் அவர்தம் கருத்து.

நிலம் முதலாகிய ஐந்து பருப்பொருள்கள், மெய் முதலாகிய ஐந்து அறிகருவிகள், வாய்முதலாகிய ஐந்து தொழிற்

கருவிகள், சுவை முதலாகிய ஐந்து நுண்ணிய பொருள்கள் ஆகிய இருபதோடு மனம், முனைப்பு (அகங்காரம்), மான் (மஹான்), விளக்கமில் பகுதி (அவ்யக்தம்) என்னும் நான்கும் சேர்ந்து தத்துவம் இருபத்து நான்காகும்.

இத்தத்துவங்களின் தெளிவான விளக்கம் இல்லையெனினும் இவை பற்றிய குறிப்பு நல்லெழுநியார் பாட்டில் காணப்படுகின் றது. அதில் ஐந்து நுண்ணிய பொருள்கள், ஐந்து அறிகருவிகள், ஐந்து பருப்பொருள்கள், மூலப் பகுதி ஆகிய பதினாறு தத்து வங்கள் தெளிவாகக் குறிக்கப்பட்டிருக்கின்றன. எவரும் தத்து வங்கள் பதினாறு என்று சொல்வதில்லை. எனவே, ஐந்து அறி கருவிகளும் குறிக்கப்பட்டிருப்பதால் அவற்றோடு தொடர் புடைய ஐந்து தொழிற்கருவிகளையும், மூலப்பகுதி சுட்டப்பட் டிருப்பதால் அதன் விகுதிகளாகிய (காரியமாகிய) மான், முனைப்பு, மனம் ஆகியவையும் குறிப்பாகச் சுட்டப்படுவதாகக் கொள்ள லாம். அவ்வாறு கொள்ளும்போது வைணவ சமயத்தார் சுட்டும் இருபத்து நான்கு தத்துவங்களும் இடம் பெற்றுள்ளதாக கொள்ளலாம்.

> ''சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு
> அவையும் நீயே, அடுபோர் அண்ணால்!
> அவைஅவை கொள்ளும் கருவியும் நீயே;
>
> ------------------------------------------
>
> ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே;
> அதனால், நின் மருங்கின்று மூவேழ் உலகமும்
> மூலமும், அறனும், முதன்மையின் இகந்த
> காலமும், விசும்பும், காற்றொடு கனலும்''[48]

என்பதே அப்பகுதி. இதனால் சங்க காலத்திலேயே வைணவத் தில் தத்துவக் கோட்பாடு வளர்ந்தமை அறியலாகும்.

**சமயத் தென்றல் :**

நக்கீரனார் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனின் ஆற்றலுக்குப் பலராமனையும், புகழுக்குத் திருமாலையும் உவமை யாகக் காட்டுகிறார். ஆனால் அவரோ முருகன் மீது பேரன்பு கொண்டவர். கடுவன் இளவெயினனார் இரு பரிபாடல்கள் திருமாலைக் குறித்தும் ஒரு பாடல் செவ்வேள் மீதும் புனைந்

துள்ளமை அவர் சமயப்பூசல் மருவாத தூய உள்ளம் படைத்தவர் என்பதனைக் காட்டுகிறது. மருத்துவன் அச்சுதனார், கேசவனார் ஆகிய பெயர்கள் அப்பெயர்க்குரியோர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதனைக் காட்டுகின்றன. இவர்களுள் அச்சுதனார் திருமாலைப் பற்றிய பாட்டிற்கேயன்றிச் செவ்வேளைப் பற்றிய பாட்டிற்கும் இசையமைத்துள்ளார். மேலும், முருகக் கடவுளைப் பற்றிய 21-ஆம் பரிபாடலையும் யாத்துள்ளார். கேசவனார் முருகக் கடவுளுக்குரியதாகிய 14-ஆம் பரிபாடலைப் பாடியுள்ளார். இவற்றை நோக்கின் அக்காலத்தில் திருமால் நெறி நின்றோர் பிற தெய்வங்களையும் போற்றும் இயல்பினராய் இருந்தமை விளங்குகிறது. அந்நாளில் சமயம் புயலாய் மாறாது தென்றலாய் உலவியுள்ளது.

## கலந்துரையாடல்

**இராமநாசன் :**

ஆசிரியன் கூற்றாக அமையாமல் பாத்திரம் ஒன்றோடொன்று உரையாடுவதுபோல (Dialogue) அமைப்பது நாடகக் கூறாகும். கருத்தை எடுத்துச் சொல்லும் முறையில் புலவர்கள் உணர்ச்சியுடன் புலப்படுத்தி இருப்பர். அதற்குச் சில பின்னணிக் கூறுகளும் அமைந்திருக்கும். இவை எல்லாம் நாடகக் கூறுகளே. காதல், வீரம் முதலிய உணர்ச்சிகளை வெளிப்படுத்தச் சில வழிகளைப் பின்பற்றி இருப்பர். கருத்தைப் புலப்படுத்தும் முறை, சுவையை உணர்த்தும் முறை, எல்லாம் இலக்கியத்தில் உண்டு. அவற்றுள் நாடகக் கூறு அமைந்திருக்கும்.

**திருமேனி :**

இலக்கியத்தில் நாடகக்கூறு பார்க்கும் எண்ணம் மேனாட்டுத் தாக்கத்தால்தான் வந்தது. கூத்தநூல் கிடைத்திருந்தால், இலக்கியத்தில் நாடகக்கூறு பார்க்கும் எண்ணம் தோன்றி இராது. நாடகத்தில் கருத்தை உணர்த்துதல், உரையாடுதல் எல்லாம் இடம் பெறும். அவையே நாடகம் ஆகா.

**அடிகளாசிரியர் :**

ஆய்வாளர் 'சங்க இலக்கியத்தில் நாடகக் கூறுகள்' என்னும் கட்டுரையில் இசையும் கூத்தும் விரவிய நாடகத்தையே கருத்தில்

கொண்டுள்ளார். 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம்' கலிக்கும் பரிபாடலுக்கும் உரியது என்பதைக் கருத்தில் கொண்டு விளக்கவில்லை. கலிப் பாவில் உறழ்கலி என்ற ஒரு வகை உண்டு. அஃது இருவர் உரையாடும் போக்கில் அமைந்திருக்கும். அது நாடகக் கூறு நிறைந்தது.

**திருமேனி :**

நாடகம் என்பதற்குப் புனைந்துரை வழக்கு என்றே பொருள். வேத்தியலில் புனைந்துரை வரும். பொதுவியல் என்பது எல்லார்க்கும் பொதுவானது. ஆகவே நாடகம் என்பது வேறு பொருள் உடையது.

**இரா. சாரங்கபாணி :**

தொல்காப்பியர் கலிக்கும் பரிபாட்டுக்கும் நாடக வழக்கும் உரியது என்று கூறுகிறார். எனவே, சங்க இலக்கியப் பாடல் களில் நாடக வழக்கு உண்டு என்று தெரிகிறது. நாடக வழக்கு என்பதற்குப் புனைந்துரை வழக்கு எனப் பொருள் கொள்ளினும், அல்லது இளம்பூரணர் கூறுவது போல உயர்ந்த செய்திகளைத் தொகுத்துத் தருதல் எனப் பொருள் கொள்ளினும், அல்லது வேறு எப்பொருள் கொள்ளினும், அக்கருத்தினைச் சங்க இலக் கியத்தில் உள்ள நாடக வழக்காகக் காட்டலாம்.

''அளிநிலை பொறாது அமரிய முகத்தள்''

என்னும் அகநானூற்றுப் பாடல் முழுவதும் மெய்ப்பாடு சுட்டும் அருமையான நாடகக் கூறு அமைந்த பாடல். ஆகவே, சங்க இலக்கியப் பாடல்களில் நாடகக் கூறு இல்லை என்று சொல்ல முடியாது.

**முருகேசன் :**

இயற்பாடலில் நாடகத்தைத் தேடுவது திரிபுணர்ச்சி என்று கட்டுரையாளர் கூறுவது பொருந்தாது. கம்பராமாயணத்தில் நாடகக் கூறுகள் என்று ஆய்வு நிகழ்த்துகின்றனர். ஒரு காட்சி யைக் கண்டு மகிழ்வது நாடக இயல்பு. நாடகத்தில் காட்சியைக் கண்டு மகிழ்வதுபோல, இலக்கியத்திலும் புலவன் படைத்த எழில் ஓவியமான காட்சியைக் கண்டு மகிழ்ந்தால் அதுவும்

நாடகம் ஆகிவிடுமல்லவா? இலக்கியத்திலும் நாடகத்தில் அமைவது போன்ற தனிப் பேச்சுக்கள் (dramatic monologue) இடம் பெறுகின்றன.

**விருத்தாசலம் :**

நாடகம் என்பதற்குப் புனைந்துரை என்று பொருள் கொள்வது பொருந்தாது. கோவை இலக்கியமெல்லாம் நாடக நிகழ்ச்சிகளைத் தொடர்ச்சியாகக் கூறுவன.

''செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை''

இக்குறள் நாடக அமைப்புடையது. பாடல்களில் முதல், கருப் பொருள்களின் புனைவுகள் நாடகப் பின்னணிபோல் அமைந் திருக்கும்.

''அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவில்
எந்தையும் உடையேம், எம்குன்றும் பிறர்கொளார்''

எனப் பாரிமகளிர் பாடிய பாட்டு நாடகக் கூறு உடையது. இயலும் இசையும் கலந்தது நாடகம். ஆதலின், நாடகத்தில் இயற் கூறுகளும் இசைக் கூறுகளும் இருக்கும்.

**சண்முக சுப்பிரமணியன் :**

மாயோன் மேய காடுறை உலகமும் என்ற நூற்பா போதிய வெளிச்சம் காட்டவில்லை என்று ஆய்வாளர் கூறுவர். ஆனால், இறைவனே ஒளி வடிவமாகத்தான் இருக்கிறான். மணிவாசகர் 'சோதியாய்த் தோன்றும் உருவமே' என்று பிறவா யாக்கைப் பெரியோனை விளிக்கிறார்.

**கிருஷ்ணமூர்த்தி :**

சமயத் தொடர்பான பல சிக்கல்களைத் தீர்ப்பதற்கு வரலாற்று நெறி ஆராய்ச்சி தேவை. சமயக் கலப்பு எப்பொழுது ஏற்பட்டது? கலப்பில்லாத காலத்தில் அதன் தனித்தன்மை என்ன? என்பவற்றை எல்லாம் விளக்க வேண்டும். இப்பொழுது நாம் பண்டை வரலாறு என்று குறிப்பதே பின்னைய வரலாறு தான். அதற்கு முந்திய வரலாற்றை ஆராய்ந்தால் பல திரா

விடக் கூறுகளைக் காண முடியும். மத்திய ஆசியாவில் பல திராவிடக் கூறுகள் காணப்படுகின்றன. இவற்றை எல்லாம் அறிவதற்குப் புத்தர் காலத்திற்கு முன்னைய வரலாறுகளை உணர்தல் வேண்டும். தமிழ் மொழியில் உள்ள வாக்கிய அமைப்பு வடநாட்டு மொழிகளில் அப்படியே காணப்படுகின்றது. இங் குள்ள தெய்வமே வடநாட்டில் வெவ்வேறு பெயர்களில் வழங்கு கிறது. மத்திய ஆசியாவின் வரலாற்றை ஆராய்ந்தால் நம் சமயத்தோடு தொடர்புடைய பல ஒப்புமைகளைக் காணமுடியும், நம்முடைய இலக்கியங்களை எல்லாம் கால வரிசைப்படி ஆராய வேண்டும். சொல்லாட்சி, மக்கள் நம்பிக்கை, கொள்கைகள், சமயம் முதலியவற்றை ஆராய்ந்து பார்த்தால் பெரும்பாலான கொள்கைகள் நம் நாட்டிற்கு உரியவை என்றும், கலப்பு சிறு பான்மையே என்றும் அறியலாம்.

**சம்பந்தம் :**

சிவன், திருமால், முருகன் முதலிய தெய்வங்கள் வீற் றிருக்கும் இடத்தை நோக்கினால் முதலில் வந்தவர் முதல் இடத் தையும் அடுத்தவர் அடுத்த இடத்தையும் பிடித்துக் கொண்டது போல் தெரிகிறது. புலித்தோலையும் பாம்பையும் அணிந்த சிவன் பழமையான உயர்ந்த கடவுள். உயர்ந்த சிவபெருமான் உயர்ந்த கைலாய மலையைப் பிடித்துக் கொண்டார். பொலம் பூ வாடை, சங்கு, சக்கரம் அணிந்த திருமால் அடுத்த நிலையில் வேங்கட மலையைக் கைப்பற்றினார். முருகன் குன்றுதோறாடல் என்பதற்கு ஏற்ப அடுத்த சிறிய மலையைத் தமக்கு இருப்பிட மாகக் கொண்டார் என்று தோன்றுகிறது.

**ஞான சுந்தரம் :**

சிவன் என்ற சொல் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. மலைக்குரியவனாக முருகனையே குறிப்பிட்டுள்ளனர். 'பழமுதிர் சோலை மலைகிழவோனே' எனத் திருமுருகாற்றுப்படை கூறுதல் காணலாம். வடவேங்கடம் தென்குமரி இடைப்பட்ட தமிழக எல்லையில் சிவன் தமிழ்க் கடவுளாக இருந்தால் இங்கேயே இடம் இருந்திருக்கும். சிவனுக்குரிய இடமாகக் கைலாய மலை குறிக்கப் பெறுதலின், அவர் வட நாட்டிலிருந்து வந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. குறிஞ்சி முதலிய எந்நிலத்திற்கும் உரிமை

இல்லாத சிவன், எங்ஙனம் தமிழ்நாட்டிற்கு முழுமுதற் கடவுள் ஆதல் இயலும்?

**முடிவுரை :**

சங்க இலக்கியத்தில் நாடகக் கூறுகள் என்னும் ஆய்வுக் கட்டுரை அறிஞர் பலருடைய திறனாய்விற்கு இடமாயிருந்தது. கட்டுரையாசிரியர் கூத்தநூலிற் கண்ட சிறப்புடைய நாடகக் கூறுகள் அனைத்தும் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை எனத் தெரிவித்தார். அவர் எண்ணியவாறு நாடகத்தின் சிறப்புக் கூறுகள் இயற்றமிழ்ப் பாவில் இடம் பெறுமென எதிர்பார்த்த லாகாது.

சங்க இலக்கியத்தில் திருமால் நெறி என்னும் கட்டுரை, பரிபாடல் என்னும் தொகை நூலில் திருமால் வழிபாடு பற்றிய செய்திகளைத் தொகுத்து விளக்கியது. எனினும், சிவவழிபாடு வடநாட்டிலிருந்து வந்தது என இவ்வாராய்ச்சியாளர் கூறுவது, சங்க இலக்கியத்தில் சிவவழிபாடு முதன்மை உடையதாக இடம் பெற்றிருத்தலுக்கும் மொகஞ்சதாரோ, ஆரப்பா முதலிய இடங்களில் நிகழ்ந்த அகழ்வாராய்ச்சியின் பயனாகச் சிவ வழி பாடே தொன்மை உடையது என வரலாற்று ஆராய்ச்சி யாளர் கண்ட முடிவிற்கும் முரணாக அமைந்துள்ளது.

## பின் குறிப்பு

1. தொல்காப்பியம், அகத்திணையியல் நூற்பா — 5.
2. கா. சுப்பிரமணிய பிள்ளை, தமிழர் சமயம், ப. 58
3. தேவநேயன், தமிழர் மதம், பக்கம் 29 — 33.
4. சிவன் : ''பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
   நீல மணிமிடற்று ஒருவன் போல'' —புறம் 91.

   சேயோன் : ''பிணிமுக ஊர்தி, ஒண் செய்யோனும்'' — '' 56.

   இந்திரன் : ''அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரம் கண் ஏய்க்கும்
   கலங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்''
   —கலி. 105—15—16

   பலராமன் : ''நீயே, வளையொடு புரையும் வாலியோற்கவன்
   இளையன் என்போர்க் கிளையை ஆதலும்'' —பரி. 2-20-21.

   கொற்றவை : ''மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
   கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே''
   —தொல். புறத்திணை—4

5. சிலம்பு 2—47—48 ; 6. சிலம்பு 5—168. 7. சிலம்பு 5—169.

* "சேயோன் வணக்கத்தினின்று சிவ மதமும், மாயோன் வணக்கத்தினின்று திருமால் மதமும் தோன்றின" —தேவநேயன், தமிழர் மதம் பக்—37.

8. புறம் — 166.
9. கீர்த்தித் திருவகவல் — 146.
10. போற்றித் திருவகவல் — 167.
11. திருநாவுக்கரசர் தேவாரம் 6 : திருமறைக்காடு : 5.
12. பெருமாள் திருமொழி — 1 : 4.
13. With the rise to popularity of Sivan and Visnu, the old Tamil Gods were either amalgamated with the newer ones or otherwise assimlated with them or practically died out. Thus Mayon easily became Krisna specifically as in the Malabar country Visnu generally in other places.
    — History of the Tamils, P. T. Srinivasa Iyengar, Page 612.
14. பரிபாடல் — 15.
15. பெரும்பாணாற்றுப்படை 371—374.
16. பரி. 3— 31—32. 17. முல்லைப்பாட்டு, 2. 18. பரி. 1—8.
19. பரி. 3—90. 20. முல்லைப்பாட்டு —3, 21. பெரும்பா 40—2—405.
22. பரி. 4—70. 23. பரி. 3—83. 24. பரி. 3—3 : பெரு. 29—30. பரி. 4—6—7 பரி. 1. 6, 7. 25. பரி. 1—9. 26. பரி. 13—29.
27. முல்லைப்பாட்டு. 1—2.
28. பரிபாடல் 13 : 12—13.
29. பரி. 13 : 26—29.
30. பரிபாடல் 3 : 81—82.
31. ,, 3—72.
32. ,, 2 : 16—17.
33. பரிபாடல் 4—12—17.
34. ,, 2—20—21.
35. பரிபாடல் 3—31, 32.
36. பரிபாடல் திரட்டு 1 : 64—66.
37. புறம் 378.
38. பரிபாடல் 3—63—68.
39. பரிபாடல் 4 : 67—70.
40. ,, 13—37.
41. திருவாய்மொழி 10 , 10 : 1.
42. பரி. 4—56.
43. முதல் திருவந்தாதி 44.
44. பரிபாடல் 4—62.
45. ,, 15—28.
46. புறம் 56.
47. பரிபாடல் 15 : 15—16.
48. பரிபாடல் 13 : 14—25.

